ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

பரமகாருணிகரான

பிள்ளைலோகார்யஜீய ரருளிச்செய்த

# யதீந்த்ரப்ரவணப்ரபாவம்.




இஃது

திருவழுந்தூர் - உ. வே. ஸ்ரீமான் [illegible] ராமாநுஜாசாரியரால்

பரிசோதிக்கப்பட்டு,

---

கோயில் கந்தாடை அண்ணன் ஸ்வாமிகளின் திருவடி ஸம்பந்தியும்

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய புஸ்தகசாலாதிகாரியுமாகிய

கா. வெ திருக்கச்சிநம்பி தாஸரால்

சென்னை

ஆனந்தா பிரஸ்ஸில் பதிப்பிக்கப்பட்டது.

---

1907.

இதன் விலை ரூபா க.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: .

சென்னை திருவல்லிக்கேணி துளசிங்கப் பெருமாள்கோயில் தெருவு 3( கதவிலக்கமுள்ள இடத்தில் ஸ்தாபித்திருக்கும் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய சாலையில் கிடைக்கும் ஸ்ரீகோசங்கள்.

## தமிழ் ஸ்ரீகோசங்கள.

| | ரூ. அ |
|---|---|
| குருபரம்பராப்ரபாவம் ஆறாயிரப்படி .. .. .. .. | உ |
| யதீந்த்ரப்ரவண ப்ரபாவமென்னும் ஸ்ரீ மணவாள மாமுனிகள் வைபவம். .. .. | க |
| ஷை இரண்டுஞ்சேர்ந்த ஸம்புடம் - I .. .. .. .. | ௩ |
| குருபரம்பரை மூவாயிரப்படி .. .. .. .. | ௦ |
| விலக்ஷணமோக்ஷாதிகாரி நிர்ணயம் காலிகோ பயிண்டு .. .. | ௦ |
| ஷை காயித பயிண்டு .. .. .. .. | ௦ |
| நாலாயிர திவ்யப்ரபந்தம் .. .. .. .. | உ |
| அஷ்டாதச ரஹஸ்யம் .. .. .. .. | க |
| பஞ்ச ரஹஸ்யம் .. .. .. .. .. | ௦ ௮ |
| நித்யாநுஸந்தானம் முன்னடி பின்னடியுடன் .. .. .. | ௦ |
| திருமந்த்ரார்த்தம் அரும்பதத்துடன் | க |
| திருமந்த்ரார்த்தத்துக்கு எம்பாவையங்கார் தொட்டாசாரியர் பிள்ளை லோகம்ஜீயா இவர்கள செய்தருளின அரும்பத விளக்கங்களும் ப்ரமாணத்திரட்டும திருமந்த்ர ப்ரகரணத்துக்குமாத்திரம். .. | ௩ |
| திருக்கச்சிநம்பி பரபாவம், வசனம் .. .. .. .. | ௦ |
| திருப்பாவை மூவாயிரப்படி வ்யாக்யாநம் .. .. .. | க |
| திருவாய்மொழி பதவுரை .. .. .. .. | உ |
| அஷ்டப்ரபந்தம் உரை .. .. .. .. | க |
| ஸப்தகாதை வ்யாக்யாநம் .. .. .. .. | ௦ |
| சரமோபாய நிர்ணயம் .. .. .. .. | ௦ |

## தெலுங்கெழுத்து ஸ்ரீகோசங்கள்.

| | |
|---|---|
| குருபரம்பரை ஆறாயிரப்படி ப்ரமாணத்திரட்டுடன் .. .. .. | ௩ |
| திருப்பாவை மூவாயிரப்படி வ்யாக்யாநம் .. .. .. | க |

இங்ஙனம்,

கா. வெ. திருக்கச்சிநம்பிதாஸன்,

ஸ்ரீவைஷ்ணவ சம்ப்ரதாய புஸ்தகசாலை,

திருவல்லிக்கேணி




ஸ்ரீமதேராமாநுஜாயநம:

ஸௌம்யஜாமாத்ருமுநயே நம:

பிள்ளைலோகார்யஜீயரருளிச்செய்த

# யதீந்த்ரப்ரவணப்ரபாவம்.

குலநாதனெங்கண்மணவாளயோகிகுணக்கடலைப்
பலநாளுமண்டிப்பருகிக்களித்திந்தப்பாரினுள்ளே
உலகாரியன்முனிமேகமிந்நாளென்னுள்ளங்குளிர
நலமான்சீர்மமழைநாளும்பொழிந்ததிந்நிலத்தே.

## அவதாரிகை.

ஸ்ரீய:பதியான ஸர்வேச்வரன் ஸம்ஸாரிசேதநோஜ்ஜீவநகாமனாய்க் கொண்டு கலிகாலத்திலே பராங்குச பரகால பட்டநாதாதிகளான ஆழ்வார்களையும் நாத யாமுந யதிவராதிகளான ஆசார்யர்களையும் அவதரிப்பித்தருளி தந்முகேந லோகத்தை ரக்ஷித்தருளினபடியைப் பின்புள்ளாருமறிந்து உஜ்ஜீவிக்கும்படி முன்புள்ள ஆசார்யர்கள் குருபரம்பராப்ரபாவப்ரமுகங்களான ப்ரபந்தங்களாலே ப்ரதிபாதித்து உபகரித்தருளினார்கள், அவ்வளவன்றிக்கே விசேஷித்து, அசேஷசிதசித்வஸ்துசேஷியான அந்த ஸ்ரீய:பதியினுடைய நியோகத்தாலே சேஷாவதாரமாக வவதரித்து பஹுமுகமான தம்முடைய உக்த்யநுஷ்டாநங்களாலே ஸர்வசேதநரையும் ரக்ஷித்துப்போந்த யதீந்த்ரப்ரவணரான ஜீயருடைய ப்ரபாவத்தை அனைவருமறியும்படி அஸ்மதாசார்யருடைய ப்ரஸாதமடியாகவும், நந்தாடை நாயனுடைய ப்ரசாதமடியாகவும் அறிந்தவளவை ப்ரதிபாதிக்கிறது-இப்ரபந்தத்தாலே. இதுதான், பூர்வோக்தமான ப்ரபந்தங்களுக்கும் சேஷமாயிருக்கும். இனி இவ்வைபவங்களெல்லாவற்றையும் உஜ்ஜ்வலமாக்கும்படியான ஸத்ஸம்ப்ரதாயஸம்யுக்ததயாவந்த வைபவத்தை முந்துறப்பேசர்

நின்றுகொண்டு, அநந்தரம் அவருடைய அத்ப்புதமான அவதாரசரிதங்களையெல்லாம் அடைவேபேசித் தலைக்கட்டுவதான விதில் (శ్రీవత్సచిహ్నభవతశ్చరణారవిన్ద సేవామృతైకరసికాన్ కరుణాసుపూర్ణాన్ । భట్టార్యవర్యనిగమాన్తమునీన్ద్రలోకగుర్వాదిదేశికవరాన్ శరణం ప్రపద్యే) (ஸ்ரீவத்ஸசிஹ்நபவதஶ்சரணாரவிந்த ஸேவாம்ருதைகரஸிகாந்கருணாஸுபூர்ணாந் - பட்டார்யவர்ய நிகமாந்த முநீந்த்ர லோக குர்வாதிதேசிகவராந் ஶரணம்ப்ரபத்யே) என்று சுத்தஸம்ப்ரதாய ப்ரவர்த்தகத்வம் நஞ்சீயர்க்கும் நம்பிள்ளைக்குமேயுள்ள தொன்றாகை யாலே, அந்தநம்பிள்ளை யடியாகவந்த ஆசார்யர்களுடைய சுத்த ஸம்ப்ர தாய பரம்பராந்வயமானது இவர்க்கு வந்தவாற்றை ப்ரதிபாதிப்பதாக, ப்ர தமம் பிள்ளைலோகாசார்யருடைய வைபவத்தை ப்ரதிபாதிக்கிறது.

எங்ஙனேயென்னில்; (கோதிலுலகாசரியன் கூரகுலோத்தமதாதர், தீதில்திருமலை யாழ்வார் செழுங்குரவை மணவாளன், ஓதரியபுகழ்நாவீறுடையபிரான் றாதருடன், போதமணவாள முனிபொன்னடிகள் போற்றுவனே) என்கிறபடியே ஆழ்வாருடைய அவதாரமென்னலாம் படியான வைபவத்தையுடைய நம்பிள்ளை, ஒருநாள் நித்யப்படி காலக்ஷேபம் நிறைவேறி மத்யாஹ்நகாலத்திலே தனியே யெழுந்தருளியிருக்க, திருவடிகள் ஸம்பந்தியான வடக்குத் திருவீதிப் பிள்ளைத் திருத்தாயாராயிருக்கிற அம்மிதெண்டன் ஸமர்ப்பித்து நிற்க, அவளைக் கடாக்ஷித்தருளி, "உம்முடைய க்ர்ஹயோக க்ஷேமங்கள் என்" என்று கேட்டருள; என்ன விண்ணப்பஞ் செய்யப்போகிறேன், ஒருபேய்ப் பிள்ளையாயிருக்கிறதே யென்ன; அதெப்படியென்ன; ஒருபெண்ணை விவாஹஞ்செய்வித்தீரே அந்தப்பெண் பெரியவளானாள்,ஸஹசயநகல்யாணம்போலேபண்ணிசயிக்கவிட, உடனே பிள்ளை முறையிட, அதென்னென்று எல்லாரும் உள்ளேபுக உடம்பெல்லாம் புழுக்கநீர் சொரிய விம்மி யழுதுநிற்க இதேது பிள்ளாயென்று கேட்டேன், அம்மா! இது ஒரு ஆடுகிற பாம்பாயிருந்தது பயப்பட்டேன், இன்னும் அப்படியேயிருக்கிறது என்ன; இதுவுமொரு புதுமையோ வென்று பெண்ணை அப்பாலே போகவிட்டேன், பின்னுமொருநாள் அந்தப்படியே யாச்சுது என்று வ்யாகுலப்பட; பிள்ளையும் சிரித்தருளி அதற்கு உமக்கென்னென்ன, இப்படி யருளிச்செய்யுமோ, பெண் வாழவேண்டாவோ, வம்சத்திற்குப்பிள்ளை வேண்டாவோவென்று திருவடிகளிலே விழுந்து சோகிக்க; அம்மீ! எழுந்திரு, நீ சோகிக்கவேண்டா, மறுட்டுப் பெண் றுதுஸ்நாதையாய் வருகிறபோது இதுவழியா யழைத்துவா வென்று அருளிச்செய்துவிட, அவளும் அப்படியே யழைத்து வந்துவிட திருவோலகத்திலே பிள்ளையும் அநதப்பெண்ணைக் கிட்டவழைத்தருளி அவள் வயிற்றைத் தம் திருக்கைகளாலே ஸ்பர்சித்து, "நம்மைப்போலிருப்பானொருபிள்ளையைப் பெறக்கடவாய்" என்று ஆசீர்வாதம் பண்ணி

விட்டு, அற்றைநாளாயிற்றுபாடு வடக்குத்திருவீதிப்பிள்ளையை யழைத்தருளி, உம்முடைய பயமும் தீர்ந்தது, விஹிதவிஷய வைராக்கியத்திற்குங் குறைவு வாராது, ஆனால், லோகமர்யாதைக்கு நாம் சொன்னதற்காக இன்றிராக் கூடியிரும்" என்றருளிச்செய்ய; அப்படியே கூடியிருந்தவளவில் ஆச்சியும் கர்பந்தரித்து லோகவிலக்ஷணமாய், (తతశ్చ ద్వాదశే మాసే) (ததஶ்சத்வாதஶே மாஸே) என்கிறபடியே பன்னிரண்டாம்மாஸத்திலே ஐப்பசியில் திருவோண நக்ஷத்ரத்திலே பிள்ளை திருவவதரிக்க, அவருக்கு பன்னிரண்டாம்நாள் நாமகரணத்திலே, "லோகாசார்யர் பிள்ளை" என்று நம்பிள்ளையுடைய திருநாமஞ்சாத்தி வளர்ந்துவந்து அப்தபூர்த்தி உத்ஸவத்திற்கு பெருமாளை ஸேவிப்பிக்கத்தக்கதாக நம்பிள்ளை முதலான பெரியோர்களெல்லாரும் மங்களவாத்தியங்களுடனே திருப்பல்லக்கிலே யெழுந்தருளப்பண்ணுவித்துக் கொண்டு சென்றுஸேவிக்க நம்பெருமாளும் போரஉகந்தருளி தீர்த்தம், சடகோபன், சந்தனம், ஸுகந்தம், திருமாலை ப்ரஸாதங்களும், பட்டுச் சிற்றாடையும் ப்ரஸாதித்தருளி, நம்பிள்ளையையும் அர்ச்சகமுகேந, "உம்மைப்போல வொருபிள்ளை கொடுத்தீரே, இனி நம்மைப்போலே யொரு பிள்ளை கொடும்" என்று நியமிக்க, (நாயன்றேநாயன்றே) என்று ஓமறைய அப்படியே அழகியமணவாளப்பெருமாள் நாயனார் திருவவதாரஞ் செய்தருளினார்.

இப்படிப்பட்ட பெருமையையுடையவருடைய அருளாலே யவதரித்தவராய் அவதாரவிசேஷமாயிருந்துள்ள பிள்ளைலோகாசார்யரும், அவருடைய அருளே தாரகமாகவளர்ந்த அவர்திருத்தம்பியாரான அழகிய மணவாளபெருமாள் நாயனாரும், தத்வரஹஸ்யந்தொடங்கி அநேகப்ரபந்தங்கள் இட்டருளி ஸ்வரூபவாத்தகராய் (தம்பியுடன் றூசரதியாறனுஞ் சங்கவண்ண, நம்பியுடன் பின்னடந்துவந்தானும், பொங்குபுன, லோங்கு மூடும்பையுலகாரியனுமறந, தாங்கு மணவாளனுமேதான்) என்னும்படி ஸௌப்ராத்ரத்தையுடையரா யெழுந்தருளியிருக்கிறகாலத்திலே ஸர்வஜ்ஞரான பிள்ளைலோகாசாரியர் திருவடிகளிலே ஸாத்விகராயிருப்பார்பலரும் ஆச்ரயித்து ஸத்ஸம்பந்தத்தை யுடையராய், "సమ్బన్ధాత్స్వాత్మలాభః" (ஸம்பந்தாத்ஸ்வாத்மலாப:) என்று ஆநந்தநிர்ப்பரரா யிருந்தார்கள்.

அவர்களில், கூரகுலோத்தமதாஸநாயனும், மணப்பாக்கத்து நம்பியும், கொல்லிகாவலதாஸரான அழகியமணவாளப் பெருமாள்பிள்ளையும், கோட்டூரிலண்ணரும், விளாஞ்சோலைப் பிள்ளையும், ஸாத்விகைகளில் திருமலையாழ்வார் திருத்தாயார் தொடக்கமான சில அம்மையார்களும், திருவடிகளிலே ஆச்ரயித்தவன்று தொடங்கி அந்தரங்கஸேவை பண்ணிக் கொண்டு அந்தேவாஸிகளாய் அகலாமலிருந்தார்கள். இப்படி இவர்களாலே

ஶேஷ்யமாநாராயிருக்கிறபிள்ளை, பின்பு தம்முடைய க்ர்பையாலே இவர்களை யழைத்து அந்தரங்கமாகத் திருவாய்மொழியாகிற திவ்யப்ரபந்தத்துக்கு, ஆறாயிரப்படி, ஒன்பதினாயிரப்படி, இருபத்துநாலாயிரப்படி, முப்பத்தாறா யிரப்படி என்கிற வ்யாக்யாநங்கள் ப்ரவர்த்தமானதற்குக் காரணம் இன்ன படியும் இன்னபடியுமென்று அருளிச்செய்தருளினார்.

அதாவது - த்ராவிடவேதஸாகரமான திருவாய்மொழிக்கு நிபுண ராய் பூர்விகராயுள்ளா ரனேகர் ஸ்வஸ்வபுத்தி விஸ்தாரா நுகுணமாக லக்ஷ ணங்களுக்கு படிமாவென்றுகந்து வயாக்யானமிட்டு வைத்தார்கள். அவ் வளவேயன்றிக்கே, இவற்றினுடைய * ஸஹஸ்ராசாகோபநிஷத் ஸமாகமத் வம் ப்ரகடிதமாம்படி ஒரு ப்ரபந்த மிட்டருளும்படிக்கு திருக்குருகைப் பிரான் பிள்ளானை எம்பெருமானார் கடாக்ஷிக்க, அவரும் அவதாரவிசேஷ மென்னும்படி ஆழ்வார் திருவுள்ளத்தை அடியொற்றிக்கொண்டு ஆறாயிரப் படியென்கிற வ்யாக்யாநஞ் செய்தருளினார்.

பின்பு, அவரும் மற்றுமுள்ள பெரியோர்களும் இன்னம் இவ்வர்த்த விசேஷங்களுங்கூட்டி அனைவர்க்கும் ஸங்க்ரஹமாக அர்த்தமாம்படி ஒன்ப தினாயிரப்படியாக ஒரு ப்ரபந்தமிட்டுவையுமென்று பட்டருக்கு நியமித்து வைக்க; அவரும் அத்தைத் திருவுள்ளத்திலே வைத்துக்கொண்டு மாதவ ரென்னும் திருநாமத்தையுடையராய், ஸகலசாஸ்த்ர வித்தமராய், ஸங்ய ஸித்து வேதாந்தியென்னுந திருநாமத்தையுடையராய, பின்பு பட்டர் திரு வடிகளிலே ஆச்ரயித்து ஸர்வஜ்ஞராய், திருவடிகளுக்கு அந்தரங்கராயிரு க்க; இவரை, பட்டர் "நம்ஜீயர்" என்று அபிமாநித்துப் பெருமாளைத் திருவடித்தொழ எழுந்தருள, பின்னும் சிலஜீயர்களும் ஸ்ரீவைஷ்ணவர் களும் நிறைந்துநிற்க, பெருமாள் உகந்தருளி அர்ச்சகமுகேந இவரைக் கையைப்பிடித்து, "வாரீர்நஞ்சீயரே என்று அருள்பாடிட்டருளி பட்டர் திருவுள்ளப்படிக்கு ஒன்பதினாயிரபபடி வயாக்யாநஞ் செய்யும்" என்று நிய மித்தருள ; ஆறாயிரப்படிக்கு கநகாபிஷேக மென்னும்படி ஒன்பதினாயிரப் படி செய்தருளினார். அன்று முதல் நஞ்சீயரென்று இதுவே திருநாமமா யிற்று.

பின்பு பட்டருக்கு ப்ராபயபூமி அணித்தாக நஞ்சீயர் சோகித்துச் சிந் தித்தபடி ;—நாம் வார்த்தக்யத்தையடைந்தோம், ஸ்வாமிபட்டருக்குச் சிறுவயஸ்ஸாகையாலே தர்சநஸ்த்திதிக்குக் குறைவில்லை, உத்தரோத் தரம் தழைக்கு மென்றிருந்தோம், அதுபோய் இப்படியாவதே ! என்று திருமுடிமோதி பட்டர் திருமுன்பே சென்று திருவடிகளைப் பிடித்துக் கொண்டு க்லேசிக்க; பட்டரும் அவரைக் கிட்டவழைத்தருளி, நீர் சோகிக்க வேண்டா, தர்சநப்ரவர்த்தகனாயிருப்பா னொருபிள்ளையைப் பெறுவீர் என்

றருளிச் செய்யக்கேட்டு ஜீயரும் ஸமாஹிதராய் திருவுத்தரீயத்தலைப்பை முடிந்துகொண்டு பட்டருடைய கைங்கர்யத்தை அதிவிஜ்ரும்பணமாக நடப்பித்தருளி, பின்பு ஒன்பதினாயிரப்படியை, இன்னம் இருபத்து நாலாயிரப்படி, முப்பத் தாறாயிரப்படி வ்யாக்யாநங்களுக்கு இடங்கொடுக்கத் தக்க அர்த்தபூர்த்தியுடனே பட்டோலை கொண்டுநிறைவேற்றி இத்தை நல்லவலேகத்திலே யேறியருளப்பண்ணி அலேகமுகமாகப்ரவர்த்திப்பிக்கத் திருவுள்ளமாய் நல்ல லேகரியை விசாரித்தருள ;

அவ்வளவிலே, "படுகை சக்ரவர்த்தித் திருமகன் கோயிலருகே குடியிருந்து அத்யந்தம் ஸத்வ நிஷ்டராய், பண்டித பாமர ஸாதாரணமாக எல்லாரும் ஆதரிக்கும்படியான வைபவத்தை யுடையராய், உபாதாநபரராய் தேவராஜ ரென்று ஒருவருண்டு, அவரையழைத்து அவருக்கு உபதேசித்து அவரைக்கொண்டு ஏறியருளப்பண்ணுவியும்" என்று ஸ்வப்நமாக ; இது ஆழ்வாருடைய நியமநமென்று உகந்தருளி, மறுநாள் இப்படியொருவருண்டோவென்று அருகுநிற்கிற ஸ்ரீவைஷ்ணவர்களைக்கேட்டருள; அவர்களும் உண்டென்று உடனே தேவராஜரை யழைத்துவந்துவிட, அவரை ப்ரதமத்திலே (ஆமுதல்வனிவன்) என்று கடாக்ஷித்தருளி ஒரு முறியைக்கொடுத்து எழுத்து எழுதிக் காட்டுமென்ன ; அவரும், "நஞ்சீயர் திருவடிகளே சரணம், பட்டர் திருவடிகளே சரணம்" என்று எழுதக் கண்டருளியிருக்க, தேவராஜரும் திருவடிகளைப் பிடித்துக்கொண்டு க்ருபை பண்ணியருள வேணுமென்று விண்ணப்பஞ் செய்துகொள்ள; உகந்து க்ருபைபண்ணியருளி திருவாய்மொழியின் அர்த்தத்தை ஸங்க்ரஹேண ஸாதித்தருளி பட்டோலையையும் அலேகத்தையும் ஸாதித்தருளி நன்றாக ஏறியருளப்பண்ணிக்கொண்டு வாருமென்று விடைகொடுத்தருள ; அவரும் அக்கரைக்கு எழுந்தருளுவதாகப் புறப்பட ஆறுபெருவெள்ளப்பட, நீஞ்சவல்லவராகையாலே ஒருசாலைப்பிடித்துக்கொண்டு பட்டோலையையும் அலேகத்தையும் திருமுடியிலே கட்டிக்கொண்டுநீஞ்ச வெள்ளம் அதிகமாக போரத்தளர்ந்து பட்டோலையும் அலேகமும் திருப்பரிவட்டத்துடனே பெருக்கிலே விழுந்துவிட, இவர் பேர்ரக்லேசித்து நொந்து மெள்ள அக்கரைபட்டு "ஆசார்யாபசாரம் வந்ததே!" என்று விழுந்து புரள, இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் கண்டு தேற்றி இவரைத்திருமாளிகையிலே சேர்க்க, தேவிகளும்கண்டு அனுசோகித்து இருவரு முபவாஸமாயிருக்க, பெருமாளுக்குத் திருவாராதநமின்றிக்கே யிருக்கவொண்ணாது, என்று தேவிகளறிவிக்க அப்படியாவென்று கைங்கர்யத்தை நியமித்துத் தாமும் நீராடியருளித் திருமண்காப்புச் சாத்திக்கொண்டு திருவாராதநத்துக்கு எழுந்தருளி உபக்ரமிக்க, அலஸதையினாலே நித்ரைபகட்ட அவ்வளவிலே கோயிலாழ்வாரிலே யிருக்கிற ஸ்ரீரங்கராஜர் திருவாய்மலர்ந்தருளி, (வாரீர் தேவ

ராஜரே ! நீர்சோகிக்க வேண்டா, ஸம்புடமேறியருளப்பண்ணும், நாம் மூன்றிற்கிறோம்) என்று, "ஸ்ரீயப்பதியாய்" என்று தொடங்கி, "விசேஷ கடாக்ஷம்பண்ணி யருளினான்" என்னுமளவான ஒருசூர்ணையை ப்ரஸாதிக்கப் பெற்றுத்தெளிந்து சூர்ணை நெட்டுருவாயிருக்க அத்தை அப்போதே விகித்தருளி, திருவுள்ளம்மிகவுமுகந்து பெருமாளையமுதுசெய்தருளப் பண்ணிதாமுமமுதுசெய்தருளி ஸ்ரீகோச மேறியருளப்பண்ணத்தொடங்கி நிறைவேற்றி ஸ்ரீகோசத்தைக்கொண்டுபுறப்பட்டு ஜீயரை தண்டன் ஸமர்ப்பித்து ஸ்ரீகோசத்தையும் ஸமர்ப்பிக்க ; ஜீயரும், உகந்தருளி திருவுள்ளத்துக்கு உகப்பானபேரைக் கூட்டிக்கொண்டு கடாக்ஷித்தருள, தாம்ஸந்திக்த மாகவைத்த ஓரோவிடங்களிலுள்ள வாக்யங்களும் அர்த்தங்களும் நன்றாக விசைந்திருக்கக்கண்டு, எல்லாரும் உகந்து தேவராஜரை உள்ளேயழைத்தருளி, (இதென்ன அற்புதம் இதென்ன சாதுர்யம்) என்று கேட்க ; அவர் இஸ்ஸந்நிதியி னின்றும புறப்பட்டபிற்பாடு நடந்தசெய்திகளையெல்லாம் நடந்தபடியே தப்பாமல விண்ணப்பஞ்செய்யககேட்டருளி ஜீயரும் உகந்து எழுந்திருந்து தேவராஜரை, "நம் பிள்ளையோ" என்று கட்டிக்கொண்டு எல்லாருங்கூடி யெழுந்தருளி பெருஞ்செல்வத்தைத்திருவடித்தொழுதுநிற்க ; தேவராஜருக்கு "நம்பிள்ளை" என்று அருள்பாடிட்டு தர்சநப்ரவர்த்தகத்வாபிஷேகம் பண்ணியருளி உம்முடையபுத்திவிஸ்தாராநுகுணமாகத்திருவாய்மொழிக்கு வயாக்யாநமாம்படி உபந்யஸித்து நம்மிராமாநுசன்தர்சநத்தை வளர்த்துக்கொண்டு போருமென்று நியமித்து பட்டர் சரமகாலத்திலே தர்சநப்ரவர்த்தகருக்கெனறு ஸாதித்திருந்த மோதிரத்தை நம்பிள்ளை திருவிரலிலேயிட, அவரை எல்லாருங்கொண்டாடி ப்ரதிபத்திபண்ணினார்கள். இப்படி தர்சநப்ரவர்த்தகராய் ஜ்ஞாந பக்தி வைராக்யங்கள் இட்டுமாறிணுப்போலே வடிவிலேதொடைகொள்ளலாம்படி அதிசயத்தையுடையராய் அத்ப்புதவயாக்யாநவைபவராய் எழுந்தருளியிருக்கிறபடிகளைக்கண்டு அநேகம் ஸ்ரீவைஷ்ணவாகள ஆசரயிதது "நம்பெருமாள்கோஷ்டியோ நம்பிளளைகோஷ்டியோ" என்னும்படி ஸ்ரீவைஷ்ணவஸம்ர்த்தியுடனே வாழ்ந்தருளுகிறகாலத்திலேயுண்டான அப்ரதிமவைபவங்கள் அநேகமாயிருக்கும்.

இப்போது பெரியவாச்சான்பிள்ளைக்கு, நம்பிள்ளை ஒன்பதினாயிரப்படியுடனே சில அர்த்தவிசேஷங்களைககூட்டி ப்ரஸாதிக்க, அவர் அன்றைக்கன்றுடும் பட்டோலைகொண்டு எழுதி நிறைவேறினபின்பு எல்லாவற்றையுங்கொண்டுவநது ஸமர்ப்பிக்ககடாக்ஷித்தருளி உகந்தருளி நல்ல அலேகத்திலே யேறியருளப்பண்ணி பின்னும் அநேக ஸ்ரீகோசங்களையுமுண்டாக்கி பஹுமுகமாக ப்ரவர்த்திப்பிக்கும்படிநியமிததருளி அப்படி நடவாநிற்கச் செய்தே,

ஐயரையும் சிறியாழ்வானப்பிள்ளையையும் அழைத்து "ஒன்பதினாயிரப்படி வாசியுங்கோள்" என்ன ; பெரியவாச்சான்பிள்ளையும் அடியேனுங் கூடஸேவித்து வருகிறேனென்ன ; ஆனால் பெருக்காமென்றருளிச் செய்து உகந்து ஸாதித்தருள ; அன்றைக்கன்றும் ஸாதித்தவர்த்தத்தை ஸ்வார்த்தமாகப் பட்டோலைகொண்டு * ஐயர் சேர்த்துக்கட்டி வைக்க; ஒருநாள், நம்பிள்ளை அமுதுசெய்தருள விண்ணப்பஞ்செய்ய ; உடனேபுறப்பட்டருளி தாமேதிருவாராதநஞ் செய்தருளுகிறோமென்று முயன்றவளவிலே பட்டோலைக்கட்டைக்காண ஒரு ஓலையை வாங்கிவாசித்தருளி "இதென்னன் புது" என்றுகேட்க; ஐயர், தேவரீர்ஸாதித்தருளின அர்த்தத்தை விஸ்மரியாமைக்குக்குறிப்பாக இட்டுவைத்தேனென்று விண்ணப்பஞ்செய்ய ; ஆகில் திருவாராதநம் நீரேசெய்யுமென்று நியமித்து பட்டோலைக்கட்டையிறக்கி நெடும்போதுசோதித்து பெரியவாச்சான்பிள்ளையையும் சிறியாழ்வானப்பிள்ளையையும், "நீங்கள் இந்த விரகைப்பார்த்துக்கொண்டிருங்கள்" என்று சடக்கெனவமுதுசெய்தருளி தாமுமங்கேயெழுந்தருளி பின்னும் நெடும்போதுகடாக்ஷித்தருளி, "யானைக்கோலஞ்செய்தாப்போலிருக்கிறது" என்று ஒருவர்க்கொருவர் அருளிச்செய்துகொண்டு உகந்திருக்கச்செய்தே நம்மையரையழைத்தருளி, "நீர்இப்படி செய்ததென்? ஆச்சான்பிள்ளை பண்ணலாமோ, நாமும் பண்ணுவோமென்று ஆக்ரஹித்துச்செய்தது போலேயிருக்கிறது" என்று பிள்ளை சீறியருள, ஐயர் நடுநடுங்கி சோகித்து மோஹித்துத் தெளிந்து, † ஜீயா ! அடியேன் அப்படிச்செய்தேனல்லேன், விஸ்மரித்தால் பார்த்துக்கொள்ளச் செய்தேனென்ன அதற்கு இருபத்துநாலாயிரப்படியுண்டேயென்ன, அவிவேகம் வந்தது என்று திருவடிகளிலேவிழ (க்ஷமித்தோம்) என்றருளிச்செய்து, பின்னர் ;-(நீர் ஓரவதாரவிசேஷமென்றிருக்கிறோம், நாம் ஜீயர்ப்ரஸாதமாகச்சொன்ன அர்த்தத்தில் ஒரு - ச - து - போடாமல் எழுதினீர், உமமுடைய ஸாமர்த்த்யத்தை என்னென்று சொல்வோமென்று மிகவும் ப்ரியப்பட்டு, "மாதவருக்கு ஓரதிசயம் வேணும்" என்று திருவுள்ளந்தோன்ற; நமக்கு ப்ராணஸுஹ்ருத்தாய், ஜீயருடைய பூர்வாச்ரமத்தின் திருநாமத்தையுடையராய், நமக்கும் அபிமதராயிருப்பாரொருவராகையாலே அவரைக்கொண்டு இத்தை ப்ரவர்த்திப்பிப்போம்" என்ன, ஐயரும் மிகவுமுகந்து அப்படியே செய்தருளவேணுமென்று தீர்க்கப்ரணாமம் பண்ண, உடனே பட்டோலைக் கட்டையெடுத்துச் சிறியாழ்வானப்பிள்ளைகையிலே ப்ரஸாதித்தருளி இத்தை நாலந்தலேகத்திலே ஒரு ஊர்த்த்வமாம்படி பண்ணி இத்தை பஹுமுகமாகப் ப்ரவர்த்திப்பியுமென்று நியமித்தருள ; (அதற்கு அடியேன் வல்லேனோ, அதிகாரங்கிடைக்குமோ)என்றாற்போலே

* ஐயர்-வடக்குத்திருவீதிப்பிள்ளை. † ஜீயா - ஸ்வாமீ.

சில விண்ணப்பஞ்செய்ய ; அது உமக்கு பரமோ, ஜீயர் கடாக்ஷம் முன் நிற்கும் திருநாமமுடையீரன்றோ, ஒருஐதிஹ்யமுண்டு, கேளும்;-

துன்னுபுகழ்க்கந்தாடைத் தோழப்பருடையஸ்வப்நத்திலே, பேரருளாளப் பெருமாள், (జగద్రక్షాపరో నన్తో జనిష్యత్యపరో ముని:।తదాశ్రయాస్సదాచారా స్సాత్వికా స్తత్వదర్శన:)என்றருளிச் செய்திருப்பதுமுண்டு. திருவனந்தாழ்வான் எம்பெருமானாருடைய அவதாரமானப்போலே இன்னமொரு அவதாரஞ்செய்யப் புகுகிறார், அவர் முப்பத்தாறாயிரப் பெருக்கராய் இத்தை ப்ரவர்த்திப்பிக்கப் புகுகிறார், நீர் * ஓராண்வழியாய் நடத்திப் போருமென்று பட்டோலைக் கட்டைப்ரஸாதித்தருளினார்; அவரும்அஞ்சுலம்புடமாகவறியருளப்பண்ணி தம்குமாரருக்கு ப்ரஸாதித்தருளினார்.

இப்படி இவர்களுடைய ஐககண்ட்யத்தாலே ப்ரவர்த்தமாய் ஸங்க்ரஹ விஸ்தரரூபமாயிருக்குமென்று அருளிச்செய்து, (சீராருந்திருவத்தியூர் தன்னில் நின்றும் சிறந்த மணப்பாக்கத்து நம்பியாரை, ஏராருங்கனவிலுபதேசத்தால் முன்னெடுத்தருளி யெழிலரங்கத்தேபோயிரு நீர், சேராமலுமக்கிதமங்கே சொல்வோந்தூய வுலகாரியன்பால் சேர்ந்ததற்பின் அவர்க்கு, நேராகக்கனவிலாங்கவருபதேசத்தால் முன்னம் விரித்தகலை வசன பூடணமாநிதியே) என்கிறபடியே பரமரஹஸ்யமான ஸ்ரீவசநபூஷணமாகிற திவ்யப்ரபந்தத்தைச்செய்தருளி லோகத்தை வாழ்வித்தருளினார்.

அநந்தரம், நாயனாரும் (వాక్యాభరణవద్ధిభూషణశాస్త్రసారమ్) என்னும்படியான ஸ்ரீவசநபூஷணஸ்தாபநார்த்தமாக ஆசார்யஹ்ருதயத்தை யருளிச்செய்து * தோதவத்தித் தூய்மறையோரான பெற்றார்க்கு ப்ரஸாதித்து, இப்படி முப்பத்தாறாயிரப்படியினர்த்தத்தை ஸ்ரீவசநபூஷண ஆசார்யஹ்ருதயப்ரபந்தங்களாலே தாத்பர்யமாகக் கூட்டிப் பின்னையு மருளிச்செய்கையாலே ஈட்டுத்தனியனிலே இவர்கள் தனியனையுமநுஸந்திக்கிறது. அவரும் ஆசார்ய ஹ்ருதயம் பெற்றார்க்குப்ரஸாதித்தார் ; அவரும திருநாராயணபுரத்து ஆயிக்கு ப்ரஸாதித்தார்.

இதற்கு ப்ரபந்தப்ரதிபாத்யமான அர்த்தஸம்ப்ரதாயம் ஜீயருக்கு ஆய்வழியாக வந்தபடியை மேலே சொல்லுகிறது ; இது ஜீயருடைய ஆசார்யரான திருமலையாழ்வாரும், அவருடைய திருத்தமப்பனாரான அண்ணரும், அதிபால்யத்திலே பிள்ளை லோகாசார்யர் திருவடிகளிலே ஆச்ரயித்தவர்களாகையாலே பின்பு கொல்லிகாவலதாஸரிடத்திலும் கூரகுலோத்தம தாஸரிடத்திலும் ஜ்ஞாநோப ஜீவநம்பண்ணி உஜ்ஜீவித்

தார்கள். இப்படி ஸம்பந்தி ஸம்பந்திகளும் உஜ்ஜீவிக்கும்படி (தம்பியொடு தாசரதி) என்கிறபடியே நம்மாழ்வார் திருவவதார மென்னலாம்படியான வைபவத்தை யுடையரான நம்பிள்ளையுடைய அநுக்ரஹத்தாலே அவதார விசேஷமா யவதரித்தருளின பிள்ளைலோகாசார்யரும், தததநுஜரான அழகிய மணவாளப்பெருமாள் நாயனாரும் பால்யாத்ப்ரப்ருதி ஸஹவாஸிகளாய், இணைத் தொட்டிலிட்டு வளர்ந்த இளையபெருமாளையும் பெருமாளையும் போலேயும், (பலதேவனென்னும் தன்னம்பியோடப் பின்கூடச்செல்வான்) என்கிறபடியே நம்பி மூத்தபிரானையும் க்ருஷ்ணனையும்போலேயும் ஸௌப்ராத்ரத்தையுடையரான இவர்களிலே பிள்ளைலோகாசார்யர், தம் பரமக்ருபையாலே பெண்களும் பேதைகளும் அதிகரித்து உஜ்ஜீவிக்கும்படி தனிதிருமந்த்ரம், தனித்வயம், தனிசரமச்லோகம், தத்வத்ரயம், தத்வசேகரம், பரந்தபடி, ஸ்ரீயப்பதிப்படி, யாத்ருச்சிகப்படி, முமுக்ஷுப்படி, ஸாரஸங்க்ரஹம், ஸாரசதுஷ்டயம், ப்ரமேயசேகரம், ப்ரபந்நபரித்ராணம், அர்ச்சிராதி, அர்த்தபஞ்சகம், ஸ்ரீவசநபூஷணம், நவவித ஸம்பந்தம், நவரத்நமாலை முதலான அநேக ரஹஸ்யங்களிட்டருளி தம்பியோடு தாமும் கூடி வாழ்ந்தருளுகிறகாலத்திலே; பிள்ளை லோகாசார்யர் திருவடிகளிலே பரமஸாத்விகராயிருப்பாரான கூரகுலோத்தமதாஸநாயனும், மணப்பாக்கத்து நம்பியாரும், கொல்லிகாவலதாஸரான அழகியமணவாளப்பெருமாள்பிள்ளையும், கோட்டூரிலண்ணரும், விளாஞ்சோலைப்பிள்ளையும், ஸாத்விகைகளில் திருமலையாழ்வார் திரு தாயார் தொடக்கமான சில அம்மையார்களும், திருவடிகளிலே ஆச்ரயித்தவன்று தொடங்கி (ஒழிவில்காலம்) என்கிறபடியே ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்த்தைகளிலும் நித்ய ஸேவைபண்ணிக்கொண்டு தேவுமற்றறியாதிருந்தார்கள்.

இப்படி யெழுந்தருளியிருக்கும் பிள்ளைலோகாசார்யர், பரமரஹஸ்யமுமாய் திவ்யசாஸ்த்ரமுமான ஸ்ரீவசநபூஷணத்தை ஸர்வரும் அதிகரித்து ஈடேறலாம்படி யருளிச்செய்து லோகத்தை வாழ்வித்தருள, அத்தைக் கண்டு பாகவதோத்கர்ஷம் பொறுக்கமாட்டாத சில அஸூயாளுக்கள், நம்பெருமாள் பக்கலிலேசென்று பெருமாளே! பிள்ளைலோகாசார்யர் ஸ்ரீவசநபூஷணமென்று ஒரு ரஹஸ்யக்ரந்தமிட்டு நம்தர்சநத்தையெல்லாம் வ்யர்த்தமாக்கினரென்று பெருமாளுடனே கோள்சொல்ல; அத்தைக் கேட்டுப் பெருமாளும் சீறி, பிள்ளைலோகாசார்யரை யழைத்துவிட அவ்வளவிலே அவர் நீராட எழுந்தருளியிருக்க, நீராடி யெழுந்தருளுகிற அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் இவ்விசேஷங் கேட்டு, பெருமாள் ஸந்நிதியிற் சென்றவாறே பெருமாளும், அர்ச்சகமுகேந "நாயனாரே! நாம் அவதாரம்பண்ணினது * தர்மஸம்ஸ்த்தாபநார்த்தமன்றோ, நீங்கள் ரஹஸ்யக்ரந்தமிட்டு அத்தை வ்யர்த்தமாக்குகிறது என்" என்று வினவியருள; அழகிய மணவாளப்பெருமாள் நாயனாரும், ஸ்ரீவசநபூஷணஸ்த்தாபநார்த்தமாகச் செய்தருளின ஆசார்யஹ்ருதயமாகிற ப்ரபந்தத்தை, பெரு

மாள் ச்ரோதாவாய் தாம்வக்தாவாக ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலை சொன்னாற்போலே இவர் ஆசார்யஹ்ர்தயத்தை விண்ணப்பஞ் செய்து தலைக்கட்டினவாறே பெருமாள் மிகவும் திருவுள்ளமுகந்தருளி, (இதுவும் நாம்செய்ததொன்றன்றோ) என்று கோள்சொன்னவர்களை வாரியடித்துத் தள்ளிவிட்டருளி நாயனாருக்கு தம்ஸர்வஜ்ஞ பரிச்சதங்களோடே ப்ரஹ்மரதம் ப்ரஸாதித்து உபலாளித்துத் திருமாளிகையே போகவிட்டருளினார். இவ்வைபவங்கேட்டுப் பிள்ளைலோகாசார்யரும், நாயனாரை (வளர்த்ததனால் பயன்பெற்றேன்) என்று அதிஸங்தோஷத்துடனே ஆலிங்கித்துக்கொண்டருளினார். அழகிய மணவாளப்பெருமாள் நாயனார், திருப்பாவை முதலான சிலப்ரபந்தங்களுக்கு வ்யாக்யானஞ் செய்தருளினார்; இத்தைநினைத்திறே (தன்சீரால் வையகுருவின் தம்பி மன்னுமணவாளமுனிசெய்யுமவைதானுஞ்சில) என்று ஜீயரும் அநுஸந்தித்தருளினார்.

பின்பு பிள்ளைலோகாசார்யரும் நாயனாரும், அதிவிரக்தராய் வாழ்ந்தருளுகிறகாலத்திலே, நாயனார் சிறிதுகால மெழுந்தருளியிருந்து அசிரேண பரமபதத்தை ப்ராபித்தருள, பிள்ளையும் பாகவத விச்லேஷத்தாலே மிகவும் சோகார்த்தராய் அவர் திருமுடியைத் தம்மடியிலே வைத்துக்கொண்டு, (மாமுடும்பைமன்னு மணவாளாவண்ணலொடு, சேமமுடன் வைகுந்தஞ்சென்றக்கால், மாமென்று, தொட்டுரைத்த சொல்லுந்துயந் தன்னினும் பொருளும், எட்டெழுத்து மிங்குரைப்பாரார்) என்கிறபடியே பலவகை புலம்பி திருமுத்துதிர்த்து முதலிகள் தேற்றத்தேறி நின்று நாயனாருக்கு சரமகைங்கர்யஞ்செய்து திருவத்யயநமும் நடத்தியருளினார். இவர் தனியன் (ద్రావిడామ్నాయ హృదయం గురుపర్వ క్రమాగతమ్ । రమ్యజామాతృదేవేన దర్శితం కృష్ణసూనునా) த்ராவிடாம்நாயஹ்ர்தயம் குருபர்வக்ரமாகதம் - ரம்யஜாமாத்ர்தேவேநதர்சிதம் க்ர்ஷ்ணஸூநுநா.

ஸர்வசேதநரு முஜ்ஜீவிக்கும்படி சரமப்ரமாணப்ரமேய ப்ரமாத்ர் வைபவங்களை ப்ரகாசிப்பித்துக்கொண்டு பிள்ளைலோகாசார்யர் பெருமாளுக்குப்ராணபூதரா யெழுந்தருளி யிருக்குங்காலத்தில் ஸ்ரீரங்கம் துருஷ்காக்ராந்தமாய் குடியிருக்கப்போகாமல் பெருமாள் நாய்ச்சிமாருடனே புறப்பட்டு பெரியபெருமாளுக்கு திருமுன்பே கல்காப்புச் சாத்தி முன்னே ஒரு விக்ரஹத்தை யெழுந்தருளப் பண்ணிவைத்து, (சுற்றமெல்லாம் பின்றொடரத் தொல்கானமடைந்து) என்றும், (தம்பியோடு தாமொருவர் தன்துணைவிகாதல் துணையாக) என்றுஞ் சொல்லுகிறபடியே பெருமாள், தம் அந்தரங்கபரிகரத்துடனே வலசையாக வெழுந்தருள; பிள்ளையும், * வாளும் வில்லுங்கொண்டு பெருமாளைப் பின்றொடர்ந்தடிமைசெய்த இளைய பெருமாளைப்போலே (உருவார்சக்கரஞ் சங்குசுமந்திங்கும் மோடொரு பாரிழ் வாரேரடியான்) என்கிறபடியே அத்தலைக்கு மங்களா சாஸநபராய் தாமும் முதலிகளும் ஸேவித்துக்கொண்டு சேரவெழுந்தருள, அநந்தரம் பெருமாளும், (ప్రవిశ్య తు మహారణ్యం రామో రాజీవలోచనః) (ப்ரவிஶ்ய துமஹாரண்யம்

ராமோராஜீவலோசநः) என்றும், (వనం సభార్యః ప్రవివేశ రాఘవ స్సలక్ష్మణస్సూర్య ఇవాభ్రమణ్డలమ్) (வநம்ஸபார்ய:ப்ரவிவேஶராகவ ஸ்ஸலக்ஷ்மணஸ்ஸூர்ய இவாப்ரமண்டலம்) என்றும் சொல்லுகிறபடியே - ஹர்யக்ஷ தரக்ஷு கிடி கட்கபல்லூகாத்யநேக வநம்ர்கஸஞ்சார பர்ஜநபயங்கரமாய் * சிலக்கை வேடர் திரிகிற * கடுங்கானமான கள்ளர்பற்றிலே எழுந்தருளுகிறவளவிலே சில தஸ்யுக்களுக்கு ஸர்வஸ்வதாநம் பண்ணியருள, அச்செய்தியைக்கேட்டு முன்னே யெழுந்தருளின பிள்ளை மீண்டெழுந்தருளி அவ்விடத்தில் அவர்களுக்கு தாமும் ஸர்வஸ்வதானம் பண்ணியருளி அப்பாலே யெழுந்தருள, அவ்வளவில் சிலகள்வர்வந்து அவர்பதம்பணிந்து பச்சைகட்ட, (கலகமிகு பஞ்சமுடன் கள்ளர்பற்றில் கத்திருவர்காரியப்பே ரொருவர்வந்து, பல மறிந்து பதம்பணிந்து பச்சைகட்டப்பாங்குடனே வாங்கினுப்போல் வாங்கி நீங்கி, நலமிகுந்ததந மிதனை நம்பிறேமேல் நம்பெருமாளும்பருடன் நயந்து வாழும், இலகுமிகுபெருஞ் செல்வமில்லையென்று ஏர்முடும்பை யுலகாரியனுரை செய்தானே) என்கிறபடியே அவற்றை யுபேக்ஷித்து,

ஜ்யோதிஷ்குடி என்கிறக்ராமத்திலே பெருமாளுடனே யெழுந்தருளி அங்கே திருமேனி நோவுசாத்தி மிகவுந்தளர்ந்து கண்வளர்ந்தருள; திருவடிகளுக்கு அந்தரங்கரான முதலிகள் எங்களுக்குத் "தஞ்சமேது" என்று விண்ணப்பஞ் செய்ய; அப்போது திருமலையாழ்வாரிடத்தில் திருவுள்ளம் ப்ரஸந்நமாய்க்குடி புகுந்து ஒரு மிடறுசெய்து லௌகிகவைதிகங்களிலே அதிநிபுணராய் மதுரை ராஜ்யாதிபத்யம் பண்ணுகிறவர் அத்தை விட்டு தர்சநப்ரவர்த்தகராம் படி ஆசீர்வதித்தருளி அவரையநுவர்த்தித்து ரஹஸ்யங்களையும் அர்த்தங்களையும் நன்றாகப்ரஸாதிக்கும்படி கூரகுலோத்தமதாஸ நாயனுருக்கும், திருவாய்மொழியைப்ரஸாதிக்கும்படி திருக்கண்ணங்குடிப்பிள்ளைக்கும், திருப்புட்குழிஜீயருக்கும், மூவாயிர வ்யாக்யானத்துக்கு நாலூர்பிள்ளைக்கும், ஸப்தகாதைமுதலான சில அர்த்த விசேஷங்களை ப்ரஸாதிக்கும்படி விளாஞ்சோலைப்பிள்ளைக்கும் * நியமித்தருளி, ஆனிதனில்வளர் பக்கத்தா றிரண்டாநாள் தன்னில், ஊனமிலிவ்வுலகாரு முடும்பையர் கோனுயர்நிவத்து,* வானவர்கள் தற்சூழ வைகுந்தக்குட்டனுடு, தானினிது வீற்றிருக்கத் திருவுள்ளமாய், விளாஞ்சோலைப் பிள்ளையைத் திருவநந்தபுரத்திலே திருமேனியளவாக எழுந்தருளியிருக்கும்படி நியமித்தருளி பிள்ளை திருவடிகளை த்யாநித்துக்கொண்டு ஜ்யேஷ்ட சுத்த த்வாதசியிலே திருநாட்டுக் கெழுந்தருளினார். முதலிகள் சோகார்த்தராய் மிகவும் க்லேசித்துத்தேறி பெருமாள் திருப்பரிவட்டம் திருமாலை வரவிட ஸம்ஸ்கரித்துப் பள்ளிபடுத்துத் திருவத்யயநத்தைப் பெருக்க நடத்தியருளினார்கள். பிள்ளைலோகாசார்யர் திருநக்ஷத்ரம் ஐப்பசியிற் றிருவோணம். அவர் தனியன் (లోకాచార్యాయగురవే కృష్ణపాదస్యసూనవే। సంసారభోగిసన్దష్టజీవజీవాతవేనమః॥) (லோகாசார்யாயகுரவே க்ர்ஷ்ணபாதஸ்யஸூநவே-ஸம்ஸாரபோகிஸந்தஷ்டஜீவஜீவாதவேநம:.)

பின்பு பெருமாளும் (அரங்கநகருள் முனைவனைத் திருமாலிருஞ்சோலைநின்றான்) என்கிறசேர்த்தியாலே * சிலம்பாறுபாயுந் தென்திருமாலிருஞ்சோலையிலேயெழுந்தருளி, இவ்விடம் * ஆயிரமாறுகளும் சுனைகள் பலவாயிரமும் ஆயிரம் பூம்பொழிலு முடைத்தாய் திருப்பொன்னியாலே சூழப்பட்ட * ஆராமஞ் சூழ்ந்தவரங்கத்தைப்போலே அதிமநோஹரமாயிருக்கையாலே அங்கே பிள்ளையைப் பிரிந்த க்லேசமெல்லாமாறி, (క్షితిక్షమావిశేషస్యాపగాస్వచ్ఛతోయాస్వనుభవసురసజ్ఞో దండకారణ్యవాసాత్ । తదిహ తదనుభూతౌ సాభిలాషోద్య రామశ్శయసదృశగిరీంద్రే సుందరీభూయ భూయః) (க்ஷிதிக்ஷமாவிசேஷஸ்யாபகாஸ்வச்சதோயாஸ்வநுபவ ஸுரஸஜ்ஞோ தண்டகாரண்யவாஸாத் - ததிஹ ததநுபூதௌ ஸாபிலாஷோத்ய ராமஸ்ஸமப்ராயஸிவநகிரீந்த்ரே ஸௌந்தரீபூயபூய:) என்கிறபடியே வநவாஸவாஸனையையுடையராய் வநகிரிப்ரஸ்தமான அங்கே சிலகாலமெழுந்தருளியிருந்து விச்ராமித்தருளி, அழகியமணவாளன் கிணற்றையும் * அறுசுவரானதாம் தாயகன்னைவைத்த தண்ணீர்ப்பந்தலோபாதியாக உண்டாக்கிவைத்து பின்பு அனைத்துப பரிகரத்துடனே, (கொல்லி காவலன் கூடல்நாயகன் கோழிக்கோன்குலசேகரன்) என்று அதுவே நிரூபகமாம்படியான குலசேகரப் பெருமாளாண்டருளிய தேசத்தை விரும்பி யெழுந்தருளி அவ்வவ்விடங்களிலே சிலநாள் * இனிதமர்ந்திருந்து.

அநந்தரம் கோழிக்கோடேற வெழுந்தருள; (சுடர்கொள்சோதியைத் தேவரும் முனிவருந்தொடர) என்கிறபடியே மற்ற திவ்யதேசத்தெம்பெருமான்களும் நம்மாழ்வாரும் அங்கே வலசையாக எழுந்தருள, அவர்களையும் ஆதரித்தருளி ஆழ்வாரைத் தம்முடைய திவ்யஸிம்ஹாஸநத்திலேவைத்துக்கொண்டு * அடியடையாதாள் போலன்றியடைந்த இவரைக் கண்டுகொண்டிருந்து தம்முடைய திவ்யஸிம்ஹாஸநமான வட்டமணையையும், முத்துச்சட்டையையும், பகல்திருமுன்பந்தத்தையும் ப்ரஸாதித்து க்ருபைபண்ணியருளி, அங்குநின்றும் புறப்பட்டு, ஆழ்வாருடனே தேனைக்கிடம்பைக்கெழுந்தருளி அங்கே சிறிதுகாலமெழுந்தருளியிருந்து, "கூடவருகிறேன்" என்ற ஆழ்வாரை நிறுத்தி புங்கனூர்வழியாக வெழுந்தருளி, அங்கேயிருந்து திருநாராயணபுரத்தேற ப்ரதக்ஷிணமாக வெழுந்தருளி * நிலதமுலகுக்காய்நின்ற திருமலையையடைந்து, (సురమ్యమాసాద్యతు చిత్రకూటం నదీఞ్చతాం మాల్యవతీం సుతీర్థమ్ । ననంద రామో మృగపక్షిజుష్టాం జహౌ చ దుఃఖం పురవిప్రవాసాత్) (ஸுரம்யமாஸாத்ய து சித்ரகூடம் நதீஞ்சதாம் மால்யவதீம் ஸுதீர்த்தாம் - நநந்த ராமோ ம்ருகபக்ஷிஜுஷ்டாம் ஜஹௌ ச து:கம் புரவிப்ரவாஸாத்) என்கிறபடியே * நம்பனைஞான்றாரைன * குளிரருவிவேங்கடத்தில் கூடியிருந்து குளிரப்பெற்று, (மந்திபாய்வடவேங்கடமாமலை வானவர்கள், சந்திசெய்யநின்ற அரங்கத்தரவினணையான்) என்கிறபடியே ஐக்யமான ஆகாரத்தாலே அங்கே அநேககாலம் நித்யோத்ஸவாதிவைபவங்களுடனே வாழ்ந்துகொண்டிருந்தார்.

இனி ஆழ்வார்வர்த்தாந்தம்;—கோழிக் கோட்டி னின்றும் பெருமாள் புறப்பட்டெழுந்தருளுகிறபோது கூடப்புறப்பட்டருளாமல், ஸ்த்தானத்தார் ஸ்த்தலத்தார், பரஸ்பரவைஷம்யத்தாலே தடங்கல்பண்ண, அந்த ஸமயத்திலே மேற்கும் கள்ளர்பற்றாய் கிழக்கும் கள்ளர்பற்றாய் வடக்கும் துருஷ்கபயமா யிருந்தபடியினாலே அத்திசைகளில் இருக்கப்போகாமல் ஆழ்வாரை வலசையாகத் தென்மேற்கு மூலையிலே பஹுதூரம் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு செல்ல, அங்கே கள்ளர்பயம் மிக, வேறு கத்யந்தரமில்லாமையாலே அத்யுந்நதமான முந்திரிப்புமலையிலே யேறி அத்யகாதமான ஒருசரிவுகண்டு ஆழ்வாரை ஒருதிருப்பெட்டகத்திலே யெழுந்தருளப் பண்ணி சங்கிலிகட்டி அந்த அரங்கிலே பாங்காக எழுந்தருளப் பண்ணிவிட்டு திருவாபரணங்களையும் திருப்பொக்கசத்தையும் நிக்ஷேபித்து எல்லாரும் மலையினின்றும் இறங்கினவளவிலே கள்ளர்பள்ளர்கையிலே யகப்பட்டவர்கள் உடைமையைக்கூறைகொடுத்துவிட, அதற்குத் தப்பினவர்கள் தங்கள் தங்களுடைய இடம் போய்ச்சேர்ந்தார்கள்.

அவர்களிலே தோழப்பரென்பாரொருவர், ஆழ்வார் திருவடிகளிலே அத்யந்தப்ராவணராய் அபிமாநியாயிருக்கையாலே, தாம் மதுரையிலே சென்று திருமலையாழ்வாருக்கறிவித்துக்காத் திருந்துகொண்டு இச்செய்தியை யெல்லாம் தெரியச்செய்துகொள்ள; திருமலையாழ்வாரும் எல்லாவற்றையுங்கேட்டு அபிமாநித்து மலையாளராஜாவுக்குத் தம்முடைய ஸ்ரீமுகமும் கொடுத்து, அந்தரங்கராய் ராஜவல்லபராய் ஸ்ரீகார்யத்திலே அபிமாநிகளாயிருக்கும் ஸ்வபடர்களையுங் கூட்டி த்ரவ்யமும் ஸாதித்து அனுப்பியருள; அவர்களும் அப்படியே திருவாங்கோட்டூரிலே செல்ல, கலஹம் தெளிந்தபடியினாலே ஹ்ருஷ்டராய் ராஜாவைக்கண்டு செய்தியைச்சொல்ல, திருமலையாழ்வாருடைய ஸ்ரீமுகத்தை சிரஸாவஹித்துக்கொண்டு ப்ரியப்பட்டு, தோழப்பருக்கு பஹுமாநம்பண்ணி ஆழ்வாரைத் திருக்கணாம்பியிலே யெழுந்தருளப் பண்ணிவைக்கும்படி மநுஷ்யஸாமக்ரியையும் அர்த்தஸாமக்ரியையும் பூர்ணமாகக் கொடுத்தனுப்ப, அவர்களும் முந்திரிப்பு என்கிற வூரிலேசென்று சங்கிலிகளும் ஊஞ்சற்பலகைகளுஞ் சேர்த்துக்கொண்டு மலையில் ஏறி,-(சரிவிலே யிழிவாரார்) என்று சிந்திக்க, ப்ராணஸந்தேஹம் ப்ரவர்த்திகளாகையாலே எல்லாரும் பின்வாங்கியிருக்க தோழப்பர் (நாமே யிழிகிறோம்)என்று துணிய அவருக்கு அப்போது ஸ்த்தலத்தார் சொன்ன கட்டளை;— ‘‘உமக்கு ஆழ்வார் ஸந்நிதியிலே வகுளாபரணபட்டரோடொத்த ஸ்வதந்த்ரமும், திருமஞ்சந காலத்திலே ஸஹஸ்ரதாரை கண்டருளித் திருவந்திக்காப்பு ஆனவுடனே ஆழ்வார் திருமுடியிலே சாத்தியிருக்கிற * அலங்கலம்பூந்தொடையலையும், (ஆழ்வார் தோழப்பர்) என்று உமக்கு அருள்பாடிட்டு நித்யமாக ஸாதிக்கிறோம்” என்று சொல்ல, அவரும் உகந்து ஓமெறிந்து ஆழ்வார்தோழப்பரைத் தூங்குபலகையிலே ஏற்றிச் சரிவிலேவிட்டு ஸாவதாநமாகப் பார்த்திருக்க, அவரும் அதிலி

றங்கி திருப்பொட்டகம்தேட ஒருக்ஷேமகாரிபக்ஷி திருப்பொட்டகத்தின்மே லேயிருந்து நெடும்போது சப்திக்க, இது வெறுமனன்றுஎன்று உகந்து திரு ப்பொட்டகத்தைக்கண்டு ஸேவித்து சிறிதுபொழுது ஆழ்வாரைத்யாநிக்க உடனே அப்பக்ஷி அப்புறத்திற்செல்ல திருக்காப்புநீக்கி ஆழ்வாரைக் கண்டு கொண்டுஸேவித்து க்ர்தார்த்தராய் திருப்பொட்டகத்தைத் திருக்காப்புச் சேர்த்துக்கட்டி தூங்குபலகையிலே யேறியருளப்பண்ணி சங்கிலியைக் குலுக்க, அவர்களும் மேலேசேந்திக்கொள்ள, தோழப்பர் எழுத்தாணியை யும் ஓலையையும் கொண்டுபோனவராகையாலே அங்குநடந்த வ்ர்த்தாந் தத்தை யெழுதிவைக்கக்கண்டு அனைவரும் ஸந்தோஷப்பட்டு ஸேவித்துத் திருப்பொட்டகத்தைப் பலகையினின்றும் இறங்கி யருளப்பண்ணி, தோழப் பர்வரும்படிக்குத் திரும்பிபலகையைவிட, வந்துசேர்ந்தவுடனே தோழப் பருமேறிச்சங்கிலியைக் குலுக்க, அவர்களும் சங்கிலியைச்சேந்த நடுவே தட்டுப்பட்டுத் தோழப்பர் விழுந்துவிட்டார். பிற்பாடு அவர்குமாரரான அப் பன் பிள்ளைக்கு எல்லாருமாக ஸமாதானஞ்சொல்லி ஆழ்வாருடைய கைங் கர்யத்திலே திருமேனிவிட்டவ ராகையாலே அவருக்கு நீர்சோகிக்க வே ண்டா, ஆழ்வார் உம்மை புத்ரராக அபிமாநித்தருளினார், உமக்கு ஸந்நிதி யிலே மூன்கட்டளைப்ரகாரத்துக்கு "ஆழ்வார்தோழப்பர்" என்று அருள் பாடும் வரிசைகளும் நடப்பிக்கிறோமென்று சொல்லி ஆழ்வாரை எழுந்தரு ளப் பண்ணிக்கொண்டு முந்திரிப்பிலேசென்று ஆழ்வாருக்கு அஞ்சுநாள் ஸம்ப்ரோக்ஷணை கண்டருளப்பண்ணி மலையினின்றும் புறப்பட்டவனறு தொடங்கி திருவடிநம்பியாரும், ஸ்தலத்தாரும், ஆழ்வாரப்பனும், நன் ருக ஆராதித்துக்கொண்டுவந்தார்கள்.

கள்ளர்பற்றிலுள்ளார் இச்செய்தியைக் கேட்டமாத்ரத்திலே தெய் வயோகத்தாலே ஆநுகூல்யம்பிறந்து ஆழ்வார் திருவடிகளிலே ப்ரவணராய் அநேகமாக ஸத்கரித்து முன்பு பறித்தத்தையும் ஸமர்ப்பிக்க அழகியமண வாளன் ப்ரஸாதலப்த்தமான பொற்றகடுசேர்த்த வட்டமணையையும், முத் துச்சட்டையையும், வெள்ளித்தீவர்த்திக்கோலையும், சித்தையையும் ஸமர் ப்பித்து, ஆழ்வாரைத்திருக்கணும்பியில் எழுந்தருளப் பண்ணும்படிக்குத் திருப்பல்லக்கு முதலானவைகள் சேர்த்து மார்க்கசோதநம பண்ணி மங் களவாத்யங்களுடனே எழுந்தருளப்பண்ணினார்கள். ஒருபெரிய திவ்யபக்ஷி யும் ஆழ்வாருக்கு மேலாக ஆகாசத்திலே சூழ்ந்துகொண்டு திருக்கணும்பி யிலே ஆழ்வாரெழுந்தருளியிருக்கிற கோயில்மரத்திலே கூண்டிட்டுவஸிக்க, இந்த ஆச்சர்யத்தைக்கண்டு எல்லாரும் ஆழ்வாரை ஸேவித்து அவர்ப்ர பாவத்தைக் கொண்டாடிக்கொண்டு தங்கள் தங்கள் சக்திக்குத் தக்கபடி சிறப்பு ஆராதநமும், நித்யோத்ஸவமும் யதோசிதம் விசேஷோத்ஸவமும் நடப்பித்துக்கொண்டு போந்தார்கள். இந்த அதிசயங்களையெல்லாம் திரு வநந்தபுரம், திருவாட்டாறு, திருவண்பரிசாரம், திருவல்லவாழ் முதலான திவ்யதேசங்களிலுள்ள போறறிமார் நம்பூரிமார்கள் கேட்டு உடனேவந்து

ஆழ்வாரை சேவித்து வித்தராய் அவரைவிட்டுப் பிரியமாட்டாமல் உதய காலத்திலே எப்போதும்போலே திருமஞ்சனங்கொண்டருளி தத்யோதநமும், நெய்த்தோசைப்படியும், பாகுகூட்டின கட்டிப்பொரியும், பாற்கஞ்சிக்கடாரமும் நித்யப்படியாக, அமுதுசெய்தருளி விநியோகமாய், பிற்பாடு ஓரைவகைகளும் அமுதுசெய்தருளி, மத்யாஹ்நகாலத்திலே நாயகமலங்காரத்துடனே வரிசையாகச் சம்பாவவஸரமும் அமுதுசெய்தருளி திருப்பணியாரவகைகளும் அமுதுசெய்து பின்பு உச்சிக்காலமு மமுது செய்தருளி காலோசிதமான உபசாரங்களுடனே விச்ரமித்தருளத் திருக்காப்புச் சேர்த்து மீளவும் போதுபோக நாலுநாழிகைக்குத் திருக்காப்பு நீக்கி ஸாயங்காலம் திருவாராதநங்கண்டருளி அஸ்தமநஸமயத்திலே உப்புச்சாற்றமுதும், சம்பாவும், தோசைப்படியும், பொரியு மமுது செய்து விநியோகமாய், பிற்பாடு அத்தாள மமுதுசெய்தருளி இராக்காலமுமாய் ஸ்ரீபலிதுடி, திருவுற்றசாதம் - அரவணை, சுக்குக்கஷாயம் இவைகளெல்லா மமுதுசெய்யும்படி போற்றிமார் திட்டம்பண்ணி நடப்பித்துப் போந்தார்கள். திருநகரியைப்போலே பரிஜநங்களும் பூர்ணமாய் ஏழுமடாதிபதிகளும் ஒன்றுபட்டு ஆழ்வார் திருவடிகளிலே அதிப்ரவணராய் அபிமாநிகளாய் தத்தத் காலோசிதமான உத்ஸவங்களை நன்றாக நடப்பித்துக் கொண்டு வாழ்ந்தருளி யிருந்தார்கள்.

இனிக் கோயில் வ்ர்த்தாந்தம்;—பெருமாள் புறப்பட்டருளின பின்பு, (அபிவ்ருக்ஷாஃபரிம்லாநாஃ) (அபிவ்ர்க்ஷாஃபரிம்லாநாஃ) என்னும்படி * அயோத்தியென்னும் மணிநகரமானது அழகழிந்தாற்போலே நம்பெருமாள் புறப்பட்டருளினபின்பு (அற்றபத்தர் சுற்றிவாழு மந்தணீரரங்கம்) என்றும், (நல்லார்கள் வாழும் நளிரரங்கம்) என்றும், * (தென்னாடும் வடநாடுந் தொழநின்ற திருவரங்கம்) என்றும் சொல்லுகிற கோயிலானது அழகழிந்து,

பின்னும் அங்கேவந்து ஆக்ரமித்தவன் செய்தபடி ;—* திட்கொடி மதிளைப் பிடுங்கி கண்ணனூரிலே தனக்கு ஆவரணமாகக் கட்டுவித்து பின்னையும் அநேக உபத்ரவங்களைப்பண்ண உபக்ரமிக்க அவ்வளவிலே, சிங்கப்பிரானென்னும் பேரையுடையராய் பெருமாள் திருவிளையாட்டமான வழகியவெண்ணீர்க் காணியப்ராஹ்மணராய் தமிழ்விரகரான ஒருவர் துருஷ்கன் வாசலிலே காரியம் ஆராய்ந்துநின்று அவன் நினைத்தபடி ஒன்றும் செய்யாமல் அவனுக்கு அநுகூலமாகவே சொல்லிக்கொண்டு, மதிள்கள், மாளிகைகள், கோபுரங்கள், துன்னுமணிமண்டபங்கள், சாலைகள் தொடக்கமானவற்றையும் * செம்பொனுய வருவரையனைய கோயில்மணியனுரையும் காத்துரக்ஷித்துக் கொண்டுபோந்தார் ; அதுகண்டு அங்குண்டான ஆசார்யர்கள் எல்லாரும் அவரை அநுவர்த்தித்து நல்வார்த்தை சொல்லிக்கொண்டு போந்தார்கள்.

பின்னையும், பிள்ளைலோகாசார்யர் திருவடிகளியே ஆச்ரயித்தவ ளான ஸாத்விகை அம்மையார் அவர்விச்லேஷம் பொறுக்கமாட்டாமல் பரமபதத்துக்குப்போக அவர்குமாரர் திருமலையாழ்வாரை அவர் சிறிய தாயாரான அம்மையார் போஷித்துக்கொண்டு போந்தாள்.

இவர்தாம் ப்ரபுத்வ முடையராய் ப்ராப்தயௌவநராய் * சதிரிளமட வார் தாழ்ச்சியை மதித்துப்போர, இவர், சதிருடைய தமிழ்விரகரா யிருக்கையாலே இவரைத் திருத்துவதாகக் கூரகுலோத்தம தாஸர் திரு வுள்ளம்பற்றி திருவிருத்தத்தை இவர்முன்பே அநுஸந்தித்துக்கொண்டு எழுந்தருள, அவர் அர்த்தவானாய் அதற்குப் பொருள்கேட்க, நாயனும் உனக்குச் சொல்லவொண்ணாதென்று குத்ஸித்து உமிய, திருப்பல்லக்கிலே யிருந்த அவர்க்கு பிள்ளைலோகாசார்யர் விசேஷகடாக்ஷம் பண்ணியிருக் கையாலே உமிந்ததற்குக் கோபியாமல் ஸ்வபடரைவிலக்கி அவரும் அச் செய்தியை அம்மையாருக்குச் சொல்ல, அவளும் பிள்ளை திருவடிகளி லுண்டான ஸம்பந்தத்தை ஸ்மரிப்பிக்க இவர்க்கு அநுதாபம்பிறந்து ஆச் ரயணோந்முகராயிருக்க; அக்காலத்திலே சிங்கப்பிரானுக்கு திருமணத் தூண்நம்பி என்று திருநாமமாயிருக்க அவர்க்கு எல்லாரும் ப்ரீத்யதிசயத் தாலே நல்வார்த்தைசொல்ல; அவரும், பலரும் அருளிச் செய்கையாலே எனக்கொன்றுந் தெரிகிறதில்லை, வாக்மியாயிருப்பா ரொருவரைத் தெளி வாயருளிச் செய்யும்படி கற்பிக்க வேணுமென்ன; அவர்களும் திருமலை யாழ்வாருடைய வாக்விபவஹாரா ஸாமர்த்யத்தைக்கண்டு நீர் சொல்லு மென்று நியமிக்க அவரும் அப்படியேசொல்ல அவ்வார்த்தைகள் அஸம் ப்ரதாயமா யிருந்தபடியையும் இவருடைய ஆச்ரயண ருசியையும் கண்டு "இவரை ஸத்ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகராக்கக் கடவோமென்று, * மூது மூடும்பை யுலகாசரியனருள் ஏதுமறவாத வெம்பெருமானை கூரகுலோத் தமதாஸர் இவரை அநுவர்த்தித்துத் தம்முடைய நிர்ஹேதுக க்ருபை யாலே * செயல் நன்றாகத் திருத்துவதாக மதுரைவாசலிலே சென்று ஸமயம்பார்க்க, ஒருநாளளவிலே திருமலையாழ்வார் யானைமேலேயேறிப் புறப்பட, தாம் மேட்டுநிலத்திலே நின்று தம்மைக் காண்பித்துக்கொள்ள, திருமலையாழ்வார் இவரைக் கண்டவுடனே பிள்ளைலோகாசார்யராக ப்ரதி பத்திபண்ணி யானையினின்றும் சடக்கென விறங்கி நாயன் திருவடிகளிலே தீர்க்கப்ரணாமம்பண்ண நாயனும் எடுத்தணைத்து ஸ்வாசார்யப்ரபாவத்தை யிட்டு இவரைக் கொண்டாட, திருமலையாழ்வாரும் இவரை உள்ளே யெழுந்தருளப் பண்ணுவித்துக்கொண்டு சென்று ஸத்கரித்து ஹிதம் கேட்க, பிள்ளைலோகாசார்யர் சரமகாலத்திலே அருளிச்செய்த படிகளை யெல்லாம் ஸவிஸ்தாரமாக வருளிச்செய்யக்கேட்டு உகந்து, அப்படியாகில் தேவரீர் அடியேனை க்ருபைபண்ணிக்கொண்டு இங்கே யெழுந்தருளி யிருந்து ப்ராதஃகாலத்திலே திருமண்காப்பவஸரத்திலே எழுந்தருள வேணுமென்று கட்டளையும் பண்ணி வைகையாற்றின் கரையிலே ஸந்த்யா

மடத்தருகே ஒரு திருவீதியையும் அதிலே இவர்க்குத் திருமாளிகையுஞ் சமைத்து ஜாத்யாச்ரயநிமித்த துஷ்டங்களேதேதோ அவைகளைப் பரிஹரித்து தளிகைக்கு நடக்கும்படிக்கு அமரிக்கைபண்ணினார்.

கூரகுலோத்தமதாஸநாயனும் நித்யமாகத் திருமண்காப்புவேளைக்கு எழுந்தருள, இவர் திருமண்சேர்க்கச்செய்தே (லோகாசார்யாய) என்று தொடங்கி தனியன்களை யநுசந்திக்கக்கண்டு மிகவும் ப்ரியப்பட்டு அன்று தொடங்கி கிஞ்சித்கிஞ்சித்காலம் அவரிருக்குமளவும் அநுவர்த்தித்துக் கொண்டிருந்து ரஹஸ்யார்த்தங்களை ப்ரஸாதிக்க அவரும் நன்றாக அநுவர்த்தித்துக்கொண்டு ப்ரதிபத்தியுடனே கேட்டுவந்தார். ஒருநாள் ராஜகார்யாவஸரத்தினாலே சொன்ன அர்த்தத்தைக்கேளாமல் பொறுத்தருள வேணுமென்ன; மற்றைநாள் இவரெழுந்தருளாமலிருக்க அற்றைத் தினம் பராமர்சமின்றிக்கே யொழிய பிற்றைநாள் நாயனெழுந்தருளவில்லை யென்று பராமர்சித்து உடனே ஆளைவிட அவர்கள் சென்றறிவித்த விடத்து பேசாமலிருந்துவிட அவர்கள்சென்று திருமலையாழ்வாருக்கறிவிக்க, அவர், மற்றைநாளும் நாயனெழுந்தருளாதபடியினாலே தம்முடைய ஆர்த்தியெல்லாம் தோன்றும்படி கால்நடையாக நாயன் திருமாளிகைக்குச்செல்ல நாயன் நெடும்போது விளம்பித்து ஸேவைஸாதிக்க ஸேவித்து திருவடிகளிலே விழுந்து போரக்லேசிக்க நாயனாரும் உகந்தருளி, (க்ஷமித்தோம்) என்றுசொல்ல, காலக்ஷேபஸமயமாகையாலே அது நிறைவேறுந்தனையுமிருந்து அவர்களுடனே ஸ்ரீபாததீர்த்தஸ்வீகாரம் பண்ணினபின்பு நாயனாரும் திருமலையாழ்வாரை அமுதுசெய்து போரும்படி நியமிக்க, திருமலையாழ்வாரும் தளிகையை ஸ்வீகரிக்க அபேக்ஷிக்க உகந்தருளி தளிகை ப்ரஸாதம் ஸாதித்தருள, திருமலையாழ்வாரும், ப்ரஸாதஸ்வீகாரஞ் செய்தமாத்ரத்தில் பரமவிரக்தராய், (கூரகுலோத்தமதாஸநாயன் திருவடிகளேசரணம்) என்று பலகாலு மநுஸந்தித்துக்கொண்டு சென்று, ராஜகார்ய ஸமயத்திலேயும், ஒருவரை பேர்சொல்லி யழைக்கும்போதும், இப்படியே சொல்லத்தொடங்கினாராகையாலே இவருக்கு உந்மாதம் பிடித்ததாக வேணுமென்று ராஜபத்நிக்கறிவிக்க, அவளும் திருமலையாழ்வாரை யழைத்து வார்த்தைசொல்ல, இவரும் உத்தரத்துக்கு ப்ரத்யுத்தரஞ்சொல்லாமல், (கூரகுலோத்தமதாஸநாயன் திருவடிகளே சரணம், ஸகலகார்யமும் பத்ரம்) என்று இப்படியேசொல்ல, அவளும் நாங்கள் ஸ்த்ரீபாலர்களா யிருக்கிறபடியால் பிள்ளை ப்ரபுத்தனாகுந்தனையும் எல்லாவற்றிற்குந் தேவரீருண்டென்றிருந்தோம, அப்படியின்றிக்கே யொழிந்ததோவென்றுசோகிக்க, நீ சோகிக்கவேண்டா, பிள்ளை ஸமர்த்தனானான், எனக்கு நாயன் திருவடிகளை ஸேவித்துக்கொண்டிருக்கவேணும், நீ தவிர்க்க வேண்டா, ராஜகார்யத்தை அடிக்கடி விசாரித்துக் கொண்டு பிள்ளைக்குப் புத்திசொல்லிக்கொண்டு வருகிறேனென்று சொல்லி ஸமாதாநம்பண்ணி ராஜகார்யமும் விசாரித்துக்கொண்டு நாயன் திருவடி

களையறுவர்த்தித்து ஸகலார்த்தங்களையும் அருளிச்செய்யக்கேட்டு க்ர்தார்த்தராய் சிறிதுநாள் அங்கேதானே யிருந்து பிற்பாடு திருப்புல்லாணிக்கு ஸமீபத்திலே நாயனெழுந்தருளி யிருக்கிற "சிக்கிலி" என்கிறவூரிலே யெழுந்தருளி குருகுலவாஸம் பண்ணிக்கொண்டிருந்தார். நாயனாரும் தமக்கு பிள்ளை ப்ரஸாதித்த பரமார்த்தங்களை யெல்லாம் ப்ரஸாதித்தருளினார் ஆகையாலே (కూరకులోత్తమదాసముదారమ్) (கூரகுலோத்தமதாஸமுதாரம்) என்றருளிச்செய்தார்.

அநந்தரம் நாயன் தம்முடைய சரமகாலத்திலே திருமலையாழ்வாரை யழைத்தருளி விளாஞ்சோலைப் பிள்ளையிடத்திலே இன்னம் உமக்கு வேண்டிய அர்த்தங்களையெல்லாங் கேளுமென்றும், திருக்கண்ணங்குடிப் பிள்ளையிடத்திலே திருவாய்மொழியைக் கேளுமென்று மருளிச்செய்து, பிள்ளை திருவடிகளை த்யாநித்துக்கொண்டு திருநாட்டுக்கெழுந்தருளினார். அவர் குமாரரைக்கொண்டு நாயனுக்கு தீர்த்த திருவத்யயநமும் நடத்தியருளினார்கள். கூரகுலோத்தமதாஸநாயன் திருநக்ஷத்ரம் ஐப்பசியில் திருவாதிரை. அவர் தனியன், (లోకాచార్యకృపాపాత్రం కౌణ్డిన్యకులభూషణమ్ । సమస్తాత్మగుణావాసం వన్దేకూరకులోత్తమమ్॥ స్వయమాహూయ శైలేశం గురవేఽర్థప్రదానతః। లబ్ధోదారాభిధం కూరకులోత్తమమహం భజే) (லோகாசார்யக்ர்பா பாத்ரம் கௌண்டிந்யகுலபூஷணம் - ஸமஸ்தாத்மகுணாவாஸம் வந்தேகூரகுலோத்தமம் - ஸ்வயமாஹூயசைலேஶம் குரவேऽர்த்தப்ரதாநத: - லப்த்தோதாராபிதம் கூரகுலோத்தம மஹம்பஜே.)

அநந்தரம் திருமலையாழ்வாரும், திருக்கண்ணங்குடிப்பிள்ளை யருகே யெழுந்தருளி பிள்ளையை ஸேவித்து அடியேனுக்குத் திருவாய்மொழியின் அர்த்தமருளிச் செய்யவேணுமென்ன அவரும் அப்படியே தொடங்கியருளிச்செய்ய, அவர் தாத்பர்யப்ரதாநராய்க்கொண்டு தாத்பர்யார்த்தங்களையே ப்ரஸாதிக்க இவர் சப்தத்திற்கிசைய வருளிச்செய்யவேணு மென்று நிர்ப்பந்திக்க ஆகில் திருப்புட்குழி ஜீயர் பாடேறப்போமென்ன அவரும் அப்படியே புறப்பட்டுப் பெருமாள்கோயிலிலே யெழுந்தருளின வற்றைநாள் அவர் திருநாட்டுக் கெழுந்தருளின பன்னிரண்டாம் திவஸமாய் அவர்க்குத் திருநாராயணபலி நடக்க அத்தைக்கண்டு மிகவும் துக்கித்திருக்க, பெருமாள்கோயி லாசார்யர்களும் கோயில் பரிகரமனைத்துக் கொத்தும் திருமலையாழ்வாரை கோயிலுக்கு எழுந்தருளப் பண்ணுவித்துக்கொண்டுபோய் பெருந்தேவியாரையும் பேரருளாளரையும் ஸேவிக்கப் பண்ண, தீர்த்தம், சடகோபன், சாத்துப்படி, திருத்துழாய், திருமாலை முதலான வரிசைகள் ப்ரஸாதித்து பஹுமாநம் பண்ணி த்ர்சநப்ரவர்த்தகராக வாழ்த்தினார்கள். பிற்றைநாள் திருநாராயணபுரத்தினின்றும் நாலூர் பிள்ளையும் அவர்குமாரரான நாலூராச்சான் பிள்ளையுமெழுந்தருளி பேரரு

ளாளரை மங்களாசாஸநம்பண்ண வெழுந்தருள, அந்தவேளையிலே திருமலையாழ்வார், ஸந்நிதியிலே மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டு எழுந்தருளி யிருக்க, இவர்கள் திருமலையாழ்வா ரெழுந்தருளின செய்தியும் உள்ளே மங்களாசாஸநம் பண்ணியருளுகிறதும் அறியாமல் ஸந்நிதியிலே பின்னேநின்று "உள்ளே ஸேவிக்கிறவர் யார்?" என்றுகேட்க, கோயில் திருமலையாழ்வாரென்ன, மிகவும் உகப்பினாலே "கோயில்திருமலை பெருமாள் கோயிலன்றோ, பெருமாள் கோயிலிலே நமக்குத் திருமலையாழ்வாராகப் பெற்றோமே!" என்றருளிச் செய்துகொண்டு அவர் ஸந்நிதிவைஷ்ணவர்களுக்குப் பின்னேநின்று ஸ்ரீசடகோபனுக்கு திருமுடியை உயரவெடுத்தருள ஸ்ரீசடகோபன் திருமுடியிலே தரிக்கிறவளவிலே, தம்முடைய திருவிரலாலே யூன்ற அர்ச்சகரும் சீக்கிரமாக ஸந்நிதியிலே ஸ்ரீசடகோபனை யெழுந்தருளப் பண்ணிவைத்து திருமலையாழ்வார் திருக்கையைப்பிடித்து பின்னேவருகிற நாலூர்பிள்ளையை, (அருளாளர் திருவடிகளை யூன்றினவரே) என்றழைத்து திருமலையாழ்வாரை அவர்கையிலே காட்டிக்கொடுத்து, "இவருக்கு மூவாயிரவ்யாக்யானம் ஸாதிக்கும்படி ஜ்யோதிஷ்குடியிலே நியமித்தோம், இவர் வந்தார், திருப்புட்குழி ஜீயர்பாடே ஈடேறாத இழவுதீர அத்தையும இவருக்கு ஸாதியும்" என்று பரவசராய் நியமிக்க, பிள்ளையும், "அடியேன் போரவர்த்தனேன், திருக்கண்ணங்குடிப்பிள்ளை போராத விவருக்கு நினைவுகெடச் சொல்ல வல்லேனோ"என்று சிந்தித்து நிற்க மனமொத்தநாதனை பேரருளாளர், (ఆత్మావైపుత్రనామాసి) (ஆத்மாவைபுத்ரநாமாஸி) என்று ஆச்சான்பிள்ளை ஸாதித்தால் நீர்ஸாதித்ததாமென்று நியமித்தருள; "நாயன்றே நாயன்றே" என்று உகந்து புறப்பட்டருளி வாரீர் திருமலையாழ்வாரே ! நாம் போரஜரித்தோம், நீர் அதிநிபுணர், உமக்குத் தகும்படி சொல்லவல்லவர் இவர் என்று * நல்லமகனான ஆச்சான்பிள்ளை கையிலே காட்டிக்கொடுத்து, தமக்குத் திருநாராயண புரத்துக் கெழுந்தருளத் திருவுள்ளமாய் புறப்பட்டெழுந்தருளினார்.

திருமலையாழ்வாரும், "க்ருதார்த்தனேன்" என்று ஆச்சான்பிள்ளை திருவடிகளிலே ந்யஸ்தபரராயிருக்க இவரைக் கைக்கொண்டருளித் திருவாய்மொழி யீடுதொடங்கி நடத்தியருளாநிற்க, இத்தைத் திருநாராயண புரத்தில் ஆயி, பிள்ளை தொடக்கமானவர்கள் கேட்டு இவரை யெழுந்தருளும்படி எம்பெருமானாருடைய திருமுகமாக திவ்யாஜ்ஞை யிட்டுவிட அத்தைக்கண்டு ஆச்சான் பிள்ளை திருமலையாழ்வாரைக் கூட்டிக்கொண்டு திருநாராயணபுரத்தேற வெழுந்தருள அவர்களும் எதிர்கொண்டு திருவடிகளை ஸேவித்து எழுந்தருளப் பண்ணுவித்துக்கொண்டு போர (ఆరుహ్యమలయాదవాద్రిశిఖరం కల్యాణతీర్థం తతః స్నాత్వా లక్ష్మణయోగినః పదయుగం నత్వా తుగత్వా న్తతః । శ్రీనారాయణ మిత్యత్ర ధరణీపద్మాలయామధ్యగం పశ్యేయం యదికిం తపఃఫలమతః సమ్పత్కుమారం హరిమ్) (ஆருஹ்யாமலயாதவாத்ரிசிகரம் கல்யாணதீர்த்தம் ததः ஸ்நாத்வா லக்ஷ்மண யோகிந: பதயுகம் நத்வா துகத்வாந்தத: । ஸ்ரீநா

ராயணமேத்ய தத்ரதரணீ பத்மாலயாமத்யகௌபஸ்யேயௌதிகௌ தபரீ பல மத: ஸம்பத்குமாரம்ஹரிம்) என்றும் சொல்லுகிறபடியே க்ரமத்திலே பெரிய ப்ரீதியோடே சென்று திருநாராயணன் திருவடிகளை அரணாகப்பற்றி அங்கே இனிதமர்ந்தெழுந்தருளி யிருக்கிற எம்பெருமானாரை ஸேவித்து அவர் புருஷகாரமாக யதுகிரிநாயகியாரையும் செல்வப்பிள்ளையையும் திருநாராயணனையும் ஸேவித்து அங்கே யெழுந்தருளி யிருந்து எம்பெருமானார் ஸந்நிதியிலே தொடங்கி, (௰ றுபெருஞ் செல்வம்) இத்யாதிப்படியே அவருக்குக்கப்பாக அங்கே ஆச்சான்பிள்ளையுடனே ஈடு முப்பத்தாறாயிரமுங் கேட்டார்கள்; அவரும் (மேலோர்க்கீந்தார்) என்னும்படி ப்ரஸாதித்தருளினார். திருமலையாழ்வாரும் அவர் திருவடிகளைப்பழுக்கஸேவித்து * அரியவருளிச்செயல் பொருளை ஆரியர்களெல்லாரும் உகக்கும்படிக்குக் கேட்டருளினார். பின்பு தேவராஜரும் இவருடைய ஜ்ஞாநபக்தி வைராக்கியாதி குணபூர்த்தியைக்கண்டுகந்து இவரை விசேஷாபிமாநம் பண்ணியருளி தம்முடைய திருவாராதநமான * இனவாயர்தலைவனை இவர்க்கு ப்ரசாதித்தருளினார். (దేవాధిపాత్సమధిగమ్యసహస్రగీతే ౦ భాష్యం నికూఢమభియద్ప్రథయాఞ్చకార । కుంతీపురోద్భవమముంశరణం భజేహం శ్రీశైలనాథమురుభక్తిధృతంశఠారౌ) (தேவாதிபாத்ஸமதிகம்யஸஹஸ்ரகீதேர் பாஷ்யம் நிகூடமபியஃ ப்ரதயாஞ்சகார - குந்தீபுரோத்பவமமும் ஶரணம்பஜேஹம் ஸ்ரீசைலநாதமுருபக்தி பர்தம்சடாரௌ) என்கிறபடியே தேவப்பெருமாள் கைக்கொண்டருளுந் திருமலை யாழ்வாருக்கு ஆழ்வார்திருவடிகளிலே ப்ராவண்ய மதிசயித்து அவர் திருவடித் தொழவேணு மென்கிற அபிநிவேசத்தை யுடையாராய், (ఆజగామ ముహూర్తేన) (ஆஜகாமமுஹூர்த்தேந) என்கிறபடியே அவரெழுந்தருளியிருக்கும் திருக்கணம்பி யென்கிற திருப்படை வீட்டைக்குறித்து அங்கேசென்று அவர் திருவடிகளை ஸேவித்துத் தம்முடைய அபிநிவேசமெல்லாந் தீர்ந்து,

ஆழ்வாரைத் திருநகரியிலே திருக்குடிபுகுவிப்பதாகத் திருவுள்ளமாய், தாம் முந்தி திருநகரியேற வெழுந்தருளி காடுவெட்டிநாடாக்கி, (நல்லார்பலர்வாழ்குருகூர்) என்னும்படி குடியேற்றி ஆழ்வாரை யெழுந்தருளப் பண்ணுவித்துக்கொண்டு, (குருகூர்ச்சடகோபன்) என்னும்படி யதாஸ்தாநத்திலே யேறியருளப்பண்ணுவித்து, (శఠకోపమునింవన్దే శఠానాంబుద్ధిదూషకం। అజ్ఞానాంజ్ఞానజనకం తిన్త్రిణీమూలసంశ్రయమ్) (சடகோப முநிம்வந்தே சடாநாம் புத்திதூஷகம் - அஜ்ஞாநாஞ்ஜ்ஞாநஜநகம் திந்த்ரிணீமூலஸம்ஶ்ரயம்) என்கிறபடியே உறங்காப்புளிசிழல் தன்னிலேயேறியருளப்பண்ணிஸேவித்துநிற்க, இவர்க்கு ''சடகோபதாஸர்'' என்று தம்முடைய திருநாமத்தை யதார்த்தநாமமாம்படி ப்ரஸாதித்தருள, இவரும் (ప్రసాదలబ్ధపరమప్రాప్య కైఙ్కర్యశాలినే) (ப்ரஸாதலப்தபரமப்ராப்ய கைங்கர்யசாலிநே) என்னும்படி * பெரியவண்குருகூர் நகர்நம்பிக்காளாரியனாய் (புகழ்வண் குருகையும் பொற் கோபுரமும் புரிசைசூழ்கழனி தண்பொருநை மன்னாழ்வார் மறைத்தமிழாயிரமுந் திகழும்படிசெய்த ச்ரீசைலேசர்) என்னும்படி ஆழ்வார் திருவடிகளிலே

அசேஷசேஷ வ்ர்த்திகளிலும் அந்வயித்து அதுவேயாத்ரையாய்ப் போரா நிற்கிறகாலத்திலே;

விளாஞ்சோலைப்பிள்ளையைஸேவித்து விசேஷார்த்தங்களைக் கேட்க வேணுமென்று திருவுள்ளமாய்த் திருவநந்தபுரத்தேற வெழுந்தருளி ஆழ்வாருடைய தமர்களில் ப்ரதாநரான வாசிதோற்ற * படமுடையரவிற் பள்ளிப்பயின்றவன் பாதங்கண்டுபணிந்து, அநந்தரம் (கண்ணன்கழலிணைகாட்டுமூலகாரியன்றாள், நண்ணுநலந்திகழ்நாரணனை) என்று சொல்லும்படியான விளாஞ்சோலைப்பிள்ளையைத் திருவடித்தொழுவதாக அவரெழுந்தருளியிருக்கிற *வாசமேகமழுஞ்சோலையான திருச்சோலைக்குள்ளேசென்று ஸேவிக்க, (గురుపాదాంబుజం ధ్యాయేత్ గురోర్నామ సదా జపేత్) (குருபதாம்புஜம் த்யாயேத் குரோர்நாமஸதாஜபேத்) (శ్రీలోకార్య ముఖారవిన్దమఖిలశ్రుత్యర్థకోశం సతాం యద్గోష్ఠీషు వరేణదీనమనసా సఞ్చిన్తయన్తం సదా) (ஸ்ரீலோகார்யமுகாரவிந்தமகிலச்ருத்யர்த்தகோசம் ஸதாம் யத்கோஷ்டீஷுவரேணதீநமநஸாஸஞ்சிந்தயந்தம்ஸதா) என்றும் சொல்லுகிறபடியே பிள்ளைலோகாசார்யருடைய திவ்ய மங்களவிக்ரஹத்தையும் அவருடைய திருவோலக்கத்தையும் த்யாநித்துக் கொண்டு தம்முடைய திருமேனியிலே சிலந்திநூலிழைக்கும்படி அஸ்தமிதாந்யபாவராய் நாலாறுநாள் ஸமாதியாக வெழுந்தருளியிருந்து அநுபவித்து, பின்புஇவரைக்கண்டு இவர்க்குஸகலார்த்தங்களையும்ஸாதிக்க இவரும்கேட்டு க்ர்தார்த்தராய் வேதகப்பொன்னன இவர்ஸம்பந்தத்தாலே தம்முடையஜந்மக்கொத்தையைக்கழித்துக்கொண்டுமீண்டு திருநகரியேற வெழுந்தருளினார். விளாஞ்சோலைப்பிள்ளையும் வசநபூஷணத்தின் தாத்பர்யங்களை ஏழுகாதையாக ஸங்க்ரஹித்து அருளிச்செய்து ஸர்வருக்குமுபகரித்தருளி தாமும், (செற்றிபொழிலனந்த புரத்தண்ணலார் கமலபாதமணுகுவாரமரராவார்) என்கிறபடியே * அயர்வறுமமரர்களோடேகூடி அடிமைசெய்யவேணுமென்கிற ப்ராப்யத்வரையாலே தடுத்தும் வளைத்தும் பெறவேண்டும்படி பரமபக்தி தலையெடுத்து * அவாவற்றுவீடுபெற்றார்.

அப்போது நம்பிமார் திருவாராதநம் செய்யாநிற்க விளாஞ்சோலைபிள்ளை திருவடித் தொழச்சென்று கர்ப்பக்ர்ஹத்திலே புகுந்து திருவடியருகே நிற்கக்கண்டு நம்பிமாரும், அது மலையாளதேசமாகையாலே புலையரான விளாஞ்சோலைப்பிள்ளை யகத்து நாம் போகிறதில்லை என்று திருக்காப்புச் சேர்த்துக்கொண்டு புறப்பட அவ்வளவிலே அவர் ஸ்ரீபாதத்துமுதலிகள் ''விளாஞ்சோலைப்பிள்ளை லோகாசார்யர் திருவடிகள் சேர்ந்தார்'' என்று நாற்றந்தாதி இயலுடனே பரிவட்டம் திருமாலைக்கு கோயில் வாசலிலே வரக்கண்டு நம்பிமார் ப்ரத்யக்ஷமாகக்கண்ட ஆஶ்சர்யத்தை அனைவருக்கும் வெளிப்படுத்தினார்களென்று ப்ரஸித்தமிறே. இச்செய்தியை யறிந்து திருமலையாழ்வார் ஸ்ரீபாதத்துமுதலிகள், (గత్వా నన్తపురం జగద్గురుపదధ్యానేరతంస్తచ్చిత్తన్నారాయణదాసమేత్యవిమలంనత్వాతదఙ్ఘ్రిం ముదా।

తస్మాదార్యజనోక్తిమూక్తికకృతం వేదాన్తవాగ్భూషణం (శ్రీవాగ్భూషణమప్యవాప్యసగురుశ్శ్రీశై లనాథోభవత్) (கத்வாநந்தபுரம் ஜகத்குருபதத்யாகேரதம் குத்ரசித்தந்நாராயணதாஸமேத்யவிமலம் நத்வாததங்க்ரிம்முதா · தஸ்மாதார்யஜநோக்திமௌக்திககர்தம் வேதாந்தவாக்பூஷணம் ஸ்ரீவாக்பூஷண மப்யவாப்யஸ குருஸ்ஸ்ரீசைலநாதோபவத்) என்றநுஸந்தித்தருளினார்கள்.

இத்தைத் திருமலையாழ்வார் கேட்டருளி சிஷ்யபுத்ரர்கள் செய்யும் க்ர்த்யங்களெல்லாம் பிள்ளைவிஷயத்திலே அநுஷ்டாநசேஷமாம்படி அநுஷ்டித்துக் காட்டியருளினார். இப்படி இவருடைய சரமசேஷி விஷய சரமாநுவர்த்தநத்தை யறிந்தவர்கள், (பற்றுதவெங்கள் மணவாள யோகி பதம்பணிந்தோன் - நற்றேவராசனலந்திகழ் நாரணதாதருடன் - கற்றெங் கூரகுலோத்தமதாதன் கழல்பணிவோன் - மற்றுருமொவ்வாத் திருவாய்மொழிப்பிள்ளை வாழியவே) என்று அநுஸந்தித்தார்கள். (வாழி நலந்திகழ் நாரணதாதன் வடிவும், வாழியவனமுதவாய்மொழிகள், வாழியவே, ஏறுதிருவுடையானெந்தை யுலகாரியன்சொற், றேறுதிருவுடையான்சீர்) என்று தாமும் அநுஸந்தித்தருளினார். பின்பு திருமலையாழ்வார் தம்முடைய திருமருமகனாரை புத்ராபிமாநம்பண்ணி, "தேவப்பெருமாள்" என்று நாலூராச்சான்பிள்ளை திருநாமஞ்சாத்தியருளினார்.

இனி பிள்ளைலோகாசார்யர் சிஷ்யராய் கொல்லிகாவலதாஸரான கோட்டூரழகியமணவாளப்பெருமாள் பிள்ளையும் லோகாசார்யர் ப்ரஸாதித்தருளின அர்த்தவிசேஷங்களை அநுஸந்தித்துக்கொண்டு நிக்கில் கிடாரமென்கிற க்ராமத்திலே சிலநாளெழுந்தருளியிருந்தார். பின்பு திகழக்கிடந்தான் திருநாவீறுடைய பிரான் தாதரண்ணரையர் அங்கே அவர் குமாரத்தியான ஸ்ரீரங்கநாய்ச்சியாரைத் திருமணம் புணர்ந்து அவர் திருமாளிகையிலே யெழுந்தருளியிருந்து தமக்கு ஜ்ஞாதவ்யார்த்தங்களை யெல்லாம் அவர் ஸந்நிதியிலேயே கேட்டருளி பிள்ளைலோகாசார்யர் ஸந்நிதியிலே கேளாத இழவெல்லாந் தீர்ந்து, அந்த க்ர்தஜ்ஞதைக்கு (வாழி மணவாளன் வாழியவன் வீரநகர், வாழியவன் சூரவைமண்ணின்மேல், வாழி, உலகாசாரிய னுரைத்த பொருள்களெல்லாம், பலகாலுரைக்கு மவன் பண்பு) என்றநுஸந்தித்து அவரைப் பிள்ளைலோகாசார்யராகவே ப்ரதிபத்தி பண்ணிக்கொண்டு அவருக்கு அநந்யார்ஹராய் அநுவர்த்தித்துப் போந்தார். இப்படி அவருக்கு அசேஷ ரஹஸ்யங்களையும் ஸாதித்து சிலநாள் கழிந்தவாறே அழகிய மணவாளப்பெருமாள் பிள்ளையும் திருநாட்டுக் கெழுந்தருளினார்,

இப்படி ப்ரபத்தி மார்க்கமானது ஸங்குசிதமாக நடந்து செல்லுகிற காலத்திலே, ஸ்ரீயப்பதியாய் பரமகாருணிகனாய் * திருவரங்கத்தரவணையிலே, (உறங்குவான்போல் யோகுசெய்த) என்கிறபடியே ஜகத்ரக்ஷண சிந்தாயுக்தனாய்க் கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாள், மீண்டும் தர்சநம் இப்படி * ஓராண்வழியாய் வருகிறபடியைக்கண்டு எம்பெருமானாரைப்

போலே லோகமெல்லாமுஜ்ஜீவிக்கும்படி ஒருவிஷயத்தை யுண்டாக்குவோ மென்று யோசித்து இனி "இதற்கு ஆவாரார்" என்று தேடி, திருவநந்தாழ்வானை ஜகத்தைத் திருத்தும்படி நியோகித்தருள அவரும் அப்படியே (తత స్తదిఙ్గితం తస్య జానన్నేవ జగన్నిధేః । తస్మిన్ ధామ్ని శఠారాతేర్ధీరే పునరవాతరత్ ॥) (ததஸ்ததிங்கிதம்தஸ்ய ஜாநந்நேவஜகந்நிதேः - தஸ்மிந தாம்நிசடாராதேர்தீரே புநரவாதரத்) என்றும, (శంసన్తిసమయం తస్య తులాం ప్రాప్తే త్విషాంపతౌ । మూలం సకలవృద్ధీనాం మూలర్క్షం ప్రచక్షతే) (ஸம்ஸந்திஸமயம்தஸ்ய துலாம் ப்ராப்தேத்விஷாம்பதௌ - மூலம்ஸகலவர்த்திநாம் மூலரிக்ஷம்ப்ரசக்ஷதே) என்றும், (యన్మూలమాశ్వయుజమాస్యవతారమూలం కాన్తోపయన్తృయమునగకరుణైకసిన్ధోః । ఆసీ త్సపత్నగణితస్య మమాపిసత్తాం మూలం తదేవ నిగమాబ్ధివిచక్షణమూలమ్) (யந்மூலமாச்வயுஜமாஸ்யவதாரமூலம் காந்தோபயந்தர்யமிநஃ கருணைகஸிந்தோः - ஆஸீத ஸத்ஸங்கணிதஸ்ய மமாபிஸத்தாம் மூலம் ததேவஜகதப்யுதயைகமூலம்) என்கிறபடியே திருவநந்தாழ்வானும் தம்முடைய திருவவதாரத்துக்கு இடம்பார்த்து ஆழ்வார் திருநகரியிலே அண்ணர்தேவிகள் கர்ப்பத்தை யடைந்து நவமாஸம் சென்றவாறே, (ప్రాప్తే రోపంగ తాసాం కలియుగశరది శ్రద్ధరాయే శకాబ్దే వర్షే సాధారణాఖ్యే సమధిగతతులేవాసరే తీరపక్షే । వారే జీవే చతుర్థ్యాం సమజని చతిథౌ శుక్లపక్షే సుకర్మాభూజిజ్ఞ మూలాఖ్యతారే యతిపతిరపరో రమ్యజామాతృనామా) என்கிறபடியே கலி யுகம்பிறந்து நாலாயிரத்து முநநூற்று எழுபத்தொரு வருஷத்திறகுப் பின்பு ஸாதாரணவருஷம் ஐப்பசிமாஸத்தில் சுக்லபக்ஷத்தில் சதுர்த்தியும் வ்யாழக்கிழமையுங்கூடின திருமூலத்திலே உபயவிபூதியும் கொந்தளிக்கும் குடியையுடையரான திகழக்கிடந்தான் திருநாவீறுடைய பிரானதாதாண்ணரையருக்கு குமாரராகத் திருவவதரித்தருளினார்.

அநந்தரம், (యస్మిన్ స్వపాదపద్మేన పస్పర్శ పృథివీమిమామ్ । కలిశ్చ తత్క్షణే నైవ దుద్రువే దూరతస్తరామ్) (யஸ்மிந்ஸ்வபாதபத்மேநபஸ்பர்ஸபர்திவீமிமாம் - கலிஸ்சதத்க்ஷணேநைவதுத்ருவே தூரதஸ்தராம்) என்று இவர்கள்கால்காண கலி கால் பறந்தோடிற்று.

இப்படி ஸமஸ்தாத்ம ஸமுஜ்ஜீவந ஜநமாவாக அவதரித்தருளின தம் முடைய குமாரருக்கு அண்ணரும் ஜாதகர்மம செய்தருளி * பத்துநாளுங் கடந்த விரண்டாநாள் திருவிலச்சினையும் பரஸாதித்து, (శంసన్తి సమయే తస్మిన్ తులాం ప్రాప్తే త్విషాంపతౌ । అథ తస్య గురుశ్శ్రీమాన్ మత్వా తం మర్త్యతేజసమ్ ॥ అభిరామవరాధీశ ఇతి నామ సమాదిశత్) (ஸம்ஸந்திஸமயே தஸ்மின் துலாம்ப்ராப்தே த்விஷாம்பதௌ - அததஸ்யகுருஸ்ஸ்ரீமாந்மத்வாதம்மர்த்யதேஜஸம் - அபிராமவராதீச இதி நாமஸமாதிசத்) என்கிறபடியே * பணவாளரவணைப் பற்பலகாலமும் பள்ளிகொள் மணவாளரான அழகிய மணவாளப் பெருமாளுடைய திருநாமம் சாத்தி, (ஆயர்புத்திரனல்லனருந் தெய்வம) என்றும், (என்னையுமெங்கள் குடிமுழுதாட்கொண்ட மன்னன்) என்றுஞ் சொல்லுகிறபடியே விசேஷ ப்ரதிபத்தியுடனே மாதுலக்ர்ஹமான சிக்கிலகிடாரத்திலே வர்த்திப்பித்துக்

கொண்டுபோர ; இவரும், (పరభక్తిః పరజ్ఞానం పరమాభక్తిరిత్యపి । వపుషావర్ధమానేన త్రిస్యవస్థేత్రయమ్) (பரபக்திப்பரஜ்ஞாநம்பரமாபக்திரித்யபி - வபுஷாவர்த்தமாநேநதத்தஸ்யவவர்த்தேத்ரயம்) என்றும், (உன்வளர்த்தியூடேவளர்கின்றதாலுன்றன்மாயை தானே) என்றுஞ் சொல்லுகிறபடியே நாடோறும்வர்த்தித்துக்கொண்டு போராநிற்கிற தம்முடைய திவ்யவபுஸ்ஸோடே பரிணதங்களாயவருகிற ப்ரபக்த்யாதிகளை வடிவாக வுடையராய் வளர்ந்து செல்லுகிறகாலத்திலே, மீளவும் தமப்பனாரான அண்ணர், (ప్రాప్తాన్ ప్రాథమికేవర్ణే కల్పజ్ఞానకల్పయన్తియాన్ । కాలేకాలేచసంస్కారాన్ తస్యచక్రేక్రమేణసః) (ப்ராப்தான் ப்ராதமிகேவர்ணே கல்பஜ்ஞாநகல்பயந்தியான்-காலேகாலேசஸம்ஸ்காராந்தஸ்யசக்ரேக்ரமேணஸஃ)என்கிறபடியே சௌளோபநயநங்களையும் சாஸ்த்ரப்ரகாரத்தாலே தத்தத்காலத்திலே செய்வித்து வேதசாஸ்த்ரங்களையும் அதிகரிப்பித்துக்கொண்டு போராநிற்க.

அநந்தரம் (ఆతామ్రపాదమాజాను భుజమమ్బుజలోచనమ్। ఆకారమస్యసంపశ్యన్ ముగ్ధోపిముముదేజనః) (ஆதாம்ரபாதமாஜாநு புஜமம்புஜலோசநம் - ஆகாரமஸ்யஸம்பஶ்யந் முக்த்தோபிமுமுதேஜநஃ) என்றும், (సౌశీల్యేనసుహార్దేన గామ్భీర్యేణకరీయసా। రఞ్జయన్ప్రజానాథా రామోయమితిమేనిరే) (ஸௌசீல்யேந ஸௌஹார்த்தேந காம்பீர்யேணகரீயஸா - ரஞ்ஜநேந ப்ரஜாநாம்ச ராமோயமிதி மேநிரே) என்றுஞ் சொல்லுகிறபடியே அகில ஜநங்களையும் ஆநந்திப்பித்துக்கொண்டு, (కాలేనసకలానాంచ కలానామేకమాస్పదం। శశీశతతంపూర్ణః సుధాంశురివనిర్మలః) (காலேநஸகலாநாம்ச கலாநா மேகமாஸ்பதம் - ஶஶீஶபே ஸததம்பூர்ணஸ் ஸுதாம்ஶுரிவ நிர்மலஃ) என்கிறபடியே பாலசந்த்ரனானவன் நாடோறும் கலைகளாலே வர்த்தித்துக்கொண்டு பூர்ணனாய் விளங்குமாப்போலே இவரும் ஸகலகலாபூர்த்தியால் வந்த பரிபூர்ண ஜ்ஞாநத்தாலே நிரதிசய வைபவத்தையுடையரா யெழுந்தருளியிருந்தார்.

இனிக்கோயில் வர்த்தாந்தம்; --அக்காலத்திலே அங்கிருந்த மஹாத்மாக்கள் நாடோறும் பூர்வம்போலே(ஸ்ரீமந ஸ்ரீரங்க ஸ்ரியமநுபத்ரவாமநுதிநம்ஸம்வர்த்தய) என்று ஸ்ரீரங்கைச்வர்யம் நித்யமாய் நிரவதிகமாய் நிர்விக்நமாய்ச் செல்லவேணுமென்று திருப்பல்லாண்டும், ஏழையேதலனும் * ஆழியெழச்சங்கும் அநுஸந்தித்து பெருமாளைப்ரபத்தி பண்ணிப் போருகையாலே அந்த மங்களாசாஸநம் பலித்து, செஞ்சியில் கோபணார்ய னென்பாரொருவைஷ்ணவப்ரபு, திருப்பதிக்குச் சென்று * திருவேங்கடத் தெம்பெருமானைத் திருவடித்தொழுது மீண்டுவருகிறவன் அங்கே நம்பெருமாளை ஸேவித்து, திருப்பதியினின்றும் நம்பெருமாளை தன்னுடைய நகரமான செஞ்சியேற எழுந்தருளப் பண்ணுவித்துக்கொண்டுவந்து சிங்கராயபுரத்திலே யெழுந்தருளப் பண்ணி அவனைத்தழுகுங் கண்டருளப் பண்ணிக் கொண்டிருந்து பக்திபுரஸ்ஸரமாக ஆராதித்துக்

கொண்டிருக்க, திருமணத்தூண் நம்பியாகிய சிங்கப்பிரானும் காட்டிக் கொடுக்க பகவத்விட்டுக்களான துருஷ்கரை யடக்க ஸமயம் பார்த்து திர வதிகபலஸஹிதராய்ச் செஞ்சியார்சென்று நிஶ்ஶேஷமாக நிரஸித்து ஸ்வ நகரத்தினின்றும் * திருவரங்கன் திருப்பதியேற நம்பெருமாளைப்பிராட்டி மாருடனே எழுந்தருளப்பண்ணி வைத்துக்கொண்டு யதாஸ்த்தாநத்தில் பெரிய பெருமாளுடனே சேர்த்து ப்ரதிஷ்டிப்பித்து அனைத்தழகுங் கண்டருளப்பண்ணினானிறே. ఆనీయానీలశృంగద్యుతిరచితజగద్రఞ్జనాదఞ్జనాద్రేశ్చె ఞ్జ్యామారాధ్యకఞ్చిత్ సమయమథనిహత్యోద్ధనుష్కాంస్తురుష్కాన్ । లక్ష్మీక్ష్మాభ్యాముభాభ్యాం సహ నిజనిలయేస్థాపయద్రఙ్గనాథంసమ్యక్చర్యాం సపర్యామకృతనిజయశోదర్పణోగోపణార్యః) என்று இவ்வர்த்தத்தை அபியுக்தருமருளிச்செய்தாரிறே.

(கொங்குங் குடந்தையுங் கோட்டியூரும்பேரும், எங்குந்திரிந்து விளையாடும்) என்கிறபடியே * மயல்மிகுபொழில்சூழ் மாலிருஞ் சோலையி லும் * விரையார்பொழில் வேங்கடத்திலும் விஹரித்து ப்ரதிபக்ஷநிரஸந பூர்வகமாக (கோயில்பிள்ளா யிங்கேபோதராயே) என்னும்படியான தாம் மீண்டு கோயிலேற வெழுந்தருளி, பஹுப்ரியமான சகாப்த்தம் ஆயிரத் திருநூறு சென்ற வர்த்தமாந பரீதாபிநாமஸம்வத்ஸரம் வைசாகமாஸம் பதினேழாந்தேதியில் அரங்கநகரானது, (రామస్సీతామనుప్రాప్యరాజ్యంపునరవాప్తవాన్) (ராமஸ்ஸீதாமநுப்ராப்ய ராஜ்யம் புநரவாப்தவாந்) என்றும், (திரு மகளோடினிதமர்ந்தசெல்வன்) என்றும், (வீற்றிருந்த மணவாளர் மன்னு கோயில்) என்றும் சொல்லுகிறபடியே அழகியமணவாளரானதாம் நாய்ச்சி மாருடனேகூட்சேர பாண்டியன் என்கிற திவ்யஸிம்ஹாஸநத்திலே சேர்த்தி யுடனே யேறியருளி இனிதுடன்வீற்றிருந்து * செங்கோலுடைய திரு வரங்கச் செல்வனாரென்னுமதுதோன்ற திருவாராதநங் கண்டருளி வாழ்ந் தருளாநிற்க; அச்செய்தியை தேசாந்தரஸ்த்தரான ஸ்ரீவைஷ்ணவர்க ளெல்லாரும் கேட்டு, (బహూనినామవర్షాణి గతస్యసుమహద్వనమ్।శ్రుణోమ్యహం ప్రీతికరం మమనాథస్యకీర్తనం) (பஹூநிநாமவர்ஷாணி கதஸ்யஸுமஹத்வநம் - ஶ்ரு ணோம்யஹம்ப்ரீதிகரம் மமநாதஸ்ய கீர்த்தநம்) என்கிறபடியே - நெடுங் காலத்திற்காக இப்போது பெருமாளெழுந்தருளப்பெற்றதே! என்று போரப்ரீதராய் அப்போதே * யாவருவந்தடிவணங்கி, (ప్రహృష్టముదితోలోకః) (ப்ரஹ்ருஷ்டமுதிதோலோகஃ) என்கிறபடியே அத்யந்தம் ஹ்ருஷ்டரா யிருக்க, பெருமாளும் (విజ్వరఃప్రమమోదహ) (விஜ்வரஃப்ரமுமோதஹ) என்கிற படியே * துளக்கற்றமுதமாய் எங்கும் பக்கநோக்கறியாதே ஸர்வரையுங் குளிர கடாக்ஷித்துக்கொண்டு * அன்பொடு தென்திசைநோக்கி அழகிய மணவாளப்பெருமாள் நாயனாரைக் கடாக்ஷித்துக்கொண்டு எழுந்தருளி யிருந்தார்.

அக்காலத்திலே, திகழக்கிடந்தான் திருநாவீறுடையபிரான் தாத ரண்ணர், தம்முடைய திருக்குமாரராக வளர்ந்தருளுகிற பரமபோகிந்த்ர

ரான அழகிய மணவாளப்பெருமாள் நாயனருக்குத் திருக்கலியாணமுஞ் செய்வித்து பின்பு அருளிச் செயல்களையும் ரஹஸ்யங்களையும் தாமே யோதுவித்தருளினர். அவரும் அந்த உபகாரத்திற் கீடுபட்டு, † (శ్రీజిహ్వాగ్ర్యాధీశం శ్రీశైలేశస్యదాసమమలశాస్త్రవిదం । సున్దరవరగురుకరుణా కన్దళితజ్ఞానమన్దిరంకలయే) (ஸ்ரீஜிஹ்வாக்ர்யாதீஶம் ஸ்ரீஶைலேஶஸ்ய தாஸ மமலசாஸ்த்ரவிதம் - ஸுந்தரவாகுருகருணைகந்தளிதஜ்ஞாநமந்திரம்கலயே) என்றும், (வாழி திருநாவீறுடைய பிரான்றூதனருள், வாழியவன்மாமை வாக்கின்பம், வாழியவன், வீரன்மணவாளன் விரைமலர்த்தாள்சூடி, பாரமறைத் தீர்த்தளித்த பண்பு) என்றநுஸந்தித்தருளினரிறே. பின்பு சிலகாலஞ் சென்றவாலே அண்ணரும் திருநாட்டுக்கெழுந்தருள அழகிய மணவாளப்பெருமாள் நாயனரும் அவரை ஸம்ஸ்கரித்துப் பள்ளிபடுத்துத் திருவத்யயநமும் பெருக்க நடத்தியருளினர்.

அநந்தரம், ஆழ்வார் திருநகரியிலே தர்சநப்ரவர்த்தகரா யெழுந்தருளியிருக்கிற திருமலையாழ்வாரும், இனி தர்சநப்ரவர்த்தக ராவாரா ரென்று விசாரித்துக்கொண்டு * தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலைகளான திருவாய்மொழி, * நிலத்தேவரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் * பக்தாம்ர்தமென்னும்படி பரமபோக்யமாக வவதரித்ததாகையாலே சப்தரஸம், அர்த்தரஸம், பாவரஸம், என்கிறவிவற்றை தத்தேகநிஷ்டராய், தத்வ்யதிரிக்த சாஸ்த்ரங்களை த்ர்ணவத் ப்ரதிபத்திபண்ணி யிருக்கையாலே திருவாய்மொழி ஸம்பந்தத்தையே தமக்கு நிரூபகமாக வுடையராய் ஆழ்வார் திருவடிகளில் கைங்கர்யமே அநவரதம் செய்துகொண்டு போராநிற்கிற திருவாய்மொழிப் பிள்ளையினுடைய திவ்யகடாக்ஷத்திற்கு விஷயமாம்படி, நாயனரும், (திருவனந்தாழ்வான் சகந்தன்னைத் திருத்த மருவிய குருகூர்வளநகர்வந்து) என்கிறபடியே ஸ்வமாதுலக்ர்ஹமான சிக்கில் கிடாரத்திலிருந்து தமக்கு ஜந்மபூமியான திருநகரியேற வெழுந்தருளி * பொருநற்செங்கணித் துறையிலே சங்குகள் சேருமாப்போலே * சங்க வண்ண நம்பியுடைய அவதாரமாகையாலே சுத்தஸ்வபாவரான தாமும், (திருவாய்மொழிப் பிள்ளை திருத்தாள் சேர்ந்து) என்கிறபடியே *மெஞ்ஞானத் துறையான பிள்ளை திருவடிகளிலே ஆஶ்ரயித்து, (అభిశ్రియదయనాథః శ్రీశైలాధీశనాథః) (அபிஶ்ரிய தயநாத: ஸ்ரீஶைலாதீஶநாத:) என்கிறபடியே (தேசந்திகழுந் திருவாய்மொழிப் பிள்ளை வாசமலர்ந்தாளடைந்தவத்து) என்னும்படி விலக்ஷணராய், (తతశ్శ్రుతధరస్సోయం తస్మాత్తస్యప్రసాదతః। అశేషానశ్రౌద్దివ్యాన్ ప్రబన్ధాన్ బన్ధనచ్ఛిదః) (ததஶ்ஶ்ருததரஸ்ஸோயம் தஸ்மாத்தஸ்ய ப்ரஸாததஃ-அஶேஷாநஶ்ரௌத்திவ்யான் ப்ரபந்தாந் பந்தநச்சிதஃ) என்கிறபடியே த்ராவிடவேத ததங்கோபாங்கங்களான ஸமஸ்த திவ்ய ப்ரபந்த தாத்பர்யங்களையும் அவருபதேச முகத்தாலே லபித்து, *மிக்கவேதி

† "శ్రీజిహ్వావదధీశమ్" ఎన్నుమ్ పాఠమ్.

யர் வேதத்தி னுட்பொருளான சரமபர்வத்திலே நிஷ்ட்டராய் சேஷித்வ சரண்யத்வ ப்ராப்யத்வங்கள் மூன்றையும் பிள்ளைவிஷயத்திலே அநுஸந்தித்து ததேகநிஷ்ட்டரா யெழுந்தருளியிருக்கிற விவரை பிள்ளை தாமே புகந்து உடையவர் திருவடிகளைக் காட்டிக்கொடுத்தருள இவரும் (உன்பத யுகமா மேர்கொண்டவீட்டை யெளிதினிலெய்துவன்) என்கிறபடியே பரம புருஷார்த்தத்தை ஸுலபமாக லபித்து அத்யந்தஹ்ருஷ்டரா யெழுந்தருளியிருக்க, அவ்வளவில் பிள்ளையும் ஆழ்வார் திருவடிகளிலே ப்ராவண்யாதிசயத்தாலே * அவரடிபணிந்து உய்ந்த எம்பெருமானார் திருவடிகளிலும் அதிப்ராவண்யத்தை யுடையராய்ப் போருகையாலே * ராமாநுஜ பதாம்போஜ த்வந்த்வ கைங்கர்யவர்த்தியிலே அந்வயிக்கவேணுமென்று திருவுள்ளமாய் அப்படியே தத்கைங்கர்யத்திலே அந்வயித்து அவகாஹித்து அதுவே தமக்கு தாரகாதிகளாகச் செய்துகொண்டு போருகிறவர், உடையவர்க்குத் தனிக்கோயில் தொடக்கமான அனைத்தழகும் கண்டருளப்பண்ணி, கோயிலைவளைய (ராமாநுஜசதுர்வேதி மங்கலம்) என்கிற திருவீதியையும் உண்டாக்கி, அங்கே * ராமாநுசனைத் தொழும் பெரியோரையும் ப்ரதிஷ்ட்டிப்பித்து; தாமும் ஸுகப்ரதிஷ்ட்டிதராய் எழுந்தருளியிருந்தார்.

அநந்தரம் நாயனாரும், தமக்கு ப்ராப்யமாகக் காட்டியருளின உடையவர் திருவடிகளிலே யதீந்த்ரப்ரவணர் என்னும்படி அத்யந்தம் ப்ராவண்யத்தை யுடையராய் தம்முடைய ப்ரேமாநுகுணமாக யதிராஜவிம்சதியை அவர் விஷயத்திலே அருளிச்செய்ய, அவ்வுபகாரத்திற்கு (வல்லார்கள் வாழ்த்தும் குருகேசர் தம்மை மனத்துவைத்துச், சொல்லாரவாழ்த்தும் மணவாளமாமுனித் தொண்டர்க்குமாம், எல்லாநலமுக்க வெதிராச விஞ்சதியின்றளித்தோன், புல்லாரவிந்தத் திருத்தாளிரண்டையும் போற்று நெஞ்சே) என்று பின்புள்ளாரு மநுஸந்தித்து ஈடுபடும்படியாயிற்று. இதைக் கேட்டுப் பிள்ளையும் உகந்தருளித் திருப்புளியாழ்வா ரருகேகண்டு தம்முடைய உடையவரையும் இவர்க்கு ப்ரஸாதித்தருள; இவரும் (శ్రీమద్యతీంద్ర తవదివ్యపదాబ్జసేవాం శ్రీశైలనాథకరుణాపరిణామ దత్తాం) என்று அநுஸந்தித்து ப்ரீதராய், (యతీన్ద్రమేవ నిరన్తరం నిషేవే దైవతంపరం) என்கிறபடியே தந்நிஷ்ட்டரா யெழுந்தருளியிருக்க, இப்படி ஆழ்வாருடையவும் எம்பெருமானாருடையவும் கைங்கர்யமே புருஷார்த்தமாக வெழுந்தருளியிருக்கிற பிள்ளையும், அப்போதைக்கப்போது அபிநவங்களாய் வர்த்தித்துக்கொண்டு போருகிற விவருடைய ஜ்ஞாநபக்த்யாதிகளைக் கண்டு அபிமதவிஷயத்தைக் கண்டாற்போலே ஆதரித்துக்கொண்டு போராநிற்க, பின்பொருநாள் திருநந்தவனத்தில் விளைகிற பச்சைக்கறியமுதை இவர்க்குப் போக விட்டருள இவரும் இப்படி செய்தருளுவதே! என்று விண்ணப்பஞ்செய்ய பிள்ளையும்உம்மைப்போலே யொருவிஷயத்தைப் பெறுகையாலே அர்ச்சாவதாரத்திலே மண்டினோமென்று அருளிச்செய்து தாமும் விரக்தராயிருக்

கச் செய்தேயும் இவருடைய ஸௌகுமார்யத்துக் கநுகுணமாக அமுது செய்தருளுகை தொடக்கமானவெல்லாஉபசாரங்களையுமாராய்ந்துகொண்டு போருகிறபடியையும், அங்கீகரித்தவன்று தொடங்கி பந்திபாவநராம்படி அபிமானித்து ஆதரித்துக்கொண்டு போருகிறத்தையுங்கண்டு ஸ்ரீபாதத்து முதலிகளுக்கு இவரிடத்திலே அஸூயை நடந்துசெல்ல இத்தைஸர்வஜ்ஞரான பிள்ளை யறிந்தருளி அவர்கள் அபசாரப்படாதபடி இவருடைய * சேஷாஹிபதிவேஷாந்தரத்தை எல்லாரும்ப்ரத்யக்ஷிக்கும்படி வாக்சாதுர்யங்களாலே காட்டியருளி அவர்களுக்கு இவரிடத்திலே விசேஷப்ரதிபத்தியை விளைப்பித்துப் போராநிற்க, இவரும் பிள்ளை திருவுள்ளத்தை உகப்பித்துக்கொண்டு அங்குத்தைக்கு விதேயராயிருக்கிறகாலத்திலே ஈடுமுப்பத்தாறாயிரமும் பாட மிட்டருளி மற்றுமுண்டான வ்யாக்யாநங்களையும் பாடப்ராயமாகப்பண்ணி யருளியிருக்கிற காலத்திலே நாயனாருக்கு குமாரர் திரு வவதரிக்க, (திருநாமமேது) என்று பிள்ளையைக் கேட்டருள ஒருக்கால் சொன்னாற்போலே நூற்றெட்டுத்தரம் சொல்லி யிருக்கிறதே யென்றருளிச்செய்ய, (எம்மையனிராமாநுசன்) என்று திருநாமம் சாத்தி யருளித்தாமும் * இராமாநுசன் திருநாமம் நம்பவல்லராய் வாழ்ந்துகொண்டு போராநிற்க;

ஒருநாள் ஒருதிருவாதிரை நக்ஷத்ரத்திலே பிள்ளையும் முதலிகளும் அமுது செய்தருளாநிற்க (இன்றோவெதிராசரிவ்வுலகிற்றோன்றியநாள், இன்றோகலியிருள்நீங்குநாள்) என்று பிள்ளைஈடுபட்டருளி மேல் அருளிச்செய்யமாட்டாமல் இத்தையே பலகாலுமருளிச்செய்துகொண்டிருக்க, அவ்வளவிலே நாயனாரும் (இன்றோதான், வேதியர்கள்வாழ விரைமகிழோன் றான்வாழ, வாதியர்கள் வாழ்வடங்குநாள்) என்று நாயனார் தலைக்கட்டியருள, இத்தைக்கேட்டபிள்ளை மிகவும்ப்ரீதராய் அமுதுசெய்யாநிற்க மத்யே தளிகை ப்ரஸாதம் ப்ரஸாதித்து மிகவும் க்ருபைபண்ணியருளினார். இப்படி சிஷ்யாசார்ய க்ரமம் நன்றாகநடந்து செல்லுகிறகாலத்திலே ஸ்ரீபராங்குசதாஸரான பெரியநம்பியை ஆச்ரயித்த ஏற்றம் எம்பெருமானார்க்கு உண்டானாற்போல சடகோபதாஸரான பிள்ளையை ஆச்ரயித்தவேற்றமிவர்க்குண்டாயிற்றென்று எல்லாரும் இவரை உடையவருடைய அவதார விசேஷமென்று ஆதரித்துக்கொண்டு போந்தார்கள். இப்படி அவதார விசேஷமான இவர் (வடமாமலைமுதல் மல்லனந்தபுரியெல்லைமல்கித், திடமாக வாழுந்திருவுடைமன்ன ரிற்றேசுடையோன், திடமான ஞான விரக்திபரமிவை சேர்கின்ற, சடகோபதாதர் குருகூர்வாழ் பிள்ளையைச்சேருநெஞ்சே) என்றும், (செந்தமிழ்வேதத் திருமலையாழ்வார்வாழி, குந்திநகர்க் கண்ணல்கொடைவாழி, உந்தியசீர், வாழியவனமுதவாய் மொழி கேட்டப்பொருளில், தாழுமற்றன்பர்த்திருத்தாள்) என்றும் இத்தனியன்களை பிள்ளைவிஷயத்திலே தாமுமநுஸந்தித்தருளினார். அநந்தரம் உகப்புடனே இங்கிருக்கும் காலத்திலே, பிள்ளை(అభ్యర్హ్యనద్భిరయంకరపఙ్కజా

త్తేణుం తదీయచరణ † ప్రవణార్ద్రచేతాః|గోదాపితుర్గహనసూక్తినిబన్ధనస్యవ్యాఖ్యాంవ్యధాద్ద్రవిడవేదగురుః ప్రపన్నః) அநந்தன் திருமலையாழ்வானென வந்தவதரித்து, தனந்தன் கைப்படிற்றுனஞ்செய்வனென்று தரணிதன்னில், அநந்தம்புரியச் சடகோபதாதருக் காட்செய்வது, இனந்தனிலெலாக்குமென் றெல்லோரும் பாவித்திருப்பதுவே) என்று பிள்ளையுடைய வைபவத்தை மற்றுமுண்டானவர்களு மநுஸந்தித்தார்கள்.

இப்படி ஜ்ஞாநபக்திவைராக்யங்களை வடிவாகவுடையராய் அத்தாலே வந்த மஹாப்ரபாவத்தை யுடையரானபிள்ளை கைங்கர்ய ஸ்ரீயோடே நெடுங்காலம் வாழ்ந்தருளி, பின்பு நித்யவிபூதியிலே நித்யகைங்கர்யதராய் வாழ்கையில் நினைவாய் (உத்தமனே யுலகாரியனே மற்றொப்பாரையில்லா, வித்தகனே நல்லவேதியனே தண்முடும்பைமன்னு, சுத்தநன்ஞானியர் நற்றுணையே சுத்தசத்துவனே, எத்தனைகாலமிருந்துழல்வே னிவ்வுடம்பைக் கொண்டே) என்று அதற்கு ப்ரதிபந்தகம் திருமேனியோட்டை ஸம்பந்தமென்று அறுதியிட்டு தத்விமோசநத்தையும் தம்தேசிகரிடத்திலே யபேக்ஷித்துக்கொண்டேயிருக்க, அவ்வளவிலே திருமேனியிலே நோவுசாத்தி மிகவுந்தளர்ந்து கண்வளர்ந்தருளுகிறவர் பெரியக்லேசத்துடனே மூசித்து எழுந்தருளியிருக்க இது என்னென்று நாயனார்தொடக்கமான முதலிகள் கேட்டருள, ''காலம்கலிகாலமாகையாலே ஆழ்வார்கள் திவ்யஸூக்திகளான அருளிச்செயலிலே ருசிவிச்வாஸங்களையுடையராய் இத்தை வளர்த்துப் போருவாராரென்று மிகவும் க்லேசமாயிராநின்றது'' என்ன, பின்பு நாயனாரும் திருவடிகளிலே ஸேவித்து அடியேன் அப்படியே செய்கிறேனென்ன, கேவலம் வார்த்தை போராதென்ன, நாயனாரும் திருவடிகளைத் தொட்டு சபத பூர்வகமாக அப்படியே செய்கிறேனென்றருளிச்செய்ய, பின்பு திருவுள்ளம்தேறி நாயனாரை யழைத்தருளி ஸம்ஸ்க்ருதசாஸ்த்ரங்களிலே பலகாலும் கண்வையாமல் ஸ்ரீபாஷ்யத்தை ஒருக்கால் கேட்டு நமக்கும் எம்பெருமானார்க்கும் ப்ரியமாக திருவாய்மொழி முதலான அருளிச்செயலிலே அநவரதம் பரிசீலநம் பண்ணிக்கொண்டு பூர்வர்களைப்போலே பெருமாளுக்கு மங்களாசாஸந பரராய்க்கொண்டு கோயிலிலே நித்யவாஸமாக எழுந்தருளியிருமென்று நியமித்தருளி மற்றுமுண்டானவர்களை யழைத்தருளி நாயனார் திருக்கைகளிலே காட்டிக்கொடுத்தருளி இவரை அவதார விசேஷமென்று ஆதரித்துப் போருங்கோளென்று அருளிச்செய்து ந்யஸ்தபரராய், பின்பு (மாகவைகுந்தங் காண்பதற்கு என்மனமேகமெண்ணும்) என்கிறபடியே அதிலே அபிவ்ருத்த மநோரதராய் பிள்ளை திருவடிகளை த்யானித்துக்கொண்டு வைசாக பஹுள அஷ்டமியில் கிரநாட்டுக் கெழுந்தருளினார்.

அநந்தரம், நாயனார் தொடக்கமான முதலிகளெல்லாரும் ஆசார்ய வியோகாஸஹிஷ்ணுக்களாய் அத்யந்தம் ஆர்த்தராய் கிலேசித்துத்

† ''ప్రథయాఞ్చ్రచేతః'' ఎన్ఱుమ్ పాఠమ్ కాణ్గిఱతు.

தேறி ப்ரஹ்மமேதஸம்ஸ்காரத்தாலே பள்ளிபடுத்து தீர்த்தங்கொண்டாடி பதின்மூன்றாந் திவஸத்திலே திருவத்யயநமும் நன்றாக நடத்தி யருளினார்கள். நாயனாரும் ப்ரதிவர்ஷம் வைகாசிமாஸத்தில் அபரபக்ஷத்தில் அஷ்டமிதோறும் ஸ்ரீ வைஷ்ணவர்களை நன்றாக வமுதுசெய்யப் பண்ணியருளி, முப்பழமு முண்டாகப் பெறுவதே! தீர்த்ததிவஸமென்று பரிபாலித்துக் கொண்டு எழுந்தருளியிருந்தார். பெண்களும் பேதைகளும் உஜ்ஜீவிக்கும்படி பரமார்த்த விசேஷங்களை ஸங்க்ரஹமாகப் பண்ணப்பெற்ற தன்னேற்றமும், பிரியில் தரியாமையை முன்னிட்டு பின்தொடர்ந்தடிமை செய்யப் பெற்ற தன்னேற்றமும், பிள்ளைலோகாசார்யருக்கே உள்ளதொன்றிறே. (శరీరమర్థం ప్రాణఞ్చ సద్గురుభ్యో నివేదయేత్) (ஶரீரமர்த்தம்ப்ராணஞ்சஸத்குருப்யோ நிவேதயேத்) என்கிறபடியே பரமாசார்யரான பராங்குசரையும், தத்ப்ரிய சிஷ்யரான வுடையவரையும் திருநகரியிலே ப்ரதிஷ்டிப்பித்து அனைத்தழகுங்கண்டருளப்பண்ணின தன்னேற்றமும், ஆழ்வார்கள் அருளிச்செயல்களை ருசிவிச்வாஸபூர்வகமாக ப்ரவர்த்திப்பித்துக்கொண்டு போந்த தன்னேற்றமும் திருவாய்மொழிப்பிள்ளை யொருவர்க்கே யுள்ளதொன்றிறே. இவர் திருநக்ஷத்ரம். வைகாசிவிசாகம். இவர் தனியன்;-(నమశ్శ్రీశైలనాథాయ కున్తీనగరజన్మనే । ప్రసాదలబ్ధపరమప్రాప్యకైఙ్కర్యశాలినే) (நமஶ் ஶ்ரீஶைலநாதாய குந்தீநகரஜந்மநே - ப்ரஸாதலப்த பரமப்ராப்யகைங்கர்யஶாலினே.)

அநந்தரம் நாயனாரும் ஆசார்யன் நியமித்தருளினபடியே திருவாய்மொழி முதலான அருளிச்செயல்களை வ்யாக்யாநமாக அநுசந்தித்துக் கொண்டு (తతస్తు మూలభూతేషు తేషు దివ్యేషు యోగిషు । వవృధే వర్ధయన్ భక్తిం వకుళాభరణాదిషు ॥ తథా తత్తత్ప్రబన్ధార్థసంప్రదాయప్రవర్తకాన్ । అయమాద్రియత శ్రీమానాచార్యానాదిమానపి) (ததஸ்துமூலபூதேஷு தேஷு திவ்யேஷு யோகிஷு - வவ்ருதே வர்த்தயந்பக்திம் வகுளாபரணாதிஷு - ததா தத்தத்ப்ரபந்தார்த்த ஸம்ப்ரதாயப்ரவர்த்தகாந் - அயமாத்ரியத ஶ்ரீமாநாசார்யாநாதிமாநபி) என்கிறபடியே விலக்ஷணப்ரமாண ப்ரமேயப்ரமாதாக்களிடத்திலே விசேஷ ப்ரதிபத்தியையுடையராய்த் திருநகரியிலே தர்சநத்தை வளர்த்துக்கொண்டு போருகிற நல்லடிக்காலத்திலே (శ్రీసౌమ్యజామాతృమునీశ్వరస్య ప్రసాదసమ్పత్ప్రథమాస్పదాయ) ஸ்ரீஸௌம்யஜாமாத்ரு முநீஶ்வரஸ்ய ப்ரஸாதஸம்பத்ப்ரதமாஸ்பதாய) என்கிறபடியே - அழகியவரதர், சேனை முதலியார் தொடக்கமானவர்கள் இவர் வைபவத்தைக் கேட்டுத்திருவடிகளிலே ஆச்ரயித்தார்கள். அவர்களில் அழகியவரதர், அப்போதே ஸந்யஸித்து இராமாநுஜ ஜீயரென்னும் திருநாமத்தையுடையராய், நாயனாருக்கு (நிழலுமடிதாறுமானோம்) என்னும்படி ஸதாபாதரேகாஸமராய் நாயனாரை நித்யஸேவை பண்ணிக்கொண்டுபோந்தார். இப்படி அநந்தரங்கரானவர்களோடே கூட எழுந்தருளி யிருக்கிறவர், (శుఢేనమనసా ధ్యాయన్) (ஶுத்தேநமநஸா த்யாயந்) என்கிறபடியே * அப்போது ஒரு சிந்தைசெய்து நமக்கெல்லாம் நற்சீவனமான நம்

பெருமாளை ஸேவித்துக்கொண்டு அத்தலைக்கு அதிசயாவஹராய் மங்களாசாஸநம்பண்ணிக்கொண்டு யாவத்தேஹாவஸாநம் அங்கேயிருக்கையன்றோ நமக்கு ப்ராப்தம் என்று அறுதியிட்டு அப்போதே ஆழ்வார் திருமுன்பே சென்றுஸேவித்து, * நண்ணாவசுரர் நலிவெய்த நல்லவமரர் பொலிவெய்த, எண்ணாதனகளெண்ணும் நன்முனிவரின்பந்தலைச் சிறப்ப, பண்ணார் பாடலின் கவிகளைப்பாடி தேவரீர் மங்களாசாஸநஞ்செய்தருளுகையாலே பெருமாளுடைய ப்ரதிபக்ஷங்களெல்லாம் நிரஸ்தமாய் பண்டுபோலேகண்டருளுகிறார், அடியேன் பெருமாளை ஸேவிக்கவிடைகொள்ளுகிறேனென்று விண்ணப்பஞ்செய்ய, அப்படியே நம்மாழ்வாரும் நம்பெருமாளைஸேவிக்க விடைகொடுத்தருளினார்.

அநந்தரம், (తతఃకతిపయైర్వర్షైర్దివసైర్వ్యపర్యగః । ఆజగామపరన్ధామశ్రీరఙ్గం మఙ్గళంమహః) என்கிறபடியே முதலிகளும்தாமுமாக, (எம்பெருமான் திருவரங்கமெங்கே) என்றுநாடிக்கொண்டு புறப்பட்டெழுந்தருளுகிறவர், * வில்லிபுத்தூருறைவான்றன் பொன்னடி காண்பதோராசையினாலே அங்கே யெழுந்தருளி வடபெருங்கோயிலுடையானையும் ஆழ்வாரையும் திருவடித்தொழுது, அநந்தரம், * அன்னவயற்புதுவை யாண்டாளையும், (నీళాతుఙ్గస్తనగిరితటీ) என்று தொடங்கி, (గోదాతస్యై నమఇదమిదం భూయ ఏవాస్తు భూయః) என்கிறபடியே ஸேவித்து, దేవస్యమహిషీందివ్యా మాదౌగోదాముపాసదత్ । యస్యాళిమాలికామేవ స్వీకరోతిస్వయంప్రభుః) என்கிறபடியே * சூடிக்கொடுத்தவள் தொலலருளால் வாழ்கின்ற வள்ளலாய் அங்குநின்றும்புறப்பட்டு * மாலிருஞ்சோலைதொழக் கருதி, (நெறிபடவதுவே நினைவதுநலமே) என்கிறபடியே மார்க்கசிந்தை பண்ணி அவ்வழியாலே அங்கே புக்கு, * பதியதுவேத்தி, அநந்தரம், * அழகர் தங்கோயிலிலே புக்கு * திருமாலிருஞ்சோலைநின்றான் கழைகழல் கழைக்கண்டு வணங்கித்தொழுது * முடிச்சோதியில் படியே (முடியார் திருமலையில்) என்று தொடங்கி, (முற்றுமநுபவித்தார்) என்னும்படி அநுபவித்து தீர்த்தப்ரஸாதங்களும் ப்ரஸாதிக்க ப்ரஸாதப்பட்டு, (విజ్ఞాపనాంవనగిరీశ్వరసత్యరూపాం మఙ్గీకురుష్వకరుణార్ణవమామకీనాం । శ్రీరఙ్గధామని యథాపురమేవసోఽహం రామానుజార్యవశగఃపరివర్తిషీయ)என்று தாமும் இத்தை யநுஸந்தித்து அப்படியே ப்ரார்த்தித்தருள ; * அரங்கனெம்மானுக்கே காதல்செய்யுந் தொண்டராய் அதித்வரையுடனே கோயிலேறச்சென்று,

அநந்தரம் (எண்டிசைக் கணங்களு மிறைஞ்சி யாடு தீர்த்தநீர்) என்றும், (கங்கையிற் புனிதமாயகாவிரி) என்றும் சொல்லப்படுகிற திருக்காவேரியிலே நீராடியருளி கேசவாதித்வாதசநாமங்களையும் சாத்தியருளி * திருவரங்கப்பெருநகரைத் தண்டன் ஸமர்ப்பித்து நிற்க, அவ்வளவிலே தம்மை எதிர்கொள்ளவந்த * அணியரங்கன் திருமுற்றத்தடியார் தங்களின்பமிகு பெருங்குழுவுகண்டு தண்டன்ஸமர்ப்பித்து அவர்களுடனேகூட வுள்ளேபுக்கு, வழியிலுள்ள * வண்டினமுரலுஞ்சோலை தொடக்கமான

திருச்சோலைகளையும் அநுபவித்துக்கொண்டு அவ்வருகேயெழுந்தருளி (மாடமாளிகைசூழ் திருவீதியும் மன்னுசேர் திருவிக்ரமன்வீதியும், ஆடல் மாறனகளங்கன் வீதியும் ஆலிநாடனமர்ந்துறைவீதியும், கூடல்வாழ்குல சேகரன்வீதியும், குலவுராசமகேந்திரன் வீதியும், தேடுதன்மவன்மாவின் வீதியும் தென்னரங்கர் திருவாவரணமே) என்று சொல்லப்படுகிற திரு வீதிகளையும் திருமதிள்களையும் திருக்கோபுரங்களையும்கண்டு களித்துக் கொண்டு எழுந்தருளி, தமக்கு ஆசார்யதுல்யரான கோடியில் அண்ணர் திருமாளிகையேற வெழுந்தருளினார். அவர், திருமெய்யத்திலே திரு வாய்மொழி வ்யாக்க்யாநம் இருபத்து நாலாயிரத்தையும் ஸாதித்துக் கொண்டெழுந்தருளியிருந்து பின்பு பெருமாள் எழுந்தருளுகையாலே தாம் அங்கே நித்யவாஸமாக வெழுந்தருளியிருக்கிறார். இப்படியிருக்கிற விவரை நாயனாரும் அத்யாதரத்துடனே ஸேவித்தருள அவரும் உகந்த ருளி இவரை அவதாரவிசேஷமென்றறிந்து ஆதரித்து பெருமாளை ஸே விக்கப்பண்ணுவதாக எழுந்தருளப்பண்ணிவைத்துக்கொண்டு புறப்பட்டு, அக்காலத்திலே கோயிலதிபதியாயிருந்த திருமாலைதந்த பெருமாள் பட்ட ருடைய அநுமதிக்காக அவர் திருமாளிகையிலே எழுந்தருள ; அவரும் அப்ப்யுத்தாந ப்ரணாமாதிகள்தொடக்கமான வுபசாரங்களைப்பண்ணி ஆஸ நத்திலே யெழுந்தருளுவித்து தேவரீரை ஸேவிக்கப் பெற்றோமே ! என்று பெரியப்ரீதியோடே ஆதரித்து திருவாய்மொழியிலே ஒருபாட்டுக்கு அர்த் தமருளிச் செய்யவேணுமென்ன, நாயனாரும் ஆழ்வாருடைய வைபவத்தை ஐதிஹ்யமாக ப்ரதிபாதிக்கிற பாட்டையெடுத்து உபந்யஸித்தருள, பட்ட ரும் போரவித்தராய் இவர் முப்பத்தாறாயிரப் பெருக்கரென்று மிகவும் உபலாளித்து பெருமாளை மங்களாசாஸநம் பண்ணியருளவென்று அரு ளிச்செய்து அங்குண்டான ஸ்ரீவைஷ்ணவர்களையுங்கூட்டி யனுப்பியருள அவர்களும் அப்படியே புறப்பட்டருளி, ப்ரதமம் * பொன்னரங்க மென் னில் மயலே பெருகுமிராமாநுசன் மன்னுமாமலர்த்தாளைக்கிட்டி, (యోనిత్య మచ్యుత) (யோநித்யமச்யுத) என்றுதொடங்கி, (రామానుజస్య చరణౌ శరణం ప్రపద్యే) (ராமாநுஜஸ்யசரணௌஶரணம் ப்ரபத்யே) என்று அநுஸந்தித்து ஸே வித்தருளி,

(இவ்வுலகத்தன்னி லெதிராசர் கொண்டருளும், எவ்வுருவும் யான் சென்றிறைஞ்சினக்கால், அவ்வுருவம், எல்லாமினிதேனுமெழிலரங்கத்தி ருப்புப்போல், இல்லாதென்னெஞ்சு நிறைந்து) என்றநுபவித்தருளி, பின்பு * பூமகள்கோன் தென்னரங்கன் பூங்கழற்குப் பாதுகமாய்த், தாமகிழுஞ் செல்வச்சடகோபரையும் ஸேவித்தருளி ப்ரதக்ஷிணமாக வெழுந்தருளி * அங்கயல்பாய்வயற் றென்னரங்கனணியாகமன்னும் பங்கயமாமலர்ப்பாவை யான ஸ்ரீரங்கநாய்ச்சி யாரையும், (శ్రీరఙ్గరాజమహిషీం శ్రియమాశ్రయామః) (ஸ்ரீரங் கராஜ மஹிஷீம் ஶ்ரியமாச்ரயாமஃ) என்று திருவடித்தொழுது * பூவளரும் திருமகளாலருள்பெற்று உள்ளேபுக்குத் திருமண்டபங்களையும் திருமடைப்

பள்ளியையும் கருவுகூலங்களையுங்கண்டு களித்தருளி, ஸ்ரீபலிபீடத்தருகே தெண்டன்ஸமர்ப்பித்து உள்ளில் திருச்சுற்றையும் ப்ரதக்ஷிணமாகவெழுந்தருளி, அநந்தரம் *அயன்பணிந்த கோயிலான ப்ரணவாகாரவிமாநத்தையும் ஸேனை முதலியாரையும் ஸேவித்தருளி அழகிய மணவாளன் திருமண்டபத்தில் எழுந்தருளி * ஆழிவண்ண!(நின்னடியிணை யடைந்தேனணிபொழிற் றிருவரங்கத்தம்மானே) என்று தண்டன்ஸமர்ப்பித்துப் பெரிய திருவடியையும் திருவடித்தொழுது த்வாரபாலகர்க ளநுமதியுடனே யுள்ளேபுகுந்து திருமணத்தூணருகேசென்று * மாயோனை வாயார வாழ்த்தி * அரங்கமா கோயில்கொண்ட கரும்பினைக்கண்டு கண்ணிணைகளித்து*அமலனாதிபிரானில்படியே பாதாதிகேசாந்தமாக வநுபவித்தருளி, (பழுதே பலபகலும் போயின) என்று அநுபவித்து * அரங்கத்தரவணைப் பள்ளியானுக் கண்வளர்ந்தருளுகிற சேர்த்தியைக்கண்டு, (படுத்தபைந்நாகணைப் பள்ளிகொண்டானுக்குப் பல்லாண்டுகூறுதுமே) என்கிறபடியே திருப்பல்லாண்டையநுஸந்தித்து மங்களாசாஸநஞ் செய்தருளி, அநந்தரம் (பாயுநீரரங்கந் தன்னுட்பாம்பணைப் பள்ளிகொண்ட மாயனார் திருநன் மார்வும்) என்று தொடங்கி, (ஆயசீர்முடியுந் தேசுமடிய ரோர்க்ககலலாமே) என்று ஸேவித்து, அதற்குமேலே பெரியபெருமாளுடைய வ்யூஹஸௌஹார்த்தாதி குணங்களை யநுபவித்து, அநந்தரம் ஸிம்ஹாஸநத்திலே நாய்ச்சிமாருடனே சேரவெழுந்தருளியிருக்கிற நம்பெருமாளை, (అబ్జన్యస్తపదాబ్జమఞ్చితకటీసంవాదికౌశేయకం కిఞ్చిత్తాణ్డవగన్ధి సంహననకం నిర్వ్యాజమన్దస్మితం। చూడాచుమ్బిముఖామ్బుజం నిజభుజా విశ్రాన్తదివ్యాయుధం శ్రీరఙ్గేశ్వరదశ్శ్రితం తత ఇతః పశ్యేమలక్ష్మీసఖమ్) (அப்ஜந்யஸ்தபதாப்ஜமஞ்சிதகடீஸம்வாதிகௌசேயகம் கிஞ்சித்தாண்டவகந்திஸம்ஹநநகம் நிர்வ்யாஜமந்தஸ்மிதம் - சூடாசும்பி முகாம்புஜம் நிஜபுஜா விச்ராந்ததிவ்யாயுதம் ஸ்ரீரங்கேசரதச்ச்ரிதம் ததயிதம் பச்யேமலக்ஷ்மீஸகம்) என்கிறபடியே ஸேவித்தருளி, "திருக்கையிலே பிடித்த திவ்யாயுதங்களும் வைத்து அஞ்சலென்றகையும் கவித்தமுடியும் முகமும் முறுவலும் ஆஸநபத்மத்திலே அழுத்திய திருவடிகளுமாய் நிற்கிறநிலையே நமக்குத் தஞ்சம்" என்று அநுஸந்தித்தருளி, அதநன் நிதியைக் கண்டாற்போலே பூர்வர்கள் தநமாயிருக்கிற ஸ்ரீநிதியான பெருமாளைக் கண்டுகொண்டு, சிவந்த திருமுக மண்டலத்தையும் கஸ்தூரித் திருநாமத்தையும் வைத்தகண்வாங்காதே அநிமிஷராயநுபவித்துக்கொண்டு நிற்க, தேசாந்தரகதனான புத்ரனைக்கண்ட மாதாபிதாக்களைப்போலே * தந்தையுந்தாயுமான தாம் இவரைக்கண்டு ப்ரஸந்நவதநேக்ஷணராய் கருணாம்ருத வ்ர்ஷ்டிகளாலே குளிரகடாக்ஷித்தருளி, "நமக்காவாரை நாமே தேடிக்கொள்வோம்" என்று அருளிச்செய்து எம்பெருமானாரை விஷயீகரித்தாப்போலே இவரை விஷயீகரித்தருளி,

பின்பு தீர்த்தப்ரஸாதங்களையும் சடகோபனையும் திருமாலை ப்ரஸாதத்தையும் ப்ரஸாதிக்கப்பெற்று முடியும் மாலையும் பெற்றாற்போலே * தென்ன

ரங்கர் சீரருளுக்கிலக்காகப்பெற்று அத்யந்தம் ப்ரீதராய் அண்ணரைப் பார்த்து தேவரீருக்காக நம்பெருமாள் இப்படி வாழ்வித்தருளிறென்று அருளிச்செய்து, அநந்தரம், அண்ணருடனேகூடப் புறப்பட்டருளி அவர் திருமாளிகையிலே எழுந்தருள, பட்டரும் அநேக பதார்த்தங்களுடனே சிறப்புவரக் காட்டியருள அத்தை யங்கீகரித்து அண்ணர் திருமாளிகை யிலே யமுதுசெய்து எழுந்தருளியிருக்க, அவரும் *பூர்வாசாரியர்கள்போத மநுட்டாநங்களை யருளிச்செய்யக்கேட்டுத்திருவுள்ளந்தேறி அவருடனே கூடப் புறப்பட்டு பூர்வர்கள்எழுந்தருளியிருந்த திருமாளிகைகளைச் சென்று ஸேவித்து, பின்பு பிள்ளைலோகாசார்யர் திருமாளிகைநோக்கி யெழுந்தருளி, (வாழியுலகாசாரியன் வாழியவன்மன்னுகுலம், வாழிமுடும்பையென்னுமாநகரம், வாழி, மனஞ்சூழ்ந்தபேரின்பமல்கு மிகநல்லார், நினஞ்சூழ்ந் திருக்குமிருப்பு) என்றும், (மணவாளன்மாறன் மன முரைத்தானவாழி, மணவாளன்மன்னுகுலம்வாழி, மணவாளன், வாழிமுடும்பைவாழி வடவீதி தா ॥, வாழியவனுரைசெய்தநூல்) என்றும் அநுஸந்தித்து திருமாளிகை வாசலிலேதண்டன்ஸமர்ப்பித்து அஞ்சலித்துக்கொண்டு (యస్యాహం కులదైవతం రఘుపతే రారాధనం శ్రీసఖం కావేరీసరిదన్తరీపనగరీవాసస్థలీపుణ్యభూః। కృష్ణోమాన్యగురుర్వరేణ్యమహిమా వేదాన్తవిద్యానిధిః శ్రీమాన్ సౌమ్యవరస్స యస్తు భువనాచార్యోऽధికో నో సమః) (யஸ்யாஹம் குலதைவதம் ரகுபதே ராராதநம் ஸ்ரீஸகம் காவேரீஸரிதந்தரீபநகரீவாஸஸ்த்த லீபுண்யபூ: - க்ர்ஷ்ணோ மாந்யகுருர்வரேண்யமஹிமா வேதாந்த வித்யா நிதிர் ப்ராதா ஸௌம்யவரஸ்ஸ்வயந்து புவநாசார்யோதிகோநோஸம:) என்கிறபடியே பிள்ளைலோகாசார்யருடைய ஸமாப்யதிகரஹிதமான பெரு மையைப் பேசாநின்றுகொண்டு "ரஹஸ்யம்விளைந்த மண்ணன்றோ" என்று மிகவுமாதரித்தருளி அங்கேயெழுந்தருளியிருந்து பிள்ளைலோகாசார்யர வைபவங்களையெல்லாம் அண்ணரருளிச்செய்யக்கேட்டு இவ்வளவாகிலும் பெற்றோமே! என்று ப்ரீதராய் அண்ணரை ஸேவித்துக்கொண்டு ஆசா ர்யர்களுக்கு ஆவாஸபூமியானகோயிலிலே எழுந்தருளியிருக்க; பின்னை யும் ஒருநாள்வரையிலே நம்பெருமாளை இவர் திருவடித்தொழச்சென்று வாறே தீர்த்தம் திருமாலை பரியட்டத்துடனே தம்முடைய *தேனேய் மலரும் திருப்பாதத்தை இவர்திருமுடிசூட (నిత్యం రఙ్గనివాసాయ ప్రార్థితఫణీశయినే) (நித்யம் ரங்கநிவாஸாய ப்ரார்த்திதபணிஶாயிநே) என்ன, அதற்கு மேலே பெருமாளும், (తస్మిన్ సస్మితనేత్రేణ శ్రీమతా శేషశాయినా। సత్కృతస్తత్కృతవాసం కఞ్చిత్కాలం తదన్తికే)(தஸ்மிந்ஸஸ்மிதநேத்ரேண ஸ்ரீமதாஶேஷஶாயிநா- ஸத்க்ருதஸ்தத்க்ருதவாஸம் காஞ்சித்காலம் ததந்திகே) என்கிறபடியே நியமி த்தருள அந்த நியமநத்தாலும் அங்கே சிலநாளெழுந்தருளியிருந்தார்.

அக்காலத்திலே அங்குண்டான ரஹஸ்ய ப்ரபந்தங்களையெல்லாம் திருக்கண்சாத்தி ஜீர்ணோத்தாரணம்பண்ணியருளி அவற்றை ப்ரகாசிப்பி த்துக்கொண்டு எழுந்தருளியிருக்க; பின்பு ஒருநாள் "பெருமாள்திரு வாராதநம் நடத்திக்கொண்டு போருகிற உத்தமநம்பி தாழ்வாக நடத்து

கிறபடியையும் அமுதுசெய்தருளுகிற தளிகைக்குறைகளையுங்கண்டு, "இவனை நிரஸித்தருளி அநுகூலரானவர்களைக்கொண்டு குறைவறக் கண்டருளப்பண்ணவேணும்" என்று வானமாமலைஜீயரருளிச்செய்ய; அத்தைக்கேட்டருளி, "தேவரீருடைய திருப்பணி, திருவாராதநம், குறைவறநடத்திப் போரும்படி இவனை யநுகூலனாகத்திருத்திப்பணிகொண்டருளவேணுமென்று மங்களாசாஸநம்பண்ணீர்" என்றருளிச்செய்து தாமும் அப்படியே மங்களாசாஸநம்பண்ணியருளி, அநந்தரம் * வடதிருவேங்கடமென்றுப்ரஸித்தமானவடமாமலைமுதலான வடதிசையிலுண்டான திருப்பதிகளைத்திருவடி தொழுகையிலேமிகவுந் திருவுள்ளத்தையுடையராய், (తత స్తేనాభ్యనుజ్ఞాతో యాతో ధరణీముత్తరాం) (ததஸ்தேநாப்யநுஜ்ஞாதோயாதோ தரணிமுத்தராம்) என்கிறபடியே பெருமாள்ஸந்நிதியிலே சென்று ஸேவித்துநின்று, அடியேன் திருமலைக்குப்போய திருவேங்கடமுடையானைத் திருவடித்தொழுது "விடைகொள்ளுகிறேன்" என்று விண்ணப்பம்செய்ய; பெருமாளும் தீர்த்தப்ரஸாதங்களும், பரியட்டமும், திருமாலையும், சடகோபனும் ப்ரஸாதித்து போய்வாருமென்று விடைகொடுத்தருள;

—(ஆழ்வார்கள் நாயனாரையும் அக்காரக்கனியையும் ஸேவித்தல்.)—

அழகியமணவாளப் பெருமாள்நாயனாரும் * அணியரங்கத்தினின்றும் பெரியதிருமலையேறப்போவாராய் அப்போதே புறப்பட்டருளி, * முப்போதும்வானவரேத்தும் முனிவர்கள் வெள்ளறையிலே சென்றுபுக்கு பங்கயச்செல்வியார்புருஷகாரமாகச்செந்தாமரைக்கண்ணரை ஸேவித்து தீர்த்தப்ரஸாதங்களும் ப்ரஸாதப்பட்டு, (పాథేయం పుణ్డరీకాక్షనామసంకీర్తనామృతమ్) பாதேயம்புண்டரீகாக்ஷநாமஸங்கீர்த்தநாம்ர்தம்) என்கிறபடியே த்வயவசநபாதேயத்துடனே (பூங்கோவலூர்தொழுதும்போதுநெஞ்சே) என்றுபெரியத்வரையோடே புறப்பட்டு * அவனடிநிழற்றடங்களையுடையராய் விச்ரமித்து விடாயாறி ஊரைச்சென்றுகிட்டி யுள்ளேபுக்கு முதலாழ்வார்களைத் திருவடித்தொழுது அவர்கள் புருஷகாரமாக (త్రివిక్రమమభిగమ్య) (த்ரிவிக்ரமமபிகம்ய) என்கிறபடியே ஆழ்வார்கள்நாயனாரையும் ஆயனாரையும் ஸேவித்து, (தூவடிவில்பார்மகள்) என்றுதொடங்கி, திருக்கோவலூரதனுட்கண்டேன் நான்" என்கிறபடியே அநுபவித்து, (நீயும் திருமகளும் நின்றாயால்) என்கிறபாட்டையநுஸந்தித்து மங்களாசாஸநம் பண்ணியருளி, அநநதரம், குன்றமேந்திக் குளிர்மழைகாத்தவ, னன்றுஞாலமளந்த பிரான்பரன், சென்றுசேர் திருவேங்கடமாமலை) என்றும், (திருவேங்கடத்தாயன்) என்றும் சொல்லப்படுகிற நீர்மையையுடைய திருவேஙகட முடையானைத் திருவடிதொழுகையிலே திருவுள்ளமாய் பெருங்கூட்டத்துடனே போவான்வழி கொண்டு அதித்வரையுடனே யெழுந்தருளுகையில், * நீள் சோலைவண்பூங்கடிகையில்தக்கானையும * கடிகைத்தடங்குன்றில் அக்காரக்கனியையும் அடைந்து மங்களாசாஸநம்பண்ணிப் புறப்படாநிற்கச்செய்தே எறும்பியிலுள்ள பெரியோர்களெல்லாரும் பச்சையுடன் வந்துஸேவித்து நிற்க அவர்களை ஆதரித்தருளிப் புறப்பட்டருளினார்.

இனித் திருமலை வ்ருத்தாந்தம்;- திருப்புரட்டாசி மூதல் திருநாள் ராத்ரி, பெரியகேள்வி ஜீயருடைய ஸ்வப்நம்;- ஆழ்வார்தீர்த்தத்திற்குத் தெற்கிலுள்ள திருத்தோப்பருகே ஒருவர் வடக்குமுகமாக நிற்கிறதாகவும், திருமலையாழ்வார் மேல்கோடி தொடங்கிக் கிழக்குமுடிவுமட்டும் ஸ்தூலமாய், அதிதீர்க்கமாயிருக்கிற திருமேனியையுடையராய் மேற்கே திருமுடியும், கிழக்கே திருவடிகளும், தெற்குதிக்கை கடாக்ஷித்துக்கொண்டு பெரியபெருமாளைப்போலே ஒரு ஸ்ரீவைஷ்ணவர் கண்வளர்ந்தருளுகிறதாகவும், ஒரு ஜீயர் திருவடிபார்ச்வத்திலே நிற்கிறதாகவும் கண்டு,
இவரார்” என்று போவார் வருவாரைக்கேட்க, அவர்கள் சொன்னபடி;-
இவர் முப்பத்தாறாயிரப் பெருக்கராகிய அழகிய மணவாளப்பெருமாள் நாயனார், அவர்பொன்னடிக்கால் ஜீயர்” என்று சொல்ல கண்விழித்து இதொருஸ்வப்நவைபவமிருந்தபடி என்னென்று அதிப்ரீதியுடனே யெழுந்திருந்து பெருமாள் திருவீதியில் ப்ராதக்காலப் புறப்பாட்டிற்கு மங்களாசாஸநத்திற்கெழுந்தருளி இயல்தொடங்குகிறவிடத்திலே இச்செய்தியைஸ்வாமிகளுக்கறிவிக்க, இத்தை தோழப்பய்யங்கார் கேட்டருளி, (స్వప్నే బృహత్య తీర్థస్య శ్రీశైలసహితో మహాన్ । శయానః పురుషో దృష్టః సౌమ్యజామాతృదేశికః ॥ దదర్శ పశ్చాత్తస్యైవ పాదమూలే యతీశ్వరమ్ । ప్రాఞ్జలిం నిభృతం ప్రహ్వం స్వర్ణాదిపదసంజ్ఞకం) (ஸ்வப்நேப்ருஹத்யதீர்த்ரஸ்ய ஸ்ரீசைல ஸஹிதோமஹாந் · சயாந: புருஷோத்ருஷ்ட: ஸௌம்யஜாமாத்ருதேசிக: - ததர்சபச்சாத்தஸ்யைவ பாதமூலேயதீச்வரம்-ப்ராஞ்ஜலிம் நிப்ருதம் ப்ரஹ்வம் ஸ்வர்ணாதிபதஸம்ஜ்ஞகம்) என்று ச்லோகமாக அருளிச்செய்தார். இத்தை எல்லாருங்கேட்டு உகந்திருக்க அப்போது தேசாந்தரத்தினின்றும் வந்த பெரியோர்களில் சிலர், இப்படி ஸேவைஸாதித்தவர் கோயில் நாயனாரென்ன, வேறுசிலர் அவர் திருநாளுக்கெழுந்தருளுகிறாரென்ன, மற்றும் சிலர் நாயனார் தம்முடைய சிஷ்யரான வானமாமலை ஜீயரைத் தமக்கு ப்ராணஸுஹ்ருத்தென்றும் பொன்னடிக்கால் ஜீயரென்று மருளிச்செய்வரென்ன; ஆனால் இந்தவிசை திருநாளுக்கு மஹாதிசய முண்டாயிற்றென்று அனைவரும் போர உகந்து எதிர்பார்த்துக்கொண்டு எழுந்தருளியிருக்க; நாயனாரும் பயணகதிகளிலே யெழுந்தருளித் திருமலை யாழ்வாரைக் கண்டருளி, (திருவேங்கடமாமலை யொன்றுமே தொழ நம்வினையோயுமே) என்று திருமலையாழ்வாரைத் தண்டன் ஸமர்ப்பித்து வைத்தகண் வாங்காதே அநுபவித்துக்கொண்டு சென்று, (సువర్ణముఖరీం తత్ర సఙ్గతాం మఙ్గళస్వనామ్) (ஸுவர்ணமுகரீம் தத்ரஸங்கதாம் மங்களஸ்வநாம்) என்று மங்களாவஹமான ஸ்வர்ணமுகரியைக்கிட்டி அங்கே நீராடியருளி கேசவாதித்வாதச நாமங்களையும் சாத்தியருளினவளவிலே, ஸ்ரீ கோவிந்தராஜருடைய அபயஹஸ்தம் களபம் திருமாலை தொடக்கமான வரிசைகள்வர அங்கீகரித்தருளி ஸ்ரீவைஷ்ணவர்களெல்லாருக்கும் ப்ரஸாத விநியோகம் செய்தருளித் தாமும் ஸ்வீகரித்துப் புறப்பட்டு கோவிந்தராஜரை மங்களாசாஸநம் செய்தருளி

வரிசைபெற்று திருமலை யடிவாரத்திலே அழகிய சிங்கரைத்தொழுது, (ఏవంవిత్ పాదేనాధ్యారోహతి) (ஏவம்வித்பாதே நாத்யாரோஹதி) என்கிற படியே யேறியருளி பரிஷைத் திருவேங்கடமுடையானைத் தொழுது, கர்ப்பூரக்காலிலே தீர்த்த ஸ்வீகாரஞ்செய்தருளி, காட்டழகிய சிங்கரைத் தொழுது மாம்பழ வெம்பெருமானுரைத் தண்டன் ஸமர்ப்பித்து விச்ரமித்துப் புறப்பட்டருள; இச்செய்திகேட்டு, பெரியகேள்வி ஜீயரும், ஏகாங்கி ஸ்ரீ வைஷ்ணவர்களும், அனைத்துக் கொத்துப் பரிகரத்துடனே பூவார் கழல்களை எழுந்தருளப்பண்ணி வைத்துக்கொண்டு பெரியபரிவட்டம், ஸ்ரீபாதரேணு, அபயஹஸ்தம் முதலான வரிசைகள் கூட்டி மங்கள வாத்யங்களுடனே யெதிர்கொண்டு ப்ரஸாதிக்க ஸவீகரித்து, மொண்ணைத் திருக்கோபுரத்தருகே திவ்யவிமாநத்தையும், திருநாராயணகிரியையும், த்வஜஸ்தம்பத்தையும், பொற்கோபுரத்தையுங் கண்டுகளித்துத் தண்டன் ஸமர்ப்பித்து உள்ளே புக்கு * அவாவறச்சூழ்ந்தான் திருவாசலிலே தண்டன் ஸமர்ப்பித்து, திருவீதிகளையும் திருமாளிகைகளையுங் கண்டுகளித்துக்கொண்டு ப்ரதக்ஷிணமாக வெழுந்தருளி ஸ்வாமி புஷ்கரிணியிலே நீராடியருளித் திருமண்காப்புச் சாத்தியருளி * வேங்கடவராஹத்தை ஸேவித்து, தீர்த்தம் ப்ரஸாதம் ஸ்ரீ சடகோபன் சந்தநம் ப்ரஸாதிக்க ஸ்வீகரித்துப் புறப்பட்டருளி திருத்தேர்களையுங் கண்டுகளித்து உள்ளேயெழுந்தருளி அழகிய மணவாளன் திருமண்டபத்தை தண்டன் ஸமர்ப்பித்து ஸ்ரீ பலிபீடத்தையும் செண்பகத்திருவாசலையும் அத்தாணிப் புளியையும் தண்டன் ஸமர்ப்பித்துச் செண்பகச்சுற்று ப்ரதக்ஷிணமாக வெழுந்தருளிச் சாலைவாசலாலேயுள்ளேபுக்கு கெப்கிணறு முதலான சாலை வரிசைகளைக்கண்டு களித்துத் திருமடைப்பள்ளியையும் யமுனைத் துறைவனையுந் தொழுது புஷ்கரிணியிலே தீர்த்தஸ்வீகாரம்பண்ணி ஸ்வர்ண மண்டபமேறி நாராயணகிரியைத் தொழுது செண்பகத் திருவாசலாலேயுள்ளேபுக்கு, தேவப்பெருமா ளெழுந்தருளியிருந்த பொன்விஞ்சு பெருமாள் கோயிலையும் * அழகப்பிரானுரையும் திவ்யவிமாநத்தையுந் தொழுது திருமடைப்பள்ளி நாய்ச்சியாரையும் ஸேவித்து தசாவதாரங்களையுந் தொழுது திருமாமணி மண்டபமான யாகமண்டபத்திலே நாய்ச்சிமாருடனே மலைகுனியநின்ற பெருமாளையும் தண்டன்ஸமர்ப்பித்து, தீர்த்தம், சடகோபன், ஸ்ரீபாதரேணு ப்ரஸாதிக்க ஸ்வீகரித்தருளி, திவ்யவிமாநத்தைத் தொழுது ஸேனைமுதலியாரையும் வணங்கி, (రామానుజస్య చరణౌ శరణం ప్రపద్యే) (ராமாநுஜஸ்யசரணௌ ஶரணம் ப்ரபத்யே) என்று எம்பெருமானுரைத் தெண்டன் ஸமர்ப்பித்து, தீர்த்தம், அநந்தாழ்வான், ப்ரஸாதம், சந்தநம் ப்ரஸாதிக்க ஸ்வீகரித்து, அழகிய சிங்கரையும் திருநிலைக் கண்ணுடிபோலிருக்கிற பெரியதிருவடி நாயனுரையும் தொழுது உண்டியிலே திரு முன்காணிக்கையும் ஸமர்ப்பித்து த்வாரபாலகருடைய அநுமதிகொண்டு உள்ளேபுக்கு, மத்யே சக்ரவர்த்தித் திருமகனுரையும் தொழுது

குலசேகரன் படியருகே சென்று, * பொன்னம்புயல்போல் மரகதம்போல் பூவைமலர்போல் கருவிளைபோல், பொங்கார் கடல்போல் பொலிந்திருண்ட புழுகிற்றுளைந்த செஞ்சோதி, அன்னம்பயிற்றி நடமாட வலர்மேல் மங்கை யுறைமார்வனாய், (సమేవే దేవదేవశం శేషశైలనివాసినమ్) (ஸமேஷேவேதேவதேவே ஶம் ஶேஷஶைலநிவாஸிநம்) என்கிறபடியே * எழில்கொள் சோதியான * திருவேங்கடத்தெந்தையை அநுபவித்துநிற்க, அப்பனும் தீர்த்தப்ரஸாதமும் திருமாலையும் சடகோபனும் ப்ரஸாதிக்கப்பெற்று க்ர்தார்த்தராய்;

அங்குநின்றும்புறப்பட்டு நடுவே இரண்டுமூன்றுநாள்வஸித்து அதின் பின்பு * உலகேத்துமாழியானத்தி யூரேற வெழுந்தருளி, (దూరస్థితేపిమయిదృష్టపథంప్రపన్నే దుఃఖంవిహాయపరమంసుఖమేష్యతీతి। మత్వేవయద్గగనచుమ్బినతాన్త్రిహస్తః తద్గోపురంభగవతశ్శరణంప్రపద్యే) (தூரஸ்திதேபிமயிதர்ஷ்டிபதம்ப்ரபந்நே துக்கம் விஹாயபரமம்ஸுகமேஷ்யதீதி - மத்வேவயத்ககநசும்பிநதார் திஹஸ்தும் தத்கோபுரம் பகவதஶ்ஶரணம்ப்ரபத்யே) என்று திருக்கோபுரநாயனாரை தெண்டன் ஸமர்ப்பித்து உள்ளேசென்று புண்யகோடிவிமாநத்தையும் தண்டன் ஸமர்ப்பித்துத் திருவநந்தஸரஸ்ஸிலே நீராடியருளித் திருமண்காப்புச் சாத்தியருளி அடைவே ஆழ்வார்களையும் ஸேவித்து பலிபீடத்தருகே தண்டன்ஸமர்ப்பித்து உள்ளேபுக்கு, சேர்ந்தவல்லிநாய்ச்சியாரையும் சக்ரவர்த்தித்திருமகனாரையும் திருவனந்தாழ்வானையுந்தொழுது ப்ரதக்ஷிணமாகவெழுந்தருளித் திருப்புற்றுக்குக் கிழக்காக இளையாழ்வாரை, (ஆமுதல்வனிவன்) என்று கடாக்ஷித்தருளின யமுனைத் துறைவன் திருமுற்றத்தையும் அவரெழுந்தருளியிருக்கிற கரியமாணிக்கத்தாழ்வார்ஸோபாநத்தையும்ஸேவித்து அவ்வருகேயெழுந்தருளி, திருமடைப்பள்ளிநாய்ச்சியாரையும் ஸேவித்து பேரருளாளர்பெருந்தேவியாரையும், (ఆకారత్రయసమ్పన్నామ్) (ஆகாரத்ரயஸம்பந்நாம்) என்கிற ச்லோகத்தை யநுஸந்தித்து ஸேவித்து * பங்கயத்தாள் திருவருளுங்கொண்டு அங்கே பெரியதிருவடியையும் தொழுது உள்ளேபுகுந்து * தானவனைவன்னெஞ்சங்கீண்ட சிங்கப்பிரானையும் ஸேவித்துச் சூடிக்கொடுத்தநாய்ச்சியாரையும் ஸேனைமுதலியாரையும் ஸேவித்து அவ்வருகே ப்ரதக்ஷிணமாகவெழுந்தருளி ஸ்ரீஹஸ்திகிரியருகேசென்று, (ఏషతంకరిగిరింసమాశ్రయే) (ஏஷதம்கரிகிரிம்ஸமாஶ்ரயே) என்று தண்டன் சமர்ப்பித்து மலையாளநாய்ச்சியாரையும் ஸேவித்து பதக்ரமத்தாலே படிகடந்தேறி கச்சிக்குவாய்த்தான் திருமண்டபத்தருகேயெழுந்தருளியிருக்கிற திருக்கச்சிநம்பியையும் எம்பெருமானாரையுந் திருவடித்தொழுது, அவர்கள் புருஷகாரமாக (సిన్ధురాజశిరోరత్నం సిన్ధురావాసవక్షసం। వవన్దేవరదంవేదమేదినీగృహమేధినమ్) ஸிந்துராஜசிரோரத்ன மிந்திராவாஸவக்ஷஸம் - வவந்தேவரதம்வேதமேதிநீக்ர்ஹமேதிநம்) என்கிறபடியே புண்யகோட்யாக்யாதமான விமாநமத்யத்திலே யெழுந்தருளியிருக்கிற பேரருளாளரை

(రామానుజాఙ్ఘ్రిశరణోఽస్మి) (ராமாநுஜாங்க்ரிஶரணோஸ்மி) என்றுதொடங்கி, (దాసస్తవేతి వరదాస్మి తవేక్షణీయః) (தாஸஸ்தவேதிவரதாஸ்மிதவேக்ஷணீய:) என்றநுஸந்தித்துத் தண்டன் ஸமர்ப்பித்து, அநந்தரம் திருப்பல்லாண்டையும் வரதராஜாஷ்டகத்தையும் ஸ்தோத்ரகத்யங்களையும் அநுஸந்தித்து மங்களாசாஸநம்பண்ணியருள, நம்மிராமாநுஜனைப்போலே யிருப்பாரொருவரைப் பெறுவதே! என்று மிகவும் க்ர்பைபண்ணி தீர்த்தப்பிரசாதங்களையும் ஸ்ரீசடகோபனையும் ப்ரசாதித்தருளி விடைகொடுத்தருள; அங்குநின்றும் புறப்பட்டருளி * நிறைந்தசீர்நீள்கச்சியினுண்டான திருவெஃகாமுதலான திருப்பதிகளையும் திருவடித்தொழுது;

அநந்தரம் (యతీన్ద్రజననీం ప్రాప్య పురీం పురుషపుఙ్గవః। అన్తర్గ్రామమపి సంపశ్యన్నుద్రాక్షీల్లక్ష్మణం మునిం) (யதீந்த்ரஜநநீம்ப்ராப்யபுரீம்புருஷபுங்கவ:- அந்தர்க்ரிமமபிஸம்பஶ்யந்நத்ராக்ஷீல்லக்ஷ்மணம்முநிம்) என்கிறபடியே ஸ்ரீபெரும்பூதூரேறவெழுந்தருளி ஊரருகேநின்று, (இதுவோபெரும்பூதூரிங்கேபிறந்தோ, எதிராசரெம்மிடரைத்தீர்த்தார். இதுவோதான், தேங்கும்பொருநற்றிருநகரிக்கொப்பான, ஓங்குபுகழுடையவூர்) என்று ஊரையநுபவித்து ஊரிலே ப்ரவேசித்தருளி, (எந்தையெதிராசரெம்மையெடுத்தளிக்க, வந்தபெரும்பூதூரில்வந்தோமோ, சிந்தை, மருளோதெருளோமகிழ்மாலைமார்ப, னருளோவிப்பேற்றுக்கடி) என்று ப்ராப்யகௌரவத்தை அநுஸந்தித்து வித்தராயுள்ளேபுக்கு, (ஆண்டுகள்நாள்திங்களாய்) என்றுதொடங்கி, (இராமாநுஜனைப்பொருந்தினமே) என்று விஸ்மிதஹர்தயராய் ஸேவித்து ஸ்ரீபாஷ்யத்துக்கு அநுமதிகொண்டு, அநந்தரம் கோயிலிலே யெழுந்தருளியிருக்க, ராத்ரி ஸ்வப்நத்திலே எம்பெருமானாரெழுந்தருளி நாயனாரை அழைத்தருளி, ஸ்ரீபாஷ்யஸ்ரீகோசத்தை ஸாதித்து "நாமே உமக்கு பெருமாள் கோயிலிலே ஸ்ரீபாஷ்யம் ஸாதிக்கிறோம், கிடாம்பிநாயனார் பாடேறச்செல்லும், நமக்கும் திருவாய்மொழிப்பிள்ளைக்கும் ப்ரியமாக வாசித்து பின்பு அருளிச்செயல் வ்யாக்யாநங்களையே பஹுமுகமாக ப்ரவர்த்திப்பியும்" என்று அருளிச்சேய்கையாலே, * ராமாநுஜயதிபணிதபாஷ்யார்த்த ச்ரவணத்திலே ச்ரத்தையையுடையராய் மீண்டு பெருமாள் கோயிலேறவெழுந்தருளி, அங்கே கிடாம்பியாச்சான் திருவம்சமான கிடாம்பிநாயனாரைஸேவித்து அங்கே ஸ்ரீபாஷ்யம் ச்ரவித்தருளாநிற்க அங்கே ஸகலசாஸ்த்ரவல்லபராய்க் கிடாம்பிநாயனாருக்கு ஸஹபாடியாயிருக்கிற ஜையகளப்பாவும், செல்வநாயனாரும் போர ஆதரித்துவைத்துக்கொண்டு பாடம் நடத்த, அப்பா, நாயனாருடைய வாசகதாடியையும் க்ரஹணதாரணவாக்வ்யவஹாரசாதுர்யத்தையும் கண்டு போரவித்தராய் நாயனாரைப்பார்த்து, "இவருடைய புத்திக்கநுகுணமாக ஸாதிக்கவில்லையே" என்ன, நாயனாரும் அப்பாவை நானே இவர்க்கு சிந்தனை பண்ணுவியுமென்று ஸாபிப்ராயமாக ஒருவார்த்தை யருளிச்செய்ய, அப்பா அதிநிபுணராகையாலே பிற்றைநாள் தொடங்கி நாயனாருக்கு சிந்தனைபண்ணுவிப்பதற்கு எழுந்தருளி

யிருக்க நாயனாரும் ஸஹஸ்ரமுகமாக உபந்யஸிக்கக்கண்டு ஜயைகள் ப்ர ஸாதித்த அர்த்தங்களில் ஒன்றும் தப்பாமல் பின்னையும் போஷித்து விசேஷார்த்தங்களுடனே ஸாதித்தருளினீரென்று அதிலே ஹர்ஷயுக்த ராய் நெடும்போது பரவசராயிருக்க இத்தைக்கேட்டு கிடாம்பிநாயனாரும் அங்கே யெழுந்தருள அவர் சிஷ்யர்களான வித்வஜ்ஜநங்கள் நாயனா ரோடே தர்க்கிக்க வேணுமென் றபேக்ஷிக்க நாயனாரும் நமக்கு இதர சாஸ்த்ரவ்யவஹாரத்துக்கு ஆசார்யவாக்ய நிரோதமுண்டென்று அப்பா வுக்கருளிச்செய்ய அப்பாவும், இவர்களும் ஸ்ரீவைஷ்ணவர்களன்றோ இவர் களோடு ப்ரஸங்கித்தால் ஸ்வரூபவிரோதம் வாராது, அவர்களபிநிவே சத்தைச் செய்தருளவேணுமென் றருளிச்செய்து அவர்களை முன்னே கொணர்ந்துவிட அவர்களுக்குத் தக்கதாக, தர்க்கசப்த மீமாம்ஸை களிலே பஹுமுகமாக உபந்யஸித்தருளின வளவிலே எல்லரும் வித் தராய் திருவடிகளிலே தீர்க்கப்ரணாமம் பண்ணிப் புறப்பட்டு நாய னார்பாடே சென்று, ''நாயனாரை இத்தனைநாளும் ஸாதாரணமாக எண்ணி யிருந்தோம், அவரிடத்திலே ஸகல சாஸ்த்ரங்களும் ஒரு மிடறுசெய்திருக்கின்றன'' என்று ஆஶ்சர்யப்பட, அவர் ஒரு அவதார விசேஷங் காணுங்கோள் என்று அருளிச்செய்துவிட்டு அவரைக் கொண்டு அருளிச்செயல் வ்யாக்யாநங்களை ப்ரவர்த்திப்பிக்கத் திருவுள்ள மாய், பின்பு அதித்வரையுடனே ஸ்ரீபாஷ்யம் நடத்திக்கொண்டுபோர, நாயனார் பலகாலும் ஈடுமுப்பத்தாறாயிரப்படியை உருச்சொல்லிக்கொண்டு போருகிறத்தை ஒருநாளளவிலேகண்டு ஆஶ்சர்யப்பட்டு ஒருவருமறியா மல் ஏகாந்தத்திலே நாயனார்பாடேசென்று, ''முப்பத்தாறாயிரப்பெருக்கர்'' என்று உமக்குத் திருநாமஞ்சாத்தினது வெறுமனன்று, இந்த புத்திஸா மர்த்யம் எங்குங்கண்டதன்று, நமக்கொரு மநோரதமிருக்கிறது, அவஶ் யம் செய்யவேணுமென்று மறுக்க வொண்ணாதபடி அநுவர்த்திக்க;நாயனா ரும் இதுக்கென்செய்வோமென்று சிந்தித்துக்கொண்டு ஏதென்றுகேட்க நாயனாரும், தேவரீர் அவதாரவிசேஷமென்று நிச்சயமாகவறிந்தேன், எனக்கு அத்தையொளிக்கவேண்டா, உள்ளபடி காட்டவேணுமென் றரு ளிச்செய்ய ; ஆகில் ஆசார்யராயிருக்கிற தேவரீருக்கு ஒளிக்க ஒண்ணா தே,பெரிய பெருமாளுடையரஹஸ்ய நியோகத்தை ஒருவருமறியவேண்டா என்று விண்ணப்பஞ் செய்துகொண்டு ஏகாந்த ஸ்தலத்திலே மங்கள தீபத்தை ஸ்ப்புரித்து அஞ்சாமலிருக்கவென்று விண்ணப்பஞ்செய்து அஹிபதிநிஜாகாரத்தைக் காட்டக் கண்டருளி ப்ரீதியுக்தராய் இத்தை உபஸம்ஹரிக்க வேணுமென் றபேக்ஷிக்க உபஸம்ஹரித்து எப்போதும் போலே நாயனாரெழுந்தருளி யிருக்கக்கண்டு விசேஷ ப்ரதிபத்தியுடனே அத்யாதரம் பண்ணிக்கொண்டு தேவரஹஸ்யம் நடத்திக்கொண்டு, நாடோறும் அமுதுசெய்தருளினபடியையும் ஆராய்ந்துகொண்டு, வான மாமலை ராமாநுஜஜீயரை நாயனாருடைய திருமேனி ஸௌகுமார்யத்

திற்கு அநுரூபமாம்படி பண்ணிக்கொண்டு வாருமென்று அடிக்கடி யருளிச்செய்துகொண்டு, ஸ்ரீபாஷ்யங் தலைக்கட்டி யருளும்படி தம்முடைய திருமாளிகையிலே கறக்கிற பசுவின் பாலை ஸாவதாநமாகத் திருத்தி நாயனார் அமுது செய்யும்படிக்கு ஸாதித்து உகப்புடனே ஸ்ரீபாஷ்யம் நிறைவேற்றி, (செந்தமிழும் வடகலையுந் திகழ்ந்தநாவர்) என்கிறபடியே உபய வேதாந்தாசார்யராய், (வேதாந்த விழுப்பொருளின்மே லிருந்தவிளக்கை விட்டுசித்தன் விரித்தனவே) என்கிறபடியே தந்முகேந பேரருளாளர் வைபவத்தை ப்ரகாசிப்பித்துக்கொண்டு அங்கே சிலநாளெழுந்தருளி யிருந்து ;

அநந்தரம், அங்குண்டானபகவத்விஷயஸ்ரீகோசங்களை யெடுப்பித்துக்கொண்டு கோயிலிலேயெழுந்தருள, (తతః ప్రతినివృత్తం పురుషో భుజగేశయః । ప్రత్యుద్గమ్య ప్రభుస్స్వైరం పునః ప్రావేశయత్ పురమ్) (ததப்ரதிநிவ்ருத்தம் புருஷோபுஜகேஶய꞉ - ப்ரத்யுத்கம்யப்ரபுஸ்ஸ்வைரம் புந꞉ ப்ராவேஶயத்புரம்) என்கிறபடியே பெருமாளாலே ப்ரத்யுத்கதராய்க்கொண்டு * திருவரங்கப்பெருநகரை ப்ரவேசித்துப் பெருமாளை ஸேவித்தருள, பெருமாளும் போர உகந்தருளி, (నిత్యం రఙ్గనివాసాయ ప్రాదాత్తః ఫణిశాయినా। పశ్యన్ పాదామ్బుజం తస్య పాలయామాస శాసనమ్) என்கிறபடியே அங்கேயெழுந்தருளியிருக்கும்படி நியமித்தருள, இவரும் அப்படியே ஸம்மதிபண்ணி யெழுந்தருளியிருக்க அங்குண்டான பெரியோர்களெல்லாரும், தேவரீர் இங்கே பெருமாளை மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டு எழுந்தருளி யிருக்கவேணுமென்று ஆதரிக்க, அப்படியே * இன்பமிகு பெருங்குழுவுடனே யெழுந்தருளியிருக்க இசைந்து (శ్రీమద్రఙ్గం జయతు పరమం ధామ తేజోనిధానం భూమా తస్మిన్ భవతు కుశలీ కోఽపి భూమా సహాయః । దివ్యం తస్మై దిశతు విభవం దేశికో దేశికానాం కాలే కాలే వరవరమునిః కల్పయన్ మఙ్గళాని) என்று காலகாலங்களிலே மங்களாசாஸநம் பண்ணியருள அத்தாலே, (அரங்கர் தஞ்சீர் தழைப்ப)என்கிறபடியே பெருமாளுடைய திருச்செல்வம், (சிறந்த செல்வமல்கி) என்றும், (நீங்காதசெல்வம் நிறைந்து) என்றும் ஸம்ருத்தமாயிற்று.

அக்காலத்திலே பெருமாளுடைய ஸேவைக்கு விருத்தமான ஒரு ஆசௌசவிசேஷத்தைத் தெற்கினின்றும் சிலர்வந்து விண்ணப்பஞ்செய்யக் கேட்டருளி * தென்னரங்கன்கழல் சென்னிவைத்துத்தானதில் மன்னியிருக்கிற தமக்கு தத்விச்லேஷம் அத்யந்தம்துஸ்ஸஹமாய், (త్వత్పాదపద్మప్రవణాత్మవృత్తేర్భవన్తి సర్వే ప్రతికూలరూపాః) என்கிறபடியே பகவதநுபவவிரோதிகளான பரிகரங்களெல்லாம் அத்யந்தம் ப்ரதிகூலங்களாயிருக்கின்றனவென்று அறுதியிட்டு அப்போதே தமக்குஸப்ரஹ்மசாரியான சடகோப ஜீயர் ஸந்நிதியிலேயெழுந்தருளி, (భగవంతస్యైవ విజ్ఞాయ సద్వాదిసిరస్థిరం సర్వసఙ్గం పరిత్యజ్య తుఙ్గం ప్రావిశదాశ్రమం) என்கிறபடியே ஸர்வஸங்கபரித்யாக பூர்வகமாக ஸந்யஸித்தருளி த்ரிதண்டகாஷாயங்களை அவர்திருக்கைகளாலே ஸாதி

க்க தரித்தருளி துரீயாச்ரமத்தை யடைந்து அதற்கு அநுகுணமாக சட கோபஜீயரென்று பின்னை திருநாமத்தையுடையராய், பின்பு * அற்றபத் தரானதாம் * பற்றிலார்பற்ற நின்ற பெருமாள் திருமுன்பே யெழுந்தருளி ஸேவித்து, (మఙ్గళంరఙ్గధుర్యాయ నమఃపన్నగశాయినే | మఙ్గళంసహ్యజామధ్యసాన్నిధ్యకృతచేతసే) என்று மங்களாசாஸனம்பண்ணிக்கொண்டெழுந்தருளிநிற்க பெருமாளும் இவரை ஆதரித்தருளி தம்முடைய திருநாமமான முந்தின திருநாமத்தையே முடியநடத்தவேணுமென் றருளிச்செய்து "உமக்கு பல்லவராயன் மடத்தை ப்ரஸாதிக்கிறோம், யாவச்சரீரபாதம் எம்பெருமானாரைப்போலே இங்கே யிரும்" என்று நியமித்தருளி, எம்பெருமானார் காலத்திலே கந்தாடையாண்டான் தம்முடைய ஆசார்யரான ஆட்கொண்டவில்லிஜீய ரெழுந்தருளியிருக்கும்படி மடமாக்கி அவருடைய திருவாராதநமான என்னைத் தீமனங்கெடுத்தார்க்கு மத்யாஹ்நகால அவஸரத்திலே அமுதுசெய்யப் பண்ணும்படி பெருமாள்ஸந்நிதியிலே நித்யம் ஒரு தளிகையும் திருவிளக்குக்கு நெய்முதலியவையும் நடக்கும்படிபொலிவிட்டு நடந்துவந்ததாயும் சிலநாள்களுக்குப் பின்பு முதலியாண்டான் திருவம்சத்தார் பரஸ்பரவிவாதத்தாலே ஸ்ரீபண்டாரத்தில் சேர்த்ததாயும், பூர்வகாலத்திலே அதிவிலக்ஷணமான ஸ்ரீராமாநுஜகூடம் பல்லவராயன் நடத்தினபடியாலே பலலவராயன் மடமாயிற்று; திருவாராதநமும் * என்னைத் தீமனங்கெடுத்தாரென்று திருநாமம் ; அந்தமடத்தையும், திருவாராதநத்தையும் ப்ரஸாதித்து; மிகவும் க்ர்பைபண்ணியருளி, (నిస్పృష్టాత్మా సుహృత్సుచ) (நிஸ்ர்ஷ்டாத்மா ஸுஹ்ர்த்ஸுச) என்கிறபடியே தாமும் அவ்விடத்திலே ந்யஸ்தபரராய் தீர்த்த ப்ரஸாதங்களையும் ப்ரஸாதித்துப் பரிவட்டமுங்கட்டி ஸ்ரீசடகோபனையும் ப்ரஸாதித்து "நம்முடைய அழகிய மணவாளஜீயரை மடத்திலே விட்டுவாருங்கோள்" என்று உத்தமநம்பி முதலான அனைத்துப்பரிகரத்தையும் இவர்பின்னே அனுப்பியருள, அவர்களும் அப்படியே ஸேவித்துக்கொண்டுபோய் மடத்திலே எழுந்தருளப்பண்ணி, (அடியார் கள்வாழ வரங்கநகர்வாழச், சடகோபன்தண்டமிழ்நூல் வாழக், கடல் சூழ்ந்த மன்னுலகம்வாழ மணவாளமாமுனியே, இன்னமொரு நூற்றாண்டிரும்) என்று மங்களாசாஸநம்பண்ணி ஸேவித்துப் புறப்பட்டார்கள். பின்பு மடமெங்கும் வானமாமலைஜீயர்முதலான முதலிகளைக்கொண்டு செப்பமிடுவித்து திருமலையாழ்வாரையு முண்டாக்கிரஹஸ்யம் விளைந்தமண்ணாலே தாம் எழுந்தருளியிருக்கிற இடத்திற்கு மண்காப்புச் சாத்துவித்து அவ்விடத்தைகுருகுலவாஸமாக வெண்ணி அங்கே இனிதமர்ந்தெழுந்தருளியிருந்து, பிள்ளை, நம்மாழ்வார் திருநாமத்தாலே விளங்கி யருளினாப்போலே தாமும் நம்பெருமாள் திருநாமத்தாலே மிகவும் விளங்கியருளினார். இப்படி * ஸ்வாசார்யபதபங்கஜத்வந்த்வச் சாயாமத்ய * ஸுகாஸீநராய் வ்யாக்க்யாநித்துக்கொண்டு, (రఙ్గమఙ్గళధుర్యాయ రమ్యజామాతృయోగినే) (ரங்கமங்கள துர்யாய ரம்யஜாமாத்ர்யோகிநே) என்னும்படி யெழுந்தருளியிருக்கிறகாலத்திலே, (ఆచారజ్ఞానవైరాగ్యైరాకారేణచతాదృశః। శ్రీమాన్రామానుజస్స్వాయ మిత్యాంశం సన్ని

ధీః ప్రజాః) (ஆசாரஜ்ஞாநவைராக்யை ராகாரேணச தார்த்தர்சே° ஸ்ரீமாந்ராமாநுஜஸ்வோய மித்யாம்சம் ஸந்மிதஜீப்ரஜா°) என்னும்படியான இவருடைய ஜ்ஞாநபக்திவைராக்யந் தொடக்கமான ஆகாரங்களாலே இங்குண்டானவர்களெல்லாரும் எம்பெருமானாருடைய அவதாரமென்றறுதியிட்டு இவர் திருவடிகளிலே ஆச்ரயித்து அத்யந்தம் விலக்ஷணராய், (పరమనభోనివాసఫణిపుఙ్గవ రఙ్గపతే ర్భవనమిదంహితాయజగతో భవతాధిగతమ్) (பரமநபோநிவாஸபணிபுங்கவ ரங்கபதேர்ப்பவநமிதம் ஹிதாயஜகதோ பவதாதிகதம்) என்றும் *வன்பெருவானகமுய்ய வமரருய்ய மண்ணுய்ய மண்ணுலகில்மனிசருய்ய, துன்பமிகுதுயரகல அயர்வொன்றில்லாச் சுகம் வளர அகமகிழுந்தொண்டர்வாழ, அன்பொடு தென்திசைநோக்கிப் பள்ளிகொள்ளும் பெரியபெருமாள் ஜகத்ரக்ஷணார்த்தமாக இங்கே யெழுந்தருளினாற்போலாயிற்று. இவர் இங்கே எழுந்தருளினது என்று மிகவும் ஆதரித்துக்கொண்டு போந்தார்கள்.

அநந்தரம், ஜீயர், அருணோதயத்துக்குத் திருக்காவேரியில் நீராட எழுந்தருளுவர், அக்காலத்திலே அத்யந்தம்ஸத்வநிஷ்டராய், பெருமாள் ஸந்நிதியிலே அநந்ய ப்ரயோஜநராய் கைங்கர்யம் பண்ணிப்போருகிற திருமஞ்சனம்அப்பாவென்றொருவர்கூடவேசென்று ஜீயர் நீராடியருளுகிறஸ்தாநத்திற்குப்பின்னேயிருந்து அந்தப்ரவாஹதீர்த்தத்தில் தப்பாமல்நீராடிக்கொண்டு போர, அவருக்கு ஜ்ஞாநோதயமாய் ஜீயர்திருவடிகளிலே நிரவதிக ப்ராவண்ய முண்டாய் ஆச்ரயித்து க்ருதார்த்தரானார். இந்த அர்த்தத்தை (ఉషస్యయంవారిణిసహ్యజాయాఃస్నాతోయతీన్ద్రప్రవణోమునీన్ద్రః।తత్రైవపశ్చాదవగాహ్యతీర్థే।శ్రీతీర్థదాసస్తముపాశ్రితోభూత్) (உஷஸ்யயம்வாரிணிஸஹ்யஜாயா°ஸ்நாதோயதீந்த்ரப்ரவணோமுநீந்த்ர° - தத்ரைவபஶ்சாதவகாஹ்யதீர்த்தே ஸ்ரீதீர்த்ததாஸஸ்தமுபாஶ்ரிதோபூத்)என்று அநுஸந்தித்தார்கள். அப்பாவும் ஜீயர்திருப்பவளத்தாலே ஸகலார்த்தங்களையும் ச்ரவித்து நிரவதிகப்ரவணராய், (ఛాయావాసత్త్వమనుగచ్ఛేత్) (சாயாவாஸத்வமநுகச்சேத்) (நிழலுமடிதாறுமானோம்) என்கிறபடியே சாயாவத்பரதந்த்ரராய்த் திருவடிகளைப்பிரியாமல் அங்குத்தைக்கு அந்தரங்கராய் எழுந்தருளியிருந்தார். அநந்தரம், கோவிந்ததாஸரப்பனென்னும் நிருபகத்தையுடையரான பட்டர்பிரான் ஜீயர் திருவடிகளிலே ஆச்ரயித்து தத்பாதபத்ம ஸேவைகதாரகராய் ஸேவித்துக்கொண்டு எழுந்தருளியிருந்தார்.

அதன்பின்பு (முகில்வண்ணனடிமேற் சொன்னசொல்மாலையாயிரம்) என்றும், (மதிளரங்கர் வண்புகழ்மேலான்றதமிழ்மறைகளாயிரம்) என்றும் இப்படி பெரியபெருமாள் விஷயமாக ப்ரதிபாதிக்கப்படுகிற திருவாய்மொழியினுடைய ஈடுமுதலான வ்யாக்யாநங்களையும் மற்றுமுண்டான அருளிச்செயல் வ்யாக்யாநங்களையும் வ்யக்தமாக ப்ரஸாதித்துக்கொண்டும், ஸ்ரீவசநபூஷணாதி திவ்யரஹஸ்யதாத்பர்யங்களையும் தர்சிப்பித்துக்கொண்டும்,

*ராமாநுஜார்யவசகராய் நாடோறும் ஸேவித்துக்கொண்டும், (గురోర్నామసదా జపేత్) (குரோர்நாமஸதாஜபேத்) என்கிறபடியே தமக்கு ஜப்தவ்யமாய் எம்பெருமானார் திருநாமமான அந்தாதியையும் நித்யம் அநுஸந்தித்துக் கொண்டும், (వచనభూషణవాగమృతాశనమ్) (வசநபூஷணவாகம்ர்தாசநம்)என்று தொடங்கி தம்முடையஅபேக்ஷிதங்களையும்அவர் திருவடிகளிலேநித்யமாக ப்ரார்த்தித்துக்கொண்டும், தத்ப்ரஸாதைகதாரகராய் தத்வைபவத்தை ப்ரகாசிப்பித்துக்கொண்டும், அஸத்ர்சவைபவராய் திருமலையாழ்வாருடைய அடிநிழலிலே *தேசந்திகழுவெழுந்தருளியிருக்கிறகாலத்திலே, பெருமாளுடைய நியமனத்தாலே தமக்குத்திருவாராதநமாக ஸ்ரீரங்கராஜரை எழுந்தருளப்பண்ணிவைத்துப் பிள்ளைலோகாசார்யருடைய திருநக்ஷத்ரமான ஐப்பசிமாஸம் திருவோணத்திலே திருப்ரதிஷ்டையுங்கொண்டருளப்பண்ணித் தம்முடைய திருக்கைகளாலே ஆராதநமுஞ் செய்து கொண்டு, விசேஷித்து (జన్మర్క్షశ్రవణేపివా) (ஜந்மர்க்ஷேச்ரவணேபிவா) என்றும், (நீபிறந்த திருவோணம்) என்றும் சொல்லுகிறபடியேபிள்ளைலோகாசார்யர் திருநக்ஷத்ரம் முதலான மற்றுமுள்ள ஆசார்யர்கள் திருநக்ஷத்ரங்களையும் (பாலால் பன்னிரண்டு திருவோணமட்டேன்) என்னும்படி அக்காரவடிசலாலே அமுதுசெய்தருளப்பண்ணி பரிபாலித்துக்கொண்டு, பூர்வாசார்யர்களுடைய வசநாநுஷ்டாநங்களையும் தம்முடைய உக்த்யநுஷ்டாநங்களாலே ப்ரகாசிப்பித்துக்கொண்டு ஸ்ரீரங்கஸ்ரீக்கு மங்கள தீபம்போலே எழுந்தருளியிருந்தார்.

இப்படி, * திசைவிளக்காய் நிற்கிற திருவரங்கத்திலே * திக்குற்ற கீர்த்தி யிராமாநுசனைப்போலே யிருக்கக்கண்டு, (సమునిస్సౌమ్యజామాతా సర్వేషామేవపశ్యతాం। శ్రీసఖస్య నిదేశేన శుశుభే దేశికశ్రియా) (ஸமுநிஸ்ஸௌம்யஜாமாதா ஸர்வேஷாமேவபஶ்யதாம் - ஸ்ரீஸகஸ்யநிதேஶேந ஶுஶுபேதேஶிகஶ்ரியா) என்று, தேசிகஸ்ரீயாலும் மிகவும் விளங்காநிற்க இத்தைதேசாந்தரஸ்தரெல்லாருங்கேட்டு, (తతస్సముత్సుకాస్సర్వేశతశోథసహస్రశః। శరణంతస్యసంశ్రిత్య చరణాంభోజయుగ్మకం) (ததஸ்ஸமுத்ஸுகாஸ்ஸர்வே ஶதஶோதஸஹஸ்ரஶ: - ஶரணம் தஸ்யஸம்ஶ்ரித்ய சரணௌ ஜதங்யதாம்கதா:) என்கிறபடியே அப்போதே புறப்பட்டுவந்து அஸங்க்யாதராய் ஆச்ரயிக்க, அவர்களையும் க்ர்பை பண்ணியருளி, (திருத்தித் திருமகள் கேள்வனுக்காக்கி) என்றும், (அரங்கன்செயய்தாளிணையோடார்த்தான்) என்றும் சொல்லுகிறபடியே (அரங்கன்மெய்யடியார்கள்) என்றும், (திருமாலடியார்கள்) என்றும் நிரூபகமாம்படி அத்தலைக்குஆளாக்கியருள அவர்களும், (అపగతమదమానైః) (அபகதமதமாநை:) இத்யாதிப்படியே (குற்றமின்றிக் குணம்பெருக்கிக் குருக்களுக்கநுகூலராய்) * வரவரமுநிப்ர்த்யரென்று நிரூபிக்கும்படி அங்குத்தைதக்கு அந்தரங்கராய்த் திருவடிகளிலே நித்யஸேவை பண்ணிக்கொண்டு அவர் ப்ரஸாதித்தருளுகிற பகவத்விஷயங்களையுங் கேட்டுக்கொண்டு ஆசார்யாபிமாநத்திலே ஒதுங்கி அநுகூலராயிருக்க ;

ஜீயர், ப்ராதஃகாலத்திலே தீராட்டத்திற்குப் புறப்பட்டெழுந்தருளா நிற்கச்செய்தே ஒருநாள் அசிந்திதமாக வர்ஷம்வர, அதற்கு ஒருவைஷ்ண வர் க்ரஹத்தின் வாசல்திண்ணையை உத்தேசித்து எழுந்தருளாநிற்க அந்த க்ரஹயஜமானைகண்டு அத்யந்தம் ப்ராவண்யத்துடனே புடைவைத் தலைப்பாலே திண்ணையைத் துலக்கி, "ஸ்வாமி! இங்கே எழுந்தருள வேணும்" என்று ஸவிநயபக்தியோடே ஸேவித்துநிற்க, திருவடிநிலைகளைக் கீழேவிட்டுத் திண்ணைமேலே ஏறியருள, அந்த அம்மை மழையிலே நனை கிற திருவடிநிலைகளை யெழுந்தருளப்பண்ணி தம் சிரஸ்ஸிலே தீர்த்தத் தோடு தரித்துக்கொண்டு பிறபாடு தலைப்பாலே திருவொற்று வாடை. சாத்தி மீளவும் சிரஸாவஹித்துத் திருமுன்பே எழுந்தருளப்பண்ணி நிற்க, ஜீயரும், நீயார், பேரேது, இது ஆருடைய திருமாளிகை, என்று கேட்டருள; தேவரீர் திருவடி ஸம்பந்தியாயிருக்கிற திருமஞ்சனம் அப்பா வுடைய பெண், அடியேன் பெயர் ஆச்சி, இது அவருடைய மணவாளப் பிள்ளை கந்தாடை ஐயங்கார் க்ரஹம் என்று விண்ணப்பஞ்செய்யக் கேட்டு உகந்தருளி, "நம்முடைய அப்பாச்சியாரோ" என்று அருளிச்செய்து கடா க்ஷித்துக்கொண்டு வர்ஷம் நிவர்த்தமானவுடனே திருக்காவேரிக் கெழுந் தருளினார். ஆச்சியாரும் திருவடிநிலைகளின் திருமஞ்சனம் தலையிலே ஊறி ஜீயர்கடாக்ஷம் பெற்றவளாகையாலே உடனே ஜ்ஞாநோதயமுண் டாய் அப்போதே ஜீயர் திருவடிகளிலே ஆச்ரயிக்கவேணுமென்னும் ருசி பிறந்து பிறந்தகத்திலேசென்று பிதாவுக்கறிவிக்க, அவரும் உகந்து தம் முடைய தௌஹித்ராளும் அறியாமலிருக்க வேணுமென்று அருளிச் செய்து ஜீயர் திருவடிகளில் ஆச்ரயணமானபின்பு தம்முடைய திருமாளி கையிலேதானே ஓரிடத்திற்கும் புறப்படாமல் சிலநாளிருக்கும்படிக்கு ஆலோசனைபண்ணி அப்பா, தம்முடைய குமாரத்தியாரைக் கூட்டிக் கொண்டு மடத்திலே எழுந்தருளி ஜீயரை தண்டன் ஸமர்ப்பித்து இச் செய்தியை விண்ணப்பஞ்செய்ய; ஜீயரும் கந்தாடை அய்யங்கார்கள் ஸம் பந்தத்தைப் பார்க்கவேண்டாவோ, காரியப்படாது என்றருளிச்செய்ய, அப் பாவும் தம்முடைய குமாரத்தியாருடைய ஆஸ்திக்யாதராத்திகளை விண் ணப்பஞ்செய்து, ப்ரதிஹதி ஒன்றும் வாராது, க்ருபை செய்தருள வேணு மென்று விண்ணப்பஞ்செய்ய, ஆகில் இவளையிட்டு இந்தத் திருவம்சத்திற் கெல்லாம் ஆநுகூல்யமுண்டாமென்று, (ஸ்ரீபேநமஹாஸாத்யாதம்) என்கிற படியே * அப்போது ஒரு சிந்தைசெய்து ஆச்சியாருக்கு ஸமாச்ர யணம் ஸாதித்தருளி ஹிதங்களையும் ஜ்ஞாதவ்யார்த்தங்களையும் உகந்து ப்ரஸாதித்தருளினார். அப்பாவும் தம்முடைய குமாரத்தியாரைத் தம்முடைய திருமாளிகையிலே தானே சிலநாளிருக்கும்படிக்கு நியமித்து அவருடைய குமாரர் அண்ணா தொடக்கமானவர்களுக்கு ஒரு கார்யாந் தரத்தை அருளிச்செய்து பரிஹரித்து வைத்தருளினார். இப்படி ஆச்சி யாருக்கு ஸ்ரீபாதுகாதீர்த்தவஹநத்தினாலே வந்த அதிசயத்தை (ஸ்ரீ...

ముచ్ఛనితా త్మవివేకరఙ్గ భూనాథతీర్థ జలతాతజమాతృదేవం । స్వస్వచ్ఛిదంనిఖిలదేశికవన్ద్యపాదం సౌమ్యోపయన్తృమునివర్యమహంనమామి) என்றநுஸந்தித்தார்கள்.

கந்தாடையண்ணன் திருத்தமப்பனார் தேவராஜ தோழப்பருடைய தீர்த்தம்வர, அற்றைக்கு சிற்றண்ணாதேவியாரான ஆச்சியாரைத் தளிகை பண்ண அழைத்துவிட, அவரும் அப்படியே பாவநத்வ போக்யத்வங்களுடனே தளிகைசெய்ய ; பெருமாளமுதுசெய்தருளி முந்தின ஸ்ரீவைஷ்ணவர்களும் அமுதுசெய்தருளி இஷ்டபந்தியும் அண்ணன் தொடக்கமானரும் அமுதுசெய்தருளின அநந்தரம் அண்ணன் வாசல்திண்ணையிலே எழுந்தருளியிருக்க, ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் ஜீயர்மடத்தில் நின்றும் புறப்பட்டுவர அவரைக்கண்டு உமக்கு எந்தவூரென்று கேட்டருள, அவர் வள்ளூர் ராஜேந்த்ரம் என்ன, இங்கே வந்தகாரிய மேதென்ன, அடியேன் ஜீயர் திருவடிகளிலே ஆஶ்ரயிக்கக் காத்திருக்கிறேன் ப்ராப்திகாலம் வரவேணுமேயென்ன, இந்தஸ்த்தலத்திலே ஆசார்ய புருஷர்கள் திரட்சியாகவுண்டே மற்றோரிடத்தில் ஆனாலோவென்ன, இங்கே பகவந் நியமநமாயிருக்கிறதென்ன, அது எப்படியென்ன, அது ரஹஸ்யமென்ன, உம்முடைய பெயரேதென்ன, சிங்கரையரென்ன, இவர் பகவத் ப்ரஸாத பாத்ர பூதராகவேணுமென்று திருவுள்ளத்திலே எண்ணி இவர் கையைப் பிடித்துக்கொண்டு உள்ளேசென்று தீர்த்தப்ரஸாதங்களையும் சந்தனம் அடைக்காய்களையும் ப்ரஸாதித்து ஆதரித்தருளி இவ்விரா திருமாளிகையிலே சயியும் என்று நியமித்தருளி தாமும், திருத்தம்பிமார் கந்தாடையப்பனும், திருக்கோபுரத்து நாயனார் பாட்டரும் எழுந்தருளியிருக்க, திருவத்யயநத்தளிகை கைங்கர்யங்களெல்லாம் நிறைவேறி ஆச்சியார் அலைவையாய் உள்ளே படுக்கையிலே சாயும்போது "ஜீயர் திருவடிகளே சரணம், பிள்ளை திருவடிகளே சரணம், வாழி யுலகாசாரியன்" என்று சயிக்க ; இந்த சப்தத்தை மூவரும் கேட்டு இதேது என்று விஸ்மிதவயாகுலராயிருக்க, இவர்களில் பாட்டர் உள்ளேசென்று கேட்கிறேனென்று போய் மதினியாரே! என்றழைக்க, ஆச்சியார் பயப்பட்டு தாம் சொன்னது இவர் செவிப்பட்டதென்று பேசாமலிருக்க, அண்ணனும் அப்பனும் அவரை யழைத்து, "எல்லாம் பொழுதுவிடிந்தவாறே தெரியும், அவரை எழுப்பவேண்டாம்" என்று மூவரும் கண்வளர்ந்தருள ; அண்ணனுக்கு பயபக்திகள் மிக்கு *மென்மலர்ப்பள்ளி வெம்பள்ளியாகி ப்ராதாக்களறியாமல் சிங்கரையர் சயிக்கிறவிடத்திலே எழுந்தருளி அவரை யெழுப்பி சில ஆத்யாத்மிக தர்மங்களை யருளிச்செய்ய அவர் கேட்டு உகந்திருக்க அந்தவேளையிலே ஜீயர் திருவடிகளிலே ஆச்ரயிக்கும்படி உமக்கு பகவந் நியமநமான பெருமையை அறியவேணுமென்று அத்யபிநிவேசமாயிருக்கிறது என்றருளிச் செய்யக்கேட்டு அவர்சொன்னது ;—

எங்களூரிலே யுண்டாகிற காய்கிழங்குகளை யதாசக்தி ஸம்பாதித்து இந்த ஸ்த்தலத்திலே பெரியோர்கள் திருமாளிகைகளுக்கு அடிக்கடி

ஸமர்ப்பித்துப் போருவதுண்டு, அத்தை ஒருநாள் ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் கண்டு இன்றைக்கு மடத்திலே ஸமர்ப்பியும் என்ன, பாக்யமாயிற்று என்று கொண்டு ஸமர்ப்பித்தேன், அத்தை ஜீயர்கண்டு இது எங்கே விளைந்தது, எந்த நீர் பாய்ந்தது, நீரிறைத்தவரார், எதற்காகக் கொணர்ந்தீரென்று கேட்டருள, அடியேன் அதிவிநயமாயும் உசிதமாயும் விண்ணப்பம்செய்தபடி ;—"பரிசுத்த ஸ்தலத்திலே விளைந்தது, அடிச்சேரியிலே தேவரீர் தாஸவர்க்கங்கள் நீரிறைத்துப் பாய்ச்சினது, ஸ்ரீபாகவதஸ்வத்தென்று விண்ணப்பம்செய்ய ; அதுகேட்டு உகந்தருளி அத்தை அங்கீகரித்தருளி கோயிலுக்குப்போய் பெருமாளை ஸேவித்துப் போருமென்று விடைகொடுக்கப் பெருமாள் ஸந்நிதியிலே செல்ல அருகேயிருந்த அர்ச்சகர் இன்றைக்குக் காய்கறி ஆருக்கு ஸமர்ப்பித்தீரென்ன ஜீயர்மடத்திலே என்ன அர்ச்சகர் ப்ரியப்பட்டு பரவசராய் அடியேன் முதுகைத் தட்டி நீர் பாக்யவான்; உமக்கு விலக்ஷண ஸம்பந்த முண்டாகப்போகிறது என்று தீர்த்தம், சந்தநம், திருமாலை, வேளயம், அபயஹஸ்தம், சடகோபன் ப்ரஸாதித்து பஹுமாநம்பண்ண ; அடியேனை இன்றைக்கு இத்தனை க்ர்பைபண்ணி யருளுவதே! என்று ஸந்நிதியினின்றும் புறப்பட்டவளவிலே, "இவனை மல்லுக்கட்டிப் பிடி" என்கிற வார்த்தைகேட்க அவ்வார்த்தை ஸாபிப்ராயமாக இருக்கிறதென்று மீண்டு மடத்திலே சென்று தண்டன் ஸமர்ப்பித்து, "தேவரீருக்காகப் பெருமாள் போர க்ர்பை பண்ணியருளினர்" என்று இச்செய்தியையெல்லாம் விண்ணப்பஞ்செய்து ஊருக்கு விடைகொள்ளுகிறேனென்ன ; அங்குள்ளார் அடியேனை ஆதரித்து ப்ரஸாதமும ப்ரஸாதித்தனுப்ப அத்தை வழியிலே ப்ரஸாதப்பட்டுச் செல்ல உடனே சித்தசுத்தி பிறந்து ஆச்ரயணருசி யுண்டாயிற்று ; அன்றுராத்ரி ஸ்வப்நத்திலே பெரியபெருமாள் ஸந்நிதியிலே திருமணத்தூணருகேநின்று ஸேவித்துக்கொண்டிருக்கப் பெரியபெருமாள் அணையில்வைத்த திருக்கையை உயரவெடுத்து திருவநந்தாழ்வானைக்காட்டி "'இவர்கிடாய் அழகிய மணவாளச் சீயர், இவரோடு உனக்கு ஸம்பந்தமுண்டாக்கிக்கொள்' என்றருளிச்செய்ய, இந்த ஸ்வப்நத்தைக்கண்டு க்ர்தார்த்தனாய் ஜீயர் திருவடிகளிலே ஆச்ரயிக்கக் காத்திருக்கிறேன்" என்று சிங்கரையர் விண்ணப்பஞ்செய்யக் கந்தாடை அண்ணன் கேட்டருளி பயபக்திகள் விஞ்சிநெடும்போது சிந்தித்து உள்ளே யெழுந்தருளித் திருப்படுக்கையிலே சாய்ந்தருள ஸ்வப்நமானப்ரகாரம் ;—

ஒரு ஸ்ரீவைஷ்ணவர் மெத்தையினின்றும் ஏணிவழியாலே இறங்கி வந்து பெரியகசையாலே தம்மையடிக்க தமக்குநிவர்த்திப்பிக்க சக்தியுண்டா யிருக்கச்செய்தேயும் நம்மிடத்தில் ஸ்வரூபவிருத்தமான நடக்கை யுண்டாயிருப்பதினாலே சிக்ஷித்தருளுகிறா ரென்றெண்ணி, (மஸ்த்ரக்ஷாராக்நிகர்மாணிஸ்வபுத்ராய, யதாபிதா) என்றநுஸந்தித்துக்கொண்டிருக்க, கசையும் துணிக்கைத்துணிக்கையாக அறுந்துபோக, அந்தஸ்ரீவைஷ்ண

வர் அண்ணன் திருக்கைகளைப் பிடித்திழுக்க, அண்ணன் ஏதுசெய்ய வேண்டுமென்ன, ஏணிமேலேறி மெத்தைமேலே போவென்ன அப்படியே செய்ய, அந்தஶ்ரீவைஷ்ணவர் தாமும் ஏறிவந்து எடுத்துக்கட்டி மேலே கொண்டுபோக, அங்கே ஒரு ஜீயர் ஒரு திருவடியைத் தொங்கவிட்டுக் கொண்டும் ஒரு திருவடியைக் குஞ்சித்துக்கொண்டும் த்ரிதண்டத்தைத் தோளிலே சாத்திக்கொண்டும் திருக்கையிலே கசையைப் பிடித்துக் கொண்டும் அக்நிகல்பராய் மிகவும் குபிதராயிருக்க; அவர்முன்னே அண் ணனைப்பிடித்துக்கொண்டுபோக ஜீயர் அண்ணனை பஹுவாக அடிக்க கசையும் துணிக்கையானவாறேஇன்னுமடிக்கத்தக்கதாகஉபதண்டத்தை வாங்கப்புக அந்த ஶ்ரீவைஷ்ணவர் தெண்டன் ஸமர்ப்பித்து அஞ்சலிஹஸ் தராய் ஜீயர்திருமுகமண்டலத்தைப்பார்த்து, "இவன் சிறுபிள்ளை, பஹு வாக அடிபட்டான், இனி க்ஷமித்தருளித் திருவுள்ளமிரங்கி க்ர்பைபண் ணியருளவேணும்" என்ன; அவரும் இரங்கியருளி அண்ணனை அழை த்து மடியிலேவைத்து உச்சிமோந்து திருக்கைகளாலே திருமேனி யெங் கும்தடவி நீயும் உத்தமநம்பியும் போர அபசாரப்பட்டீர்களென்ன, அழ கியமணவாள ஜீயர்ப்ரபாவமறியாமல் அவிவேகம் வந்தது இனி க்ஷமித்த ருளவேணுமென்று திருவடிகளைப் பிடித்துக்கொள்ள, ஜீயர் இரங்கி, "நாம் ஶ்ரீபாஷ்யகாரர், இவர் முதலியாண்டான்" என்று தம்மையும் அந்த ஶ்ரீவைஷ்ணவரையுங்காட்டி, (త్వత్పాదాంబుజద్వంద్వే త్వత్సంబంధికృతానపి। క్షమామ్యహం దాశరథే సంబంధం సర్వథా కృథాః) என்றிந்தச்லோகத்தைஅநுஸந்தித்து "நாமே திருவநந்தாழ்வான், நாமேவரவரமுனி, அவர்திருவடிகளிலே நீயும் உன் னுடைய ஸம்பந்திகளும் ஆச்ரயித்து உஜ்ஜீவியுங்கோள்" என்றுவிட, அண்ணனும்திருக்கண்கள்விழித்து நெடும்போது ஈதொரு ஸ்வப்நமிருந்த படி யென்னென்றுவிஸ்மிதராய் கண்டவற்றை யெல்லாம் புநபுநச்சிந்தித்து மறவாமல் திருவுள்ளத்திலே கட்டிபண்ணி திருத்தம்பிமார்களை யெழுப்பி ஸ்வப்நவ்ர்த்தாந்தங்களை யருளிச்செய்யத்தொடங்கி நடுவேநடுவே ஹர்ஷ பரவசராய் ஸ்தப்த்தராயிருந்து அருளிச்செய்து தலைக்கட்டியருளினர்.

இப்படி அண்ணனுக்கு எம்பெருமானர் ஸாதித்தருளின அர்த்தத் தையும் அண்ணன் விண்ணப்பஞ்செய்த அர்த்தத்தையும் அதற்கு உத்த ரத்தையும், (వాధూలధుర్యవరదార్యగురోర్బభాణ స్వప్నే యతీంద్రవపురేత్య కృపాపరో౽యః। శేషో౽ప్యహం వరవరో౽యమునిరప్యహం త్వం మామాశ్రయేతి తమహం కలయామి చిత్తే॥ అత్యంతపాపనిరతః కథ మార్యవర్య త్వామాశ్రయేహమితి తం కృపణం వదంతం। దృష్ట్వా క్షమామి నను దాశరథిత్వదీయస్యాపరాధమితి తం ప్రపదన్మమీడే) (வாதூலதுர்யவரதார்ய குரோர்ப்பபாண ஸ்வப் நேயதீந்த்ர வபுரேத்ய க்ர்பாபரோயஃ - சேஷோப்யஹம்வரவரோ முநிரப்ய ஹம்த்வம் மாமாச்ரயேதித மஹம்கலயாமிசித்தே - அத்யந்தபாபநிரதஃகத மார்யவர்யத்வாமாச்ரயேஹமிதிதம்க்ர்பணம்வதந்தம் - த்ர்ஷ்ட்வாக்ஷமாமி நநுதாசரதீத்வதீய ஸர்வாபராதமிதிதம் ப்ரபதந்தமீடே)என்றுபெரியோர் கள்அநுஸந்தித்தார்கள். அண்ணன் தம்பிமார்களைக் கூட்டிக்கொண்டு

(అద్య మే సఫలంజన్మ సుప్రభాతా చ మే నిశా) (அத்யமேஸபலஂஜந்ம ஸுப்ரபாதாசமே நிஸா) என்றுசொல்லிக்கொண்டு புறப்பட்டு ஆச்சியாருகேசென்று தண்டனிட்டு அவர்பயப்படாதபடிக்கு முந்துற ஸ்வப்நவ்ர்த்தாந்தத்தை யருளிச்செய்ய, ஆச்சியார், தமக்குஜீயர் ஸம்பந்தமுண்டானபடியையும், அதற்கு மூலபூதமான ஜீயருடைய பாதுகாதீர்த்தவைபவத்தையும், தம்முடைய திருத்தமப்பனாரான அப்பாவுக்கு ஜீயர்நீராடியருள அந்ததீர்த்தத்திலே அவகாஹித்ததத்தால்வந்த ஜ்ஞாநாதிக்யத்தையும், ஆச்சியார்முகத்தாலே கேட்டருளி அத்யந்தஹ்ருஷ்டராய்ப் புறப்பட்டு சிங்கரையரைக்கண்டு உகந்து அவருக்கு எல்லாவற்றையு மருளிச்செய்துகொண்டு திருக்காவேரிக்கெழுந்தருளி நீராடி நித்யகர்மாநுஷ்டாநங்களாய்ப் புறப்பட்டருளி;

சுபஸூசகங்களாயிருக்கிற நிமித்தங்களைச் செய்துகொண்டு(తథా గతాం వ్యథితా మనిద్రితాం వ్యపేతహర్షాం పరిదీనమానసాం। శుభాన్నిమిత్తాని శుభాని భేజిరే నరం శ్రియా జుష్టమివోపజీవినః)(ததாகதாஂ தாஂவ்யதிதாமநித்ரிதாஂ வ்யபேதஹர்ஷாஂபரிதீநமாநஸாஂ-ஶுபாந்நிமித்தாநிஶுபாநி பேஜிரே நரஂஶ்ரியாஜுஷ்டமிவோபஜீவிந:) என்கிறபடியேபோய் திருமாளிகையிலே யெழுந்தருளி ஆச்சியாரைக்கண்டு, (రఙ్గేశ కైఙ్కర్యసుతీర్థదేవరాజార్యజం బాహులభాగ్యశీలా। రమ్యోపయన్తుః పదసంశ్రయేణ ఉస్మత్కులం పావనమాతనోతి) (ரங்கேஶகைஂகர்யஸுதீர்த்ததேவராஜார்யஜாஂபாகுலபாக்யஶீலா - ரம்யோபயந்துঃ பதஸஂஶ்ரயேண யா உஸ்மத்குலஂ பாவநமாதநோதி) என்றநுஸந்தித்தருளி உம்முடைய திருக்கைகளாலே ப்ரஸாதப்பட்டன்றோ இப்பேறுஸித்தித்தது என்று உகந்தருளி உத்தம நம்பியை அழைத்துவரப்போகவிட்டு, தாமும், தம்முடைய தாயாதரான கந்தாடை அய்யங்கார்கள் எல்லாருக்கும் இச்செய்தியையருளிச்செய்து அவர்களுக்கு ஜீயர்ஸம்பநத முண்டாக்கும்படி திருவுள்ளமாய் அவர்களுடைய அகங்களிலே எழுந்தருள ஆச்சியார்குமாரரான அண்ணவும், தாசரதி அப்பையும், தந்தை தாய் எம்பாவும், அண்ணன் திருவடிகளிலே தீர்க்கப்ரணாமத்துடனே "தேவரீருக்கு ஸாதித்த ஸ்வப்நமே அடியோங்களுக்கும்" என்று விண்ணப்பஞ்செய்ய, அவர்களையும் கூட்டிக்கொண்டு லக்ஷ்மணாசார்யரென்று ப்ரஸித்தராயிருந்தவருடைய பௌத்ரராயிருக்கிற எம்பாவண்டையிலே எழுந்தருளியாசித்து இச்செய்தியை அருளிச்செய்ய, அவர் குபிதராய் அபிஜநவித்யாவ்ர்த்தங்களையுடைய மஹாகுலத்திலே பிறந்து இப்படியானுயோவென்று நாநாபௌருஷோக்திகளைப் பண்ணிவிட, அவருக்கு புத்ரகோடிகளாய பெரிய ஆயிதிருவஂசத்தராயுள்ள அப்பாமுதலானார் பதின்மர்க்ர்ஹங்களிலு மெழுந்தருளி ஹிதமருளிச்செய்ய, அவர்களுக்கு அநபிமதமாய்த் தோன்றி பரிஹரிக்க, திருவுள்ளத்தில் குறையோடே புறப்பட்டருளி தம்முடைய திருவஂசஸ்த்தராய் தமக்கு ப்ராத்ர் கோடிகளாயுள்ளவர்கள் திருமாளிகைகளுக்கும் புத்ரகோடிகளுடைய இருபது திருமாளிகைகளுக்கும் எழுந்தருள அவர்கள்

அதிப்ரவணராய் எதிர்கொண்டு தண்டன் ஸமர்ப்பித்து அண்ணனருளிச் செய்த ஹிதங்களை யெல்லாங்கேட்டு தங்கள் தங்களுக்குண்டான ஸ்வப்நங் களையும் உபச்ருதிகளையும் சகுநங்களையும் அழகியமணவாளமாமுனியினு டைய வைபவங்களையுஞ் சொல்லிக்கொண்டு ஆச்ரயணத்துக்கு த்வரிக்க, தமக்கு ப்ராத்ர்கோடிகளாயுள்ளவர்களையும் புத்ரகோடிகளாயுள்ளவர்களை யும் தங்கள் தங்கள் பார்யாதிகளையுங் கூட்டிக்கொண்டு உபஹாரபுரஸ்ஸர மாக மடத்துக்குப் புறப்படும்படி நியமித்து, தம்முடைய திருமாளிகையிலே திருத்தாயார் திருத்தமப்பனுர் முதலானவர்களையும் விட்டு குருகுலவாஸ மாக தாரக போஷக போக்யங்களெல்லாம் அண்ணன் திருவடிகளே என் றிருக்கிற திருவாழியாழ்வார் பிள்ளையையும், சுத்தஸத்வம் அண்ணனையும், திருத்தம்பிமாரையும், மற்றும் பெரியோர்களையும் அழைத்துவைத்துக் கொண்டு, சுத்தஸத்வமண்ணன் பாக்யாதிசயத்தாலே ஸ்வதஏவ மிகவும் பாகவதப்ராவண்ய முடையராய் ஜீயருடைய திநசர்யையை அடிக்கடி ஆராய்ந்துகொண்டு அதிப்ரீதராய் அண்ணன் திருவுள்ளம் ஒருவேளையில் கலங்கினுலும் (గుఱుం రహసి బోధయేత్) (குருஂ ரஹஸி போதயேத்) என்கிற படியே திருவடிகளுக்கு ஹிதபரராய் ஜீயரிடத்திலே ப்ரீதிவரும்படி யரு ளிச்செய்துகொண்டு போருகிறவராயிருப்பர்; அத்தைத் திருவுள்ளத்தி லேவைத்து அண்ணனருளிச்செய்தபடி;-

'இவருக்கு ''சுத்தஸத்வம்'' என்கிறதிருநாமம் யதார்த்தமாயிற்று, நமக்கு போர நல்வார்த்தை சொல்லிப்போருவர், இவருடைய ஹ்ர்தயாநு ஸாரியாய் யாவத்கார்யமும் கடித்தது, இனி ஒரு குறையுமில்லை' என்று அருளிச்செய்துகொண்டு தம்முடையவர்களும் மற்றக்கந்தாடை அய்யங் கார்களும் அவரைக்கடாக்ஷித்துக்கொண்டிருக்க, அவர்களில் சிலரை எம்பா மாறுபடுத்திவிட, சிலர் சென்று அண்ணனுக்கு இச்செய்தியை அறிவிக்க மிகவும் கோபித்தருளி அவர்களைவிடும் என்று மற்றவர்களை யெல்லாம் கூட்டிக்கொண்டு ஜீயர்ஸந்நிதிக் கெழுந்தருளுவதாக ஆச்சி யாரையழைத்து ஸமயமறிந்து திருவுள்ளத்திலே படுக்கும்படிக்கு அனுப் பியருள, அவரும் சென்று திருமலையாழ்வாரில் ஸ்ரீவைஷ்ணவகோஷ்டி யிலே ஜீயரெழுந்தருளியிருக்கிறபடியினுலே கிட்டி விண்ணப்பஞ்செய்ய ஸங் கோசப்பட்டு ஒருஸாத்விக ஸ்ரீவைஷ்ணவரையழைத்து ஸ்வாமியைஉள்ளே ஒருக்காலெழுந்தருளும்படிக்கு ஏகாந்தமாகத் திருச்செவியிலே விண்ணப் பஞ்செய்யுமென்ன, அவர் ஏதுக்கென்ன, அண்ணன் முதலான கந்தாடை அய்யங்கார்களெல்லாருங்கூடி எழுந்தருளுகிருர்களென்று ஆச்சியாரும் உள்ளேசென்றுர்; அந்த ஸ்ரீவைஷ்ணவர், அபயதாவாகக்ரஹித்து ஓடிச் சென்று ''ஸ்வாமீ! சீக்ரமாக உள்ளே எழுந்தருள, கந்தாடை அய்யங்கார் கள் கூடிவருகிருர்களாம்'' என்ன; ஜீயர் துணுக்கென்று எழுந்திருந்து புறக்கடைக் கெழுந்தருள, உள்ளே எழுந்தருளக் காணுமையாலே ஆச் சியார் அந்தஸ்ரீவைஷ்ணவர் என்னவிண்ணப்பஞ்செய்தாரோவென்று பய

ப்பட்டு சோபகவார்த்தையை விண்ணப்பஞ்செய்யவேணுமென்று புறக்கடையிலே புகுவதற்கு ஸமயமாகக்காணுமையாலே, புறம்பே ஒளிக்க அண்ணன் முதலானார் பெருங் கூட்டமாக த்திருமுன்காணிக்கைகளும் பலங்களும் முன்னேபிடித்துக்கொண்டு மடத்துவாசலிலே யெழுந்தருளி வானமாமலைஜீயர்முதலானவர்களை புரஸ்கரித்தருளி அவர்களுடனே அண்ணன் அதிவிநயராய், "ஜீயர் திருவடிகளே ப்ராப்யப்ராபகமாகவந்தடைந்தோம், தேவரீர் அங்கீகரிப்பித்தருளவேணும்" என்ன; வானமாமலைராமாநுஜ ஜீயர் இதுகேட்டு அதிப்ரீதராய் ஸ்தப்த்தராயிருந்து பிற்பாடு ஸந்நிதிக்கெழுந்தருள; அதற்குள்ளே ஆச்சியார் அதித்வரையுடனே ஸமயமானவாறே ஜீயர்திருவடிகளிலே தண்டன்ஸமர்ப்பித்து, "இற்றைக்குசோபநம், அண்ணன் முதலானொல்லாரும் திரளாகத் திருவடிகளிலேஆச்ரயிக்க எழுந்தருளுகிறார்கள்" என்ன, அவ்வளவிலே வானமாமலை ராமாநுஜஜீயரெழுந்தருளி ஹர்ஷபரவசராய் விண்ணப்பஞ்செய்ய ஜீயர்கேட்டு உகந்தருளி இவற்றிற்கெல்லாம் மூலபூதை ஆச்சியாரன்றோவென்று திருவுள்ளம்பற்றி திருமலையாழ்வாரிலே வந்து விண்ணப்பஞ்செய்த ஸ்ரீவைஷ்ணவரையழைத்தருளி, "உம்முடையபெயரேது" என்று விநோதமாகக் கேட்டருள, அவரும் "அடியேன் இராமாநுஜதாஸன்" என்ன, அப்படியன்று, அசட்டாச்சான் என்று அவரைப் பரிஹஸித்து,

திருவுள்ளத்தில் உகப்போடே, (విద్యావిముక్తజననీవినయాధికత్వమాచారసమ్ప సనువేలవికాసశీలమ్। శ్రీలక్ష్మణార్యకరుణావిషయీకృతానాం చిత్రంనదాశరథివంశసముద్భవానామ్) (வித்யாவிமுக்திஜநநீவிநயாதிகத்வமாசாரஸம்பதநுவேலவிகாஸஶீலம்- ஸ்ரீலக்ஷ்மணார்யகருணாவிஷயீக்ருதாநாம்சித்ரம்நதாஶரதிவம்ஶஸமுத்பவாநாம) என்றருளிச்செய்து புறப்பட்டருளி மடத்துவாசலிலே எழுந்தருளி அவர்களெல்லாரையுங்கண்டு, (శ్రీరామానుజయోగీన్ద్రకరుణాపరిబృంహితాం। శ్రేయసీమనఘాంవన్దే శ్రీమద్వాధూలసన్తతిమ్) (ஸ்ரீராமாநுஜயோகீந்த்ரகருணாபரிப்ரும்ஹிதாம்-ஶ்ரேயஸீமநகாம்வந்தே ஸ்ரீமத்வாதூலஸந்ததிம்) என்றநுஸந்தித்தருள, அவர்களெல்லாரும் திருவடிகளிலே தீர்க்கப்ரணாமம் பண்ணி, (నకర్మణా నప్రజయా ధనేన) (వేదాహమేతం) (நகர்மணாநப்ரஜயா தநேந) (வேதாஹமேதம) என்கிற பஞ்சாதிகளை அநுஸந்தித்து உபஹாரங்களை ஸமர்ப்பிக்க அங்கீகரித்தருளி உள்ளே எழுந்தருளி திருவோலக்கமாக எழுந்தருளியிருந்து, (பொலிகபொலிக) என்கிற திருவாய்மொழிக்கும், திருப்பல்லாண்டுக்கும் ஸங்க்ரஹமாக அர்த்தோபந்யாஸஞ்செய்தருளி, இப்படி ஸ்ரீவைஷ்ணவஸம்ருத்தி நித்யமாய்ச் செல்லவும், எல்லாரும மங்களாசாஸநபரராகவும ஆசீர்வதித்தருளி எழுந்தருளியிருக்க; அண்ணன வானமாமலைஜீயருடனே ஸமாச்ரயணத்துக்கு த்வரித்தருள, அழகிய மணவாளமாமுனியும் எழுந்திருந்துஅப்பாலே ரஹஸ்யஸ்தலத்திலே எழுந்தருளியிருந்து வானமாமலை ஜீயரைக்கொண்டு அண்ணனை அங்கே அழைப்பித்து, "தேவரீர் மஹாகுலப்ரஸூதரும் எல்லாருக்கும் குருகுலமன்றோ, இப்படி ஏதுக்கு"

என்ன; அப்படிகளொன்றும் அருளிச்செய்ய வேண்டா என்று தாம் முன்னிருந்த இருப்புக்கு க்ஷாபணம்பண்ணிக்கொண்டு ஸ்வப்நவர்த்தாந்தத்தை முதலிலிருந்து தப்பாமல் விண்ணப்பஞ்செய்யக்கேட்டருளி, ஈயாறுடைய திருவம்சஸ்த்தராய் அநுகூலித்தவர்கள் சிலருண்டே அவர்களுக்கும், வேறே சில பாக்யாதிகருக்கும் பெருமாள் இரங்கி ஸ்வப்நாதிகளாலே தேவரீர் நியமநத்திலே கூட்டுகிறார், அவர்களையுங் கூட்டிக்கொண்டு இற்றைக்கு மூன்றுநாள்கழித்து நாலாம்நாள் தேவரீர் திருவுள்ள ப்ரகாரத்திற்கு எல்லாருக்கும் ஸமாச்ரயணமாகிறதென்று நிர்ணயித்தருளிப் புறப்பட்டுத் திருவோலக்கத்திலே யெழுந்தருளின வநந்தரம், சாத்துப்படி அடைக்காயமுது விநியோகமாய் எல்லாரும திருமாளிகைக் கெழுந்தருளினார்கள்.

மீளவும் பெரியபெருமாள் சிலரைத் திருத்துவதாகத் திருவுள்ளம் பற்றி (పునస్స్వప్నోపగే శేనదే శే దే శే నిరజ్కుశః। అయమర్చావతారత్వసమాధమవధీరయత్। అత్యమత్యంతచేతస్య తత్వమాత్యంతికంహితం। అసజ్కుచితమాచఖ్యౌ భుజజ్గశయనః పుమాన్) (புநஸ்ஸ்வப்நாபதேஶேந தேஶேதேஶேநிரங்குஶ:-அயமர்சாவதாரத்வஸமாதிமவதீரயந் - அத்யமத்யந்ததேதஸ்ய தத்வமாத்யந்திகம்ஹிதம் - அஸங்குசிதமாசக்யௌ புஜங்கஶயந:புமாந்) என்று இத்யாதிகளாலே (గురుశ్చస్వప్నదృష్టశ్చ) (குருஶ்சஸ்வப்நத்ருஷ்டஶ்ச) என்கிறபடியே அவர்கள் ஸ்வப்நத்திலே அர்ச்சாவதாரரூபியாய் வந்து "நாமே இப்படி ஆசார்யரூபேண அவதரித்தோம், நீங்களும் அப்படியே (ఆచార్యంమాంవిజానీయాత్ భవబన్ధవిమోచకమ్) (ஆசார்யமாம்விஜாநீயாத் பவபந்தவிமோசகம்) என்கிறபடியே விசேஷப்ரதிபத்திபண்ணி ஆஶ்ரயியுங்கோள் என்றருளிச்செய்ய; அநந்தரம், (రామానుజపదామ్భోజ సౌగన్ధ్యనిధయోஃయే। అసాధారణమాన్నాత్యమపధూయనిజంధయాః। తే జయన్తస్స్వాత్మానం తత్తేజస్సమ్పదాసదా। స్వేషామతిశయం మత్వా తత్త్వేన శరణం యయుః) (ராமாநுஜபதாம்போஜஸௌகந்த்ய நிதயோபியே - அஸாதாரண மௌந்நத்யமவதூய நிஜம்தியா - உத்தேஜயந்த ஸ்ஸ்வாத்மாநம் தத்தேஜஸ்ஸம்பதாஸதா - ஸ்வேஷாமதிஶயம் மத்வா தத்வேநஶரணம்யயு:) என்கிறபடியே ராமாநுஜபுரீக்ஷீதராய் அபிஜநவித்யாவர்த்தங்களா லுயர்ந்திருக்கிற கந்தாடை அண்ணன் முதலான ஆசார்ய புருஷர்களெல்லாரும் தந்தாம் உயர்த்திகளைப் பாராமல் ஜீயர் திருவடிகள் ஸம்பந்தமே தங்களுக்கு ஸர்வாதிசயங்களுமாகவெண்ணி ஜீயர்திருவடிகளை சரணமாக வடைந்திருக்க அண்ணன் திருமுன்பே சென்று தேவரீர் அடியோங்களை க்ருபை பண்ணுகைக்கு இட்டிருந்தநாளும் வந்தது, எம்பா முதலானாராலே ப்ரதிபந்திகப்பட்ட நம்முடையவர்களுக்கு பெருமாள் ஸ்வப்நாதிவ்யாஜத்தாலே திருத்தத்திருந்தி திருவடிகளே ப்ராப்யமாகவந்து இந்த கோஷ்டியிலே கூடியிருக்கிறார்கள், எல்லாரையும் க்ருபைபண்ணியருளத் திருவுள்ளமாக வேணுமென்று விண்ணப்பஞ்செய்ய; ஜீயர், வானமாமலை ஜீயரை அழைத்து அதற்கு வேண்டியவைகளை ஸந்நத்தமாக்க நியமித்தருளி தாமும்

திருவாராதநஞ் செய்தருளி திருப்பணியாரமும் பழவமுதும் பூர்ணமாகக் கண்டருளப்பண்ணி ஸந்நிதிமுன்பாக எழுந்தருளியிருந்து ஸமாச்ரயணமாக வேண்டியவர்களெல்லாரையும் அழைத்து அண்டையிலே வைத்துக்கொண்டு செய்யுங் கிரிகைகளெல்லாஞ் செய்தருளி, (తాపఃపుణ్డ్రస్తథానామ మన్త్రోయాగశ్చపఞ్చమః) (தாபஃபுண்ட்ரஸ்ததாநாம மந்த்ரோயாகஶ்சபஞ்சம:) என்கிறபடியே பஞ்சஸம்ஸ்காரங்களையும் செய்தருளி பாரமைகாந்த்யமஹா பலத்தையும் பூர்ணமாக்கி உகந்தருளி, நெடும்போது அண்ணனை, (இருந்தான் கண்டுகொண்டு) என்கிறபடியே கடாக்ஷித்துக்கொண்டிருந்து ;

வானமாமலை ராமாநுஜஜீயரைக் காட்டியருளி, இவர் நமக்கு ப்ராணஸுஹ்ருத்து, நமக்குண்டான அதிசயமெல்லாம் இவர்க்குண்டாக வேணுமென்று அருளிச்செய்து முதலியாண்டான் திருவம்சத்திலே நமக்கு ஸம்பந்தமுண்டானாற்போலே இவர்க்கு முண்டாகவேணுமென்று அருளிச்செய்ய, அண்ணன், திருவுள்ளக் கருத்தறிந்து அடியேனை அங்கே ஆச்ரயிப்பித்தருளாதே யொழிந்ததே என்று விண்ணப்பஞ்செய்ய, நமக்கு ப்ராப்தமானத்தை விடப்போமோவென்ன, அண்ணன் தம்முடைய அநுபந்திகளை ஸாபிப்ராயமாக பின்னே கடாக்ஷித்தருள, பாவஜ்ஞராய் ஆச்சியாருடைய குமாரராயிருக்கிற அண்ணா எழுந்திருந்து தண்டன் ஸமர்ப்பிக்க என்னென்று கேட்டருள, "அடியேனை எங்களாண்டவன் வானமாமலை ராமாநுஜ ஜீயருடைய திருவடிகளிலே ஆச்ரயிப்பிக்க வேணும்" என்ன, ஜீயர் மிகவு முகந்தருளி, "நம்மப்பாச்சியா ரண்ணாவன்றோ" என்று அருளிச்செய்து அவரைக் கையைப்பிடித்துத் தம்முடைய அண்டையிலே வைத்துக்கொண்டு தாம் எழுந்தருளியிருந்த ஆஸநத்திலே வானமாமலை ஜீயரையிருத்தி தம்முடைய திருக்கைகளிலிருந்த ஆழ்வார்களை அவர் திருக்கைகளிலே ஸாதித்தருளி "இவர்க்கு ஸாதியும்" என்ன, அவர் சற்று இருய்க்க, அப்படி செய்யவேண்டா, நமக்கு ப்ரியமானத்தைச்செய்யும் என்றருளிச்செய்து அண்ணாவை ப்ரீத்யதிசயத்தாலே தழுவிக்கொண்டிருந்து ஆச்ரயிப்பித்தருளினார் ; உடனே அண்ணாவுடைய திருத்தம்பியாரான தாசரதி அப்பையும் அங்கே ஆச்ரயித்தார். உடனே வானமாமலை ராமாநுஜஜீயர், போதும், இனி அடியேனை விடவேணுமென்று எழுந்திருந்து தூரப்போய் தண்டன் ஸமர்ப்பித்து நிற்க, அப்படியே யாகிறது எழுந்திருக்க என்று அருளிச்செய்து, தாம் முன்போலே எழுந்தருளியிருந்து கந்தாடை அப்பன் முதலான அண்ணனுடைய ப்ராதாக்களும், மற்ற ப்ராத்ர்கோடிகளா யுள்ளவர்களும், புத்ரகோடிகளா யுள்ளவர்களும், ஸ்வபார்யாதிவர்க்கங்களுடனே நூற்றிருபது திருநாமமும், மற்றும் சிங்கரையர் முதலான பகவத் க்ருபாபாத்ர பூதரான அநேகம்பேர்களும் ஆச்ரயித்தார்கள். அந்த ஸமயத்திலே கோயில் பரிகரமனைத்துக்கொத்தும் ஸகல மங்களவாத்யங்களுடனே பெருமாளுடைய ப்ரஸாதங்கொண்டுவர ஜீயர் எதிர்கொண்டு

ப்ராஹ்மபுரஸ்ஸரமாக ஆதரித்து உள்ளே எழுந்தருளப்பண்ணிக்கொண்டு போயிருக்க, அண்ணன் அவர்களை யதோசிதம் ஆதரித்து பஹுமானஞ் செய்தருளி அவர்களுடனே ஜீயர் தொடக்கமானவர்களும் அன்று ஆச்ரயித்தவர்களும் கோயிலிலே எழுந்தருளி, எம்பெருமானார், ஆழ்வார், பெருமாள், நாய்ச்சியார், எல்லாரையும், (దేవీగోదా) (தேவீகோதா) இத்யாதிப்படியே மங்களாசாஸனஞ் செய்தருளி மீண்டு மடத்திலே எழுந்தருளி ததீயாராதநமும் மஹோத்ஸவமாக நடந்தது. (జగద్రక్షపరోనః) (ஜகத்ரக்ஷபரோநந்தः) என்று தோழப்பர் ஸ்வப்நத்திலே பேரருளாளர் அருளிச்செய்தது பலிக்கக் கண்டோமென்று எல்லாரும் உகந்தருளினார்கள். இப்படி ஆஶ்ரயித்தவர்களெல்லாரும் ஜீயருடைய அதிமாநுஷமான அத்புத சரிதங்களெல்லாவற்றையும் ஸேவித்து, (చిరవిరహితశ్చిన్తా సన్తానజర్జరచేతసం భుజగశయనం దేవంభూయః ప్రసాదయితుం ధ్రువం । యతికులపతిశ్రీమాన్రామానుజస్స్వయమిత్యభూదితిసమతుష్యన్ సర్వేసర్వత్రతత్రసుధీజనాః)(சிரவிரஹிதஶ்சிந்தாஸந்தாநஜர்ஜரசேதஸं புஜகஶயநं தேவंபூய: ப்ரஸாதயிதும் த்ருவம்-யதிகுலபதிஶ்ரீமாந்ராமாநுஜஸ்ஸ்வயமித்ய பூதிதிஸமதுஷ்ந ஸர்வே ஸர்வத்ரதத்ரஸுதீஜநா:)என்கிறபடியேயதிவரபுநரவதாரமாகவெண்ணித் தாங்களும் சிரோபாஸிதஸத்வர்த்தரென்னும்படி அவர் திருவடிகளைப் பழுக்க ஸேவித்துஅங்குத்தைக்குப் பரிவராயிருந்தார்கள். இப்படிஜீயர், சிஷ்யஸம்பத்துடனே இனிதாக வாழ்ந்தருளுகிறபோது திருவாழியாழ்வார்பிள்ளையை, ஸ்ரீகோசங்களை யெல்லாம் அப்போதைக்கப்போது சோதித்து ஸம்ரக்ஷணம் பண்ணிக்கொண்டுவரவும் ஏறியருளப் பண்ணவேண்டிய ஸ்ரீகோசங்களை லேகரிகளையிட்டு நன்றாக ஏறியருளப்பண்ணவும் தாமபேக்ஷித்த அவஸரங்களிலே அபேக்ஷித்த ஸ்ரீகோசங்களை ஸமர்ப்பிக்கவும் ஈடு முப்பத்தாறாயிரப்படி அர்த்தமாம்படி சிறிதுவ்யாக்யாநங்களைக் கூட்டிப்ரதிஏறியருளப்பண்ணிவைக்கவும் நியமிக்க அவரும் அப்படியே எல்லாவற்றையும் செய்துகொண்டு போந்தார்.

—(ஆண்டபெருமாள் அண்ணனை ஆச்ரயித்தது.)—

ஒருநாள் சுத்தஸத்வம் அண்ணனையழைத்தருளி போரவுகந்தருளி ஆழ்வாருக்கு ஸ்ரீமதுரகவிகளைப்போலே நீர் அண்ணனுக்கு அபிமதவிஷயமாக விருக்கப்பெற்றீரே "தன்னாரியனுக்குத் தானடிமை செய்வதவனின்னாடுதன்னிலிருக்கும் நாளன்றோ, ஸகல சுச்ரூஷைகளும்பண்ணிக்கொண்டு வாழுமென்று ஆசீர்வதித்து;குமாண்டூர் ஆச்சான்பிள்ளை பௌத்ரராயும் ஜ்ஞாநாதிகராயும் ஸகலசாஸ்த்ரபாரங்கதராயுமிருக்கிற ஆண்ட பெருமாளை, ஜீயர் திருவடிகளை ப்ரபத்திபண்ணி, "உம்முடைய திருவடிகளுக்கு அந்தரங்கராய் தர்சநப்ரவர்த்தகராம்படி விநியோகித்துக்கொள்ளும்" என்றுவிட அண்ணனும் அப்படியே செய்தருளினார்.

அக்காலத்திலே ஜீயருடைய பூர்வாச்ரமத்தின் குமாரரான * நம்மையனிராமாநுசன் திருநகரியிலே வளர்ந்தருளினபின்பு அங்கே திருக்கல்யா

ணஞ் செய்தருளி சிலகாலத்துக்குமேல் அவருக்கு குமாரர் திருவவதரிக்க அவருக்கு "அழகியமணவாளப்பெருமாள்நாயனார்" என்றுஜீயர் திருநாமம் சாத்தியருளினார். பின்பு அவர் ஸ்ரீவில்லிபுத்தூரிலே யெழுந்தருளியிருக்க பின்னுமொருகுமாரர் திருவவதரிக்க அவருக்குத் திருநாமமேதென்று ஜீயர்ஸந்நிதியிலேகேட்டுவரக்காட்ட, ஜீயர், ஸ்ரீவில்லிபுத்தூரிலே பிறந்த பிள்ளைக்கு பெயரேதென்று கேட்டுவரவிடுவதென் என்று அருளிச்செய்து "பெரியாழ்வார்" என்று திருநாமஞ்சாத்துங்கோள்" என்று அருளிச் செய்து போகவிட, அப்படியே திருநாமஞ்சாத்தியருளினார். அவர்களும் உபநீதரானபின்பு ஜீயர் திருவடிகளை ஆச்ரயித்தார்கள். அவர்களில் ஜீயர் நாயனார், திருவடிகளைப் பிரியாமல் எழுந்தருளியிருந்தார். ஸ்ரீபாதத்து முதலிகளெல்லாரும் ஸ்வஸ்வபுத்ரர்களுக்குநாயனாரென்றுதிருநாமம்சாத்து கையாலே இவருக்கு "ஜீயர்நாயனார்" என்றது நிரூபகமாயிருக்கும். நாத முனிகளுக்கு ஆளவந்தாரைப்போலே தமக்குபௌத்ரரான இவரை தர்சநப்ரவர்த்தகராம்படி விசேஷகடாக்ஷம்செய்தருளினார். ஆசார்யபௌ த்ரரான அவரும், தீபாதுத்பந்ந ப்ரதீபம்போலே மிகவும் ப்ரகாசமாநரா யிருந்தார். இத்தைக்கண்டு ஸ்ரீபாதத்துமுதலிகள், (అస్మాసువత్సలతయా కృపయా సుభూయః స్వచ్ఛావతీర్ణ మివ సౌమ్యవరం మునీన్ద్రం । ఆచార్యపౌత్రమభిరామవరాభిధానమస్మద్గురుం గుణనిధిం గురుమాశ్రయామః) (அஸ்மாஸுவத்ஸலதயா க்ருபயா ஸுபூய:-ஸ்வச் சாவதீர்ணமிவஸௌம்யவரம் முநீந்த்ரம் - ஆசார்யபௌத்ரமபிராமவராபி தாநமஸ்மத்குரும் குணநிதிம் குருமாச்ரயாம:) என்று அநுஸந்தித்துப் போந்தார்கள்.

பின்பு (భగవద్భవదుద్భవస్థలీ భవతి శ్రీనగరీ గరీయసీ)(பகவந்பவதுத்பவஸ்தலீபவதி ஸ்ரீநகரீகரீயஸீ) என்று சொல்லுகிறபடியே ஜீயர், தமக்குப் பிறந்தகமான திருநகரியிலே எழுந்தருளி ஆழ்வாரைத்திருவடித்தொழவேணுமென்று திருவுள்ளமாய் (குருகூர்நம்பி முயல்கின்றேனுன்றன் மொய்கழற்கன் பையே) என்கிறபடியே உத்ஸாஹத்தையுடையராய் நம்பெருமாளை ஸேவி த்து அநுமதிகொண்டு நம்மாழ்வாரைஸேவிக்கப்புறப்பட்டருளி *அரங்கத் துறையுமின்றுணைவனேவழித்துணையாக எழுந்தருளி, பிள்ளை திருவவதார ஸ்தலமானகுந்திநகரத்திலே த்ரிராத்ரமெழுந்தருளியிருந்து, (சித்தந்திரு மால்மேல்வைத்தருளுஞ்சீர்மனனர்-நத்தமிதுகாணு நாந்தொழில் - மூத்த ராய்-போனாரேயாகிலும் பூங்கமலத்தாள்கடனைத்-தாமாரவைத்தார்தலம்) என்றநுஸந்தித்துப்புறப்பட்டருளி, அநந்தரம்(యాని యాని చ దివ్యాని దేశే దేశే జగన్నిధేః। తాని తాని సమస్తాని స్థానాని సమసేవత) (யாநியாநிசதிவ்யாநிதேசேதேசே ஜகந்நிதே:-தாநிதாநிஸமஸ்தாநி ஸ்த்தாநாநிஸமஸேவத) என்றும், (தானுகந்த ஊரெல்லாம் தன்தாள்பாடி) என்றும் சொல்லுகிறபடியே வழியிலுண்டான திருப்பதிகளையெல்லாம்திருவடித்தொழுது அவ்வவ்விடங்களிலே யதோசி தமான மங்களாசாஸநம்பண்ணியருளி, அநந்தரம், (వైకుణ్ఠనాథవిజయాసనభూ

మిపాలాన్ దేవేశపఙ్కజవిలోచనచోరనాట్యాన్ । నిక్షిప్తవిత్తమకరాలయకర్ణపాశాన్ నాథం నమామి వకుళాభరణైకసార్థమ్ (வைகுண்டநாத விஜயாஸநபூமிபாலாந் தேவேஶ பங்கஜவிலோசநசோரநாட்யாந்- நிக்ஷிப்தவித்த மகராலயகர்ணபாஶாந் நாதந்நமாமி வகுளாபரணைகஸார்த்தம்) என்கிறபடியே அஷ்டதளம்போலே யிருக்கிற ஸ்ரீவைகுண்டம் முதலான திருப்பதிகளை ஸேவித்துதத்கர்ணிகை போலேயிருந்துள்ள திருநகரியைச்சென்றுகிட்டி திருச்செங்கணித்துறையிலே நீராடி, * கேசவன் தமரில் என்கிறபடியே த்வாதச நாமங்களையும் சாத்தியருளித் தாமும் முதலிகளுமாக *குயில்நின்றார் பொழிலையும் *குன்றமடங்களையும் உயர்ந்த திருமாளிகைகளையும் ஊரையும் அநுபவித்துக்கொண்டு (புக்ககத்தினின்றும்பிறந்தகத்திற் போந்ததுபோல்-தக்கபுகழ்த் தென்னரங்கந்தன்னினின்றும்-மிக்கபுகழ்-மாறன்றிருநகரிவந்தோமரங்கன்றன்-பேறன்றோ நெஞ்சே யிப்பேறு) என்றநுஸந்தித்துக்கொண்டு எழுந்தருளியிருக்கிறவளவில் * நல்லார் பலர்வாழும் திருக்குருகூரிலுண்டான ஸத்துக்களெல்லாரும் குழாங்குழாமாகவந்து திருவடிகளிலே ஸேவிக்க அவர்களையும் க்ருபைபண்ணியருளி அவர்களுடனே கூடவெழுந்தருளி, ப்ரதமம் எம்பெருமானாரை, (శ్రీమాధవాఙ్ఘ్రి) (ஸ்ரீமாதவாங்க்ரி) என்று தொடங்கி, (రామానుజంయతిపతింప్రణమామిమూర్ధ్నా) (ராமாநுஜம்யதிபதிம் ப்ரணமாமிமூர்த்நா) என்று ஸேவித்தருளி அதிப்ரீதியுடனே அங்கு நின்றும் புறப்பட்டு பிள்ளை திருமாளிகையேற வெழுந்தருளி தண்டன்ஸமர்ப்பித்து உள்ளே புகுந்து இனவாயர் தலைவனையும் மங்களாசாஸநஞ் செய்தருளி, (నమఃశ్రీశైలనాథాయ) (நமஶ்ஸ்ரீஶைலநாதாய)என்றநுஸந்தித்துபிள்ளைஎழுந்தருளியிருந்து வ்யாக்யானஞ் செய்தருளின ஸ்தலத்தையும் ஸேவித்து அங்குநின்றும் புறப்பட்டு * குன்றம்போல் மணிமாடங்களையும் * செம்பொன் மாடங்களையும் ஸேவித்துக்கொண்டு போய் * உபயப்ரதாநப்ரணவமான வுறைகோயிலிலேபுக்கு, (వకుళాభరణంవన్దే జగదాభరణంమునిమ్)(வகுளாபரணம்வந்தே ஜகதாபரணம்முநிம்) என்கிறபடியே முந்துற * நாட்கமழ்மகிழ்மாலை மார்பனான ஆழ்வார்திருவடிகளைச் சென்று கிட்டி, (మాతాపితా- மாதாபிதா) என்று தொடங்கி, (వకుళాభిరామంశ్రీమత్తదఙ్ఘ్రియుగళం ప్రణమామిమూర్ధ్నా -வகுளாபிராமம் ஸ்ரீமத்ததங்க்ரியுகளம் ப்ரணமாமிமூர்த்நா) என்றநுஸந்தித்து ஸேவித்தருளி *கண்ணிநுண்சிறுத்தாம்பை அநுஸந்தித்து (அன்னையாயத்தனாய்) என்கிற பாட்டின்படியே ஸர்வவிதபந்து விசேஷங்களெல்லாம் தமக்கு ஆழ்வாரேயென்று தோற்றும்படி அதிப்ரேமத்துடனே அநுபவித்துக்கொண்டு நிற்க, ஆழ்வாரும் தேசாந்தரகதனான புத்ரனைக் கண்ட மாதா பிதாக்களைப்போலே காரிமாறப் பிரானார்தாம் இவரைக்கண்டுகொண்டிருந்து, பின்பு தீர்த்தப்ரஸாதங்களையும் ப்ரஸாதித்து இராமாநுசனையும் ப்ரஸாதித்தருளி, (சடகோபர்தேமலர்த்தாட், கேய்ந்தினிய பாதுகமாமெந்தையிராமாநுஜனை, வாய்ந்தெனது நெஞ்சமேவாழ்) என்றும்,

(వకుళాలఙ్కృతం శ్రీమచ్ఛఠకోపపదద్వయం। అస్మత్కులధనం భోగ్యమస్తు మేమూర్ధ్ని భూషణమ్)
(வகுளாலங்க்ருதம் ஸ்ரீமச்சடகோப பதத்வயம்-அஸ்மத்குலதநம்போக்ய மஸ்துமே மூர்த்நி பூஷணம்) என்று மநுஸந்தித்தருளி ஹ்ருஷ்டராய், அநந்தரம், (திரிதந்தாகிலுந் தேவபிரானுடைக், கரியகோலத் திருவுருக்காண்பன்நான்) என்கிறபடியே அவருகந்த விஷயமான பொலிந்துநின்றபிரானையும் மங்களாசாஸநம்பண்ணிப் புறப்பட்டருளி மடமேயெழுந்தருளி அங்கே சிறிதுகால மெழுந்தருளி யிருந்தார். அங்குண்டானவர்க ளெல்லாரும் இவரை அவதாரவிசேஷ மென்றறிந்து இவர்திருவடிகளிலே ஆச்ரயித்தார்கள். அவர்களை க்ருபைபண்ணியருளி மஹாப்ரபாவரா யெழுந்தருளியிருக்கிற காலத்திலே, (சுருதித் தமிழ்மொழியுஞ் சடகோபர்தம்பாதத்தைக் - கருதிப்பரவு மெதிராசராசன் கவியமுதம் - வருதிக்கறிந்துரை செய்யுமோ மாமுனிவன் புகழ்போய்ப் - பருதிக்கதிர் செல்லு மண்டல மேறப் பறந்ததுவே) என்னும் படியான இவருடைய வைபவங்க ளெல்லாவற்றையும் அறிந்திருக்கிறவர்களுக்கு ஆழ்வார் திவ்ய ப்ரபந்தங்களின் அர்த்தமருளிச்செய்துகொண்டிருக்குங் காலத்திலே;

ஆசார்யஹ்ருதயத்திற்குப் பொருள் அருளிச்செய்யும்போது "ஜ்ஞாந சதுர்த்திகளின் மேலேயிறே ஆநந்த ஷஷ்ட்டிக்குதயம்" என்கிற வாக்யத்திற்கு அர்த்தம் ஸ்வரஸமாக வாகாமையாலே இதற்குஅர்த்தமருளிச் செய்வாரரென்று விசாரமுண்டாய் திருநாராயண புரத்தாயி பக்கலிலே இவ்வர்த்தம் கேட்கவேணும் என்னும் பேராசையோடே ஆழ்வார்க்கு விண்ணப்பஞ் செய்து அவரநுமதிகொண்டு திருநாராயண புரத்துக்குப் போவோமென்று புறப்பட்டெழுந்தருளா நிற்க, ஆயியும் ஜீயருடைய ப்ரபாவங்கேட்டு இவரை ஸேவிப்பதாகத் திருநகரிக்கு ஆஸந்நமாக மார்க்கமத்யே வந்து ஸங்கதராக அவரைக்கண்டு, "எண்ணினபலம் எதிரிலே வரப்பெற்றுவதே!" என்று பெரிய ப்ரீதியோடே தீர்க்கப்ரணமம் பண்ணி நிற்க, ஆயியும் தாளுந்தடக்கையுங் கூப்பி ஸேவிக்க இருவரும் அந்யோந்யம் வந்தநபராய் குசலப்ரச்நம்பண்ணிநிற்க இத்தைக்கண்டு ஜீயர் ஸ்ரீபாதத்து முதலிகளெல்லாரும் "பெரிய நம்பியும் எம்பெருமானாரும் எதிர்ப் பட்டாப்போலாயிற்று"என்று மிகவும்உகந்தருளினார்கள். அநந்தரம்*குன்ற மாடத்திருக்குருகூரேற வெழுந்தருளி ஆயிபக்கலிலே ஆசார்யஹ்ருதய ரஹஸ்யார்த்தங்களையெல்லாம்கேட்டருளி, (ఆచార్యహృదయస్యార్థాస్సకలాయేనదర్శితాః। శ్రీసానుదాసమమలం దేవరాజం తమాశ్రయే) (ஆசார்யஹ்ருதயஸ்யார்த்தாஸ்ஸகலாயேநதர்ஸிதா:- ஸ்ரீஸாநுதாஸமமலம் தேவராஜம்தமாஸ்ரயே) என்று அந்த உபகாரஸ்ம்ருதிக்கு அவர் விஷயமாக ஒருதனியனருளிச் செய்தருள;

ஆயி தமக்கு அதில் அந்வயமற்றபடி தோற்ற, (பூதூரில் வந்துதித்த புண்ணியனோ பூங்கமழும் - தாதாருமகிழ்மார்பன் றனிவனோ, தூதூர,

வந்தநெடுமாலோ மணவாளமாமுனிவன், எந்தை யிவர்மூவரிலும்யார்)என்றருளிச்செய்து ஜீயரை அவதார விசேஷமென்றுதரித்துக்கொண்டு ஆழ்வாரையும் அநுதினம் ஸேவித்துக்கொண்டு அங்கேசிலகால மெழுந்தருளியிருக்க, அதுவேஹேதுவாக 'ஆயி திருநாட்டுக்கெழுந்தருளினார்' என்று திருநாராயணபுரத்திலுள்ள அஸூயாளுக்கள் திருமாளிகையிலுள்ள ஸர்வஸ்வத்தையும் செல்வப்பிள்ளை அங்கீகரித்தருளும்படி ஸ்ரீபண்டாரத்தில் சேர்க்க அக்காலத்திலே ஆயியும்மீண்டு திருநாராயணபுரத்துக் கெழுந்தருளி இச்செய்தியைக்கேட்டுஹ்ருஷ்டராய் (యస్యానుగ్రహమిచ్ఛామి తస్యవిత్తం హరామ్యహమ్) (யஸ்யாநுக்ரஹமிச்சாமி தஸ்யவித்தம்ஹராம்யஹம்)என்னும் திருமுகப்படியே ப்ரத்யக்ஷமாகச்செல்வப்பிள்ளை இத்தைக்கைக்கொண்டருளியபின்பு நாம் இனி இரக்கத்துக்கு விஷய மென்கிறது கிம்புநர்ம்யாயஸித்தமிறே! *యస్యైతే తస్య తద్ధనమ్-யஸ்யைதே தஸ்ய தத்தந மன்றோவென்று ஈடுபட்டு ஆநந்தாச்ருக்கள் பனிப்பஎழுந்தருளி ஆசார்யக்ர்பாலப்தரான ஞானப்பிரானொருவரையுமே அர்த்தித்துப்பெற்று மற்றவைகளையெல்லாம் அங்குத்தைக்கு ஸமர்ப்பித்து யாதவகிரிநிலயனுக்கு மால்யஸமர்ப்பணைகநிஷ்டராய் அங்கே ப்ரீதராயெழுந்தருளியிருந்தார். (மாதவத்தோர்வாழ்த்தும் முடும்பை மணவாளன்-தோதவத்தித் தூய்மறையோரான பெற்றார்-தீதற்ற - ஆசாரியவிதயம்பெற்றார் நம்மாயியிவர் - தேசாரத்தன்கணைஞ்சேகாண்) என்று ஆசார்யஹ்ருதய ஸம்ப்ரதாயத்தைத் தாமநுஸந்தித்தருள, அப்படியே முதலிகளும், (மாதவத்தோன்மாறன்மறை கூறும் மணவாளன், தோதவத்தித் தூய்மறையோரான பெற்றார், நீதியினால், ஆங்கவர்தாள்சேரப் பெற்றாராயி மணவாளன், பூங்கமலத்தாள்கணைஞ்சேபோற்று) என்றநுஸந்தித்தார்கள்.

இப்படி ஜ்ஞாநஸம்ர்த்தியுடனே பெரியஜீயர் திருநகரியிலே வாழ்ந்தருளுங்காலத்திலே, இத்தைக்கண்டு ஸஹிக்கமாட்டாத சில அஸூயாளுக்கள், ஆஸுரப்ரக்ருதிகளாய் மஹாபாபிகளாய்க்கொண்டு கூறை மேய்ச்சலாயிருக்கிற மடத்திலே ஜீயர் எழுந்தருளியிருக்க அர்த்தராத்ரியிலே அக்நிப்ரக்ஷேபணம்பண்ண, அத்தசையிலே ஜீயர் தம்முடைய ப்ரபாவத்தாலே அவ்வழல் தட்டாதபடி சேஷாக்ருதியாய்க்கொண்டு அனைவருங் காணப்புறப்பட்டு, மடம் வேகிறபடியைக்கண்டு விஷண்ணராய் சோகார்த்தராயிருக்கிற முதலிகள் திரளிலேவந்து புகுந்துநிற்க, இந்த அத்புதத்தை முதலிகளெல்லாருங்கண்டு மிகவும் ஸந்துஷ்டராயிருந்தார்கள். இச்செய்தியை அந்த தேசாதிபதியான ராஜாகேட்டு ப்ரச்சந்நசாரிகளான அவர்களைக் கண்டுபிடித்து தண்டிக்கத்தேட ஸாபராதிகளான ஏகாக்ஷி ஏககர்ணி தொடக்கமானவர்களுட்பட திருவடியோடே மறுதலித்து நின்று ரக்ஷிக்கும் ஜநககுலஸுந்தரியைப்போலே வரவரமுனியான தாமும் (దేవీలక్ష్మీర్భవసిదయయా వత్సలత్వేనచత్వం) (தேவீலக்ஷ்மீர்ப்பவஸிதயயா வத்ஸலத்வேந

சத்வ०) என்னும்படியான தம்முடைய பரமக்ருபையாலும் வாத்ஸல்யத்தாலும் அவர்களையும் அப்படியே ரக்ஷித்தருளினர். பின்பு அநேககாலத்திற்குமேல் அவர்கள் ஸாத்தாசிகராயுள்ளவர்கள் அருட்கடலான ஜீயருடைய திருவடிகளை ஆஶ்ரயித்து அபசாரக்ஷாபணம்பண்ணிக்கொண்டார்கள்.

அநந்தரம் அத்தேசத்திற்கு அதிபதியாயிருப்பானொருவன் திருவடிகளிலே ஆச்ரயிக்க அவனுக்கு சடகோபதாஸரென்று தாஸ்யநாமம் ப்ரஸாதித்தருளி அவருக்கு அத்ர்ஷ்டத்திலே முக்காற்கூறு ருசியும் அத்ர்ஷ்டாநுகுணமானத்ர்ஷ்டத்திலே கால்கூறுருசியும்பண்ணிக்கொண்டு போருமென்று நியமித்தருள, அவரும் அப்படியே செய்துகொண்டு வர்த்தித்து, காளமேகன் திருமண்டபதொடங்கித் திருவீதிகள், திருமதிள்கள், திருவெல்லைகள் முதலான அநேக கைங்கர்யங்களை ஆழ்வாருகந்தருளும்படிபண்ணி அழகிய மணவாளன் திருமண்டபத்தையுமுண்டாக்கினாரிறே. அநந்தரம், ஜீயர், திருக்குறுங்குடியிலே சென்று அங்கே திருவேங்கடமுடையானென்பாரொருப்ராஹ்மணனை க்ருபைபண்ணியருளி அவருக்குத் திருவேங்கடதாஸரென்று திருநாமம் ப்ரஸாதித்தருளி, அவருக்கு கைங்கர்யத்தை நியமித்தருள; அவர், நின்றநம்பி, இருந்தநம்பி, கிடந்தநம்பி என்று ஸ்ரீவராஹபுராண ப்ரஸித்தரான நம்பிகள் மூவருக்கும தனித்தனியே திருவிருப்புக்களையும் திருமண்டபங்களையுமுண்டாக்கி ஸேவித்துக்கொண்டிருந்தார். இப்படி குருகூர்நம்பிக்கும் குறுங்குடிநம்பிக்கும் அனேந்தழகுங்கண்டருளப்பண்ணி, மற்றும் அத்தேசத்திலுண்டான திருப்பதிகளுக்கெல்லாம் அதிசயத்தையுண்டுபண்ணத்தக்க ஆச்ரிதரையும் கற்பித்தருளி பின்பு (பிறந்தகத்திற் சீராட்டுப்பெற்றாலுந் தன்னைச்,சிறந்துகக்கும் சீர்கணவன்றன்னை, மறந்திருக்கப் போமோ மணவாளர் பொன்னடியை விட்டிருக்கலாமோ கல்வியறிந்தால்) என்றநுஸந்தித்து அப்போதே கோயிலேறப் புறப்பட்டெழுந்தருளி பெருமாளை ஸேவித்துக்கொண்டு இதரமதநிரஸநபூர்வகமாக ஸ்வமத ஸ்த்தாபநம்பண்ணிக்கொண்டெழுந்தருளியிருக்கிறகாலத்திலே,

அப்பிள்ளாரென்றொருவித்வாக் வாதிகளை ஜயிக்கப்போய் வடதேசத்திலுள்ளாரை ஜயித்து எறும்பியில் அப்பாவுடனே தர்க்கிக்கவேணுமென்றுபுக அப்பாவுடைய ப்ரபாவத்தைக்கண்டு வித்தராய் அநுவர்த்தித்துக்கொண்டு மூன்றுநாளிருந்து ஜ்ஞாதவ்யார்த்தங்களைக் கேட்டறிந்து அனுப்புவித்துக்கொண்டு புறப்பட, வழிவிடவெழுந்தருளின அப்பாவும், இப்பால் நீர் இனி எங்குப்போகவேண்டுமதென்றுகேட்க, ஸ்ரீரங்கஸ்தலத்திலேஜீயரென்றொருவர் ப்ரஸித்தராயிருக்கிறார், அவரைக்கண்டு வாதிக்கவேணுமென்ன, அப்பாவும் அத்தைக்கேட்டு இவருக்கு ஹிதமாய் நீரப்படி செய்யவொண்ணாது, ஜீயருடையப்ரபாவம் நானறிவேன், பெருமாள்கோயிலிலே கிடாம்பிநாயனார்பாடே ஸ்ரீபாஷ்யம் ஸ்ரவித்தார், நாயனாரும் நம்மை அவ

ருடனே சிந்தனைக் கிருக்கச்சொல்ல இருந்தேன், அவர் ஸகலார்த்தங்களையும் யுகபத்ஸாக்ஷாத்கரித்து உபந்யஸிப்பர், அவருடனே வாதிக்க ஒருவர்க்கும் க்ஷமமன்று, அதுக்குமேலே யதீப்வரர், ஸ்ரீவைஷ்ணவதர்ஶநத்திற்கு அபிவர்த்திகரர், அவரிடத்திலே நமக்கெல்லாம் ப்ரதிபத்திக்ரமம் வேறேயிருக்கிறது, ஸமயேப்ராப்தே சொல்லுகிறேன் என்றருளிச்செய்து அனுப்பியருளி, மீண்டு எறும்பியிலே எழுந்தருளினர்.

அநந்தரம், ஒரு ஸ்ரீவைஷ்ணவர் கோயிலினின்றும் திருமலைக்கு எழுந்தருளுவதாக எறும்பியிலேவர அப்பா கண்டு அவரையழைத்தருளி ஆதரித்து கோயில்வர்த்தாந்தங்களையும் ஜீயருடைய வர்த்தாந்தங்களையும் கேட்டருள, அவர் கந்தாடையண்ணன் முதலான கந்தாடையய்யங்கார்களும் மற்றும் திருவாழியாழ்வார்பிள்ளை முதலான பெரியோர்களும் ஸகுடும்பமாகவும் மற்றும் அநேகம் ஸ்ரீவைஷ்ணவர்களும் ஆச்ரயித்தார்கள், ஜீயருடையவைபவம் உத்தரோத்தரம் அதிசயமாக நடக்கிறது என்று விண்ணப்பஞ்செய்ய திருவுள்ள முகந்தருளி அவருக்கு பஹுமானஞ்செய்தருளி அற்றைக்கு அவரைநிறுத்திக்கொண்டு, நீர் சொன்னதெல்லாம் ஸாமாந்யமாகக் கேட்டிருந்தோம், அந்த வர்த்தாந்தங்களையும், ஜீயர் திருநகரிக்கெழுந்தருளித் திரும்பியெழுந்தருளின செய்தியையும் விஸ்தாரமாக வருளிச்செய்யுமென்று கேட்டருளி, அவரை, பிற்றைநாள் திருவேங்கடமுடையானை ஸேவித்து சீக்கிரமாக வரச்சொல்லி நியமித்து, நாமும்பயணமாயிருக்கிறோம், கூடப்போவோமென்றருளிச்செய்துவிட, பின்பு திருத்தகப்பனருக்கு இச்செய்தியை யறிவிக்க அவரும் ஜீயர் திருவடிகளிலே ஆப்ரயிக்கவேணுமென்றுருசியுண்டுபோலேயிருக்கிறது, இனிமேல் அதுநன்றன்றுபோலேதோற்றுகிறது; வேணுமாகில் அவரிடத்திலே ப்றதிபத்திபண்ணி ஜ்ஞாதவ்யாம்ஶமுண்டானால் அநுவர்த்தித்துக்கேட்டு ஸ்ரீபாததீர்த்த தளிகைப்ரஸாதஸ்வீகாராதிகளைப் பண்ணிவாருமெனன; அந்தஸ்ரீவைஷ்ணவரும் திருமலையில்நின்றும்வர அவரைக் கூட்டிக்கொண்டு எரும்பியப்பா கோயிலேற வெழுந்தருளி நம்பெருமாளைத் திருவடித்தொழுது, பெரிய கந்தாடையண்ணன் ஆப்தபந்து வாகையாலே அவர் திருமாளிகையிலே அமுதுசெய்தருளி அவருடனே ஜீயர்ஸந்நிதிக்கெழுந்தருள, ஜீயரும் இவரைப் பெரியவித்வானென்றறிந்து பரத்வப்ரதிபாதகமான *உயர்வறவுயர்நலப்ரபந்தத்தை உபந்யஸித்துக்காட்டியருள; அப்பா அதுகேட்டு ஆர்சர்யப்பட்டு ஜீயருக்கு தமிழொழிய ஸம்ஸ்க்ருதத்தில் மிகவும் பரிசயமில்லையென்றுகேட்டிருந்தோம், இவர் உபயவேதாந்தத்திலும் மிகவும் நிபுணராயிருக்கிறரென்று போரப்ரீதராயிருக்க; ஜீயர் இவரை அமுதுசெய்ய ப்ரார்த்திக்க, அவரும் (యత్యన్నం యతిపాత్రస్థం యతినా ప్రేషితఞ్చయత్ । అన్నత్రయంనభోక్తవ్యం భుక్త్వాచాన్ద్రాయణంచరేత్ )(யத்யந்நம் யதிபாத்ரஸ்தம் யதிநாப்ரேஷிதம்சயத்-அந்நத்ரயம்நபோக்தவ்யம் புக்த்வாசாந்த்ராயணம்சரேத்) என்கிறஸாமாந்யஶாஸ்த்ரைகநிரதராய், (தருவரேல்) (ప్రార్థయేత్ ) (ப்ரார்த்தயேத்) என்கிற விஶேஷஶாஸத்ரஜ்ஞாநரஹிதராய் மறுத்

தெழுந்தருளி அண்ணனைபோரவெறுத்து, அவர் திருமாளிகைக்கெழுந்தருளாமல் அப்போதே கோயிலிலிருந்து புறப்பட்டுத் தம்மூரேற வெழுந்தருளி, தம் திருவாராதநமான சக்ரவர்த்தித் திருமகனுரைத் திருவடி விளக்குவதாகக் கோயிலாழ்வாரைத் திருக்காப்புநீக்கப்புக; அது அவிசால்யமாய் ஸகலோபாயங்களாலும் நீக்கப்போகாமையாலே மிகவும் துக்கிதராய் அமுதுசெய்யாமல் கண்வளர்ந்தருள, அவ்வளவில் அப்பாவின் ஸ்வப்நத்திலே(శేష(శ్రీమానజనిసపునస్సౌమ్యజామాతృయోగి భోగి భూత్వాతదనుభగవాన్రాఘవస్యానుజన్మా। భూత్వాభూయోవరవరమునిర్భూయసాభాసమానో రక్షత్యస్మాన్రఘుకులపతేరాశ్రితో భద్రపీఠం) (భూత్వాభవ్యోవరవరమునిర్భోగినాంసార్వభౌమ శ్రీమద్రఙ్గేవసతివిజయీవిశ్వసంరక్షణార్థం। తత్త్వంగన్తుంవ్రజశరణమిత్యాదిశద్రాఘవోయం స్వప్నేసోయంవరవరగురు స్సంశ్రయోమాదృశానామ్) (ஶேஷஶ்ஶ்ரீமாநஜநிஸபுநஸ்ஸௌம்யஜாமாத்ர்யோகீ போகீபூத்வா ததநுபகவாந்ராகவஸ்யாநுஜந்மா- பூத்வாபூயோவரவரமுநிர்ப்பூயஸாபாஸமாநோ ரக்ஷத்யஸ்மாந் ரகுகுலபதே ராஶ்ரிதோபத்ரபீடம்) (பூத்வாபவ்யோவரவரமுநிர் ப்போகிநாம் ஸார்வபௌமஶ் ஶ்ரீமத்ரங்கே வஸதிவிஜயீ விஶ்வஸம்ரக்ஷணார்த்தம் - தத்வம்கந்தும்வ்ரஜஶரணமித்யாதிஶத்ராகவோயம் ஸ்வப்நேஸோயம் வரவரகுரு ஸ்ஸம்ஶ்ரயோ மாத்ருஶாநாம்) என்கிறபடியே அவர் திருவாராதநமான சக்ரவர்த்தித்திருமகன், நீர்சேஷாவதாரமான ஜீயர்திருவடிகளிலே அபசாரப்பட்டுவந்தீர், (భగవద్భక్తసంభుక్తం పాత్రసిద్ధాదనాదరాత్। నోపిదాసీసుతోప్యాసీ న్నృతో వైనారదోభవేత్) என்று ஸ்ரீநாரதபகவான் உத்பத்திகேட்டறியீரோ, ஜீயர் திருவடிகளில் ஆஶ்ரயித்து அபராதக்ஷாபணம்பண்ணிக்கொண்டு வந்தாலொழிய உம்முடையகையினாலேநாம் ஆராதநங்கொள்ளக்கடவோமல்லோம், சடக்கெனப்போகீரென்று நியமித்தருள; அப்பா திருக்கண்களை விழித்து விஸ்மிதராய் ஸ்வப்நத்தை விச்வஸித்து அப்போதே புறப்பட்டுக் கோயிலேறச்சென்று புக்கு, (అజ్ఞేటక వేరకన్యాయా స్తుఙ్గేభువనమఙ్గళే। రఙ్గేధామ్ని సుఖాసీనం వందేవరవరంమునిమ్) (ஶும்கே கவேரகந்யாயாஸ் துங்கேபுவநமங்களே-ரங்கேதாம்நி ஸுகாஸீநம் வந்தே வரவரம் முநிம்) என்றநுஸந்தித்துக்கொண்டு செல்ல; அவ்வளவிலே பெருமாளை ஸேவிப்பதாக ஜீயர்* புறப்பட்டருள, இவர் அத்யாதரத்துடனே (దణ్డవత్ప్రణమేద్భూమావుపేత్యగురుమన్వహమ్) (தண்டவத்ப்ரணமேத்பூமாவுபேத்யகுருமந்வஹம்) என்கிறபடியே திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பிக்க ஜீயரும் அவரை, (లోచనాభ్యాంపిబన్నివ)(லோசநாப்யாம்பிபந்நிவ)என்கிறபடியே * நிரீக்ஷணஸுதாஸந்துஷ்டிதராம்படி குளிரநோக்கிக்கொண்டு நிற்க, அப்பாவும், அப்போது தம்மை விஷயீகரிக்கப் புறப்பட்டருளின ஜீயருடைய திவ்யமங்கள விக்ரஹ ஸௌந்தர்யத்திலே யீடுபட்டு, *మయి ప్రవిశతి-மயிப்ரவிஶதி தொடங்கி, * மயிப்ரஸாதப்ரவணம் என்னுமளவாக அநுஸந்தித்துக்கொண்டு நிற்க; ஜீயர், உஜ்ஜீவநத்திலே யூன்றிப் போருமவராகையாலே மீண்டு உள்ளேபுக்கு ஆத்மலாபத்தைப்பார்க்கிலும் வேறுலாபமில்லையென்று அவரை அங்கீகரித்தருளி;

அநந்தரம், ஸ்ரீபாதத்துமுதலிகளை "பெருமாளை ஸேவித்துக் கடுக வாருங்கோள்" என்று அனுப்பியருள அவ்வளவிலே அவர்களும் பெருமாளைஸேவித்து மீண்டுமடத்திலேவர அவர்களுடனே, நாயனார், பெருமாள் இப்போது இன்னவொப்பனையோடே யெழுந்தருளியிருந்தார், இன்னபடி அமுதுசெய்தருளினார் என்றருளிச் செய்ய; அவை ஒத்திருக்கையாலே எல்லாரும் விஸ்மயப்பட்டார்கள். அப்பா நெடுந்தூரத்திலிருந்து வந்தவராகையாலே வழியிலுண்டானவிடாயெல்லாந் தீர பசியன் சோற்றைக்கண்டாப்போலே ஜீயருடைய திவ்யமங்களவிக்ரஹத்தையே அநுபவித்துக்கொண்டுபோந்தார்.

மற்றைநாள் அபரராத்ரத்திலே அண்ணன் முதலானவர்கள் திருப்பள்ளியறைவாசலிலே எழுந்தருளி (రవిరుదయత్యథాపి నవినశ్యతి మే తిమిరం వికసతి పఙ్కజం హృదయపఙ్కజమేవన మే। వరవరయోగివర్య వరణీయగుణైకనిధే జయజయ దేవజాగృహి జనేషు నిధేహి దృశం) (ரவிருதயத்ய தாபிந விநஶ்ய திமே திமிரம் விகஸதி பம்கஜம் ஹ்ருதய பம்கஜமேவநமே - வரவரயோகிவர்ய வரணீயகுணைகநிதே ஜயஜயதேவஜாக்ருஹி ஜநேஷு நிதேஹி த்ருஶம்) என்று திருப்பள்ளியுணர்த்த திருப்பள்ளியுணர்ந்து குருபரம்பரா பூர்வகமாக ரஹஸ்யத்ரயத்தையும் அநுஸந்தித்தருளி அதில் பரவ்யூஹாந்தர்யாமிகுணங்களைத் திருமந்த்ரத்தாலும், விபவஸௌலப்யாதிகுணங்களை சரமச்லோகத்தாலும், அர்ச்சாவதார குணபூர்த்தியை த்வயத்தாலும் அநுஸந்தித்தருளி, பின்பு (అయం పునస్స్వయం వ్యక్తానవతారాననుక్రమాత్। నిధాయ హృది నీరన్ధ్రం నిధ్యాయన్ ప్రత్యపద్యత) (విశేషేణ సిషేవే చ శేషభోగవిభూషణం। అమేయమాదిమం ధామం రమేశం రఙ్గశాయినం) (ధ్యాయం ధ్యాయం వపుస్తస్య పాయం పాయం పయోనిధిం। గాయం గాయం గుణానుచ్చైస్సోయం తద్భూయసాన్వభూత్) (அயம் புநஸ்ஸ்வயம்வ்யக்தாநவதாராநநுக்ரமாத் - நிதாயஹ்ருதிநீரந்த்ரம் நித்யாயந்ப்ரத்யபத்யத)(விஶேஷேண ஸிஷேவேச ஶேஷபோகவிபூஷணம்-அமேயமாதிமம் தாமம் ரமேஶம் ரங்கஶாயிநம் ;) (த்யாயம் த்யாயம்வபுஸ்தஸ்யபாயம் பாயம் பயோநிதிம் - காயம் காயம்குணாநுச்சைஸ்ஸோயம் தத்பூயஸாந்வபூத்) என்று அர்ச்சாவதாரத்துக்குவேர்ப்பற்றான பெரியபெருமாளுடைய விக்ரஹகுணங்களை விசேஷித்து அநுஸந்தித்தருளி அதினுடையபராகாஷ்டையான யதீந்த்ரசரணத்வந்த்வ ப்ராவண்யத்தோடே நீராடி நித்யாநுஷ்டாநங்களையுஞ் செய்தருளித் திருமண்காப்புச் சாத்தியருளி தம்முடைய திருவாராதநமான ஸ்ரீரங்கராஜர் திருமுன்பே எழுந்தருளிதண்டன் ஸமர்ப்பித்து, (ఆత్మస్వరూపయాథాత్మ్యం ఆచార్యాధీనదైవయత్। ఆమ్నాయానాం రహస్యాన్తదఖిలేభ్యః ప్రకాశయన్। సర్వం యతిపతేరేవ కుర్వన్నాదేశపూర్వకం। కృత్యాకృత్యేషు కర్తృత్వం కృతీకిమపిన స్పృశన్। తతస్తస్య ముఖోల్లాసం చికీర్షన్నేవ కేవలం) (ஆத்மஸ்வரூபயாதாத்ம்யம் ஆசார்யாதீநதைவயத் - ஆம்நாயாநாம்ரஹஸ்யாநதகிலேப்ய ப்ரகாஶயந்- ஸர்வம்யதிபதேரேவ குர்வந்நாதேஶபூர்வகம் - க்ருத்யாக்ருத்யேஷு கர்த்ருத்வம் க்ருதீகிமபிநஸ்ப்ருஶந் - ததஸ்தஸ்ய முகோல்லாஸம் சிகீர்ஷந்நேவகே

வஸம்;) என்கிறபடியே தம்முடைய பாரதந்த்ர்யத்துக்குச்சேர்ந்த ப்ரதிபத்தியுடனே திருவாராதநத்தையும் செய்தருளி.

அநந்தரம்*ஸந்நிதிஸ்தம்பமூலபூதலபூஷணமாய் எழுந்தருளியிருக்க, அவ்வளவிலே அப்பாவும் அண்ணனை புருஷகாரமாகக்கொண்டு அடியேனை அங்கீகரிக்கவேணுமென் றபேக்ஷிக்க அங்கீகரித்தருளி திருவிலச்சினைமுதலான பஞ்சஸம்ஸ்காரமுஞ்செய்து கடாக்ஷித்தருளி திருவடிகளாலே அவருடைய திருமுடியை அலங்கரித்தருளி பின்பு அத்தலைக்கு மங்களாசாஸநபரராகவேணு மென்னும் திருவுள்ளக்கருத்தோடே மந்த்ரரத்நத்தையும் ப்ரஸாதித்தருளி அவரையும் அந்தரங்கராக்கிக்கொண்டு அவருடனேகூட பெருமாளை மங்களாசாஸநம்பண்ணுவதாகப் புறப்பட்டருளி நான்முகன்திருக்கோபுரத்தைத் தெண்டன் ஸமர்ப்பித்து மெள்ள வெழுந்தருளி உள்ளேபுக்கு, (దేవీగోదాయతిపతిశఠద్వేషిణౌరఙ్గశృఙ్గం సేనానాథో విహగవృషభశ్శ్రీనిధిస్సిన్ధుకన్యా। భూమానీళాగురుజనవృతః పూరుషశ్చేత్యమీషామగ్రేనిత్యం వరవరమునేరఙ్ఘ్రియుగ్మం ప్రపద్యే) (தேவீகோதா யதிபதிஸடத்வேஷிணௌரங்கஸ்ருங்கம் ஸேநாநாதோவிஹகவ்ருஷப ஸ்ரீநிதிஸ்ஸிந்துகந்யா - பூமாநீளாகுருஜநவ்ருத பூருஷஶ்சேத்யமீஷா மக்ரேநித்யம் வரவரமுநேரங்க்ரியுக்மம்ப்ரபத்யே) என்கிறஶ்லோகத்தின்படியே ஸேவித்துப் புறப்பட்டருளி அவ்விடங்களுக்கு உசிதமான மங்களாசாஸநம்பண்ணியருளி, அநந்தரம் (ఉపేత్య పునరప్యేష నిజమేవనివేశనం। నివేద్యనిఖిలం తత్ర యతీన్ద్రాయనమస్యయా) (உபேத்யபுநரப்யேஷ நிஜமேவநிவேஶநம்-நிவேத்யநிகிலம் தத்ர யதீந்த்ராயநமஸ்யயா) என்கிறபடியே மீண்டு மடமே யெழுந்தருளித் திருமலையாழ்வாரிலே தத்பாதச்சாயையாக ப்ரதிபத்தி பண்ணிக்கொண்டு எழுந்தருளியிருந்து இவர்க்கு ஸம்ஸாரநிவர்த்தகமாயிருக்கிற ஸகலரஹஸ்யங்களையும் ப்ரஸாதித்து பரமபாவநமாயிருக்கிற ஸ்ரீபாததீர்த்தத்தையும் ப்ரஸாதித்தருளி, (అథమాధ్యాహ్నికం కృత్యం కృత్వాసతోత్తరం మునిః। ఆరాధ్యవిధివద్దేవమన్వభూద్రఙ్గభూషణం। తతస్సమ్ముఖసంస్పర్శ సరసేనసుగన్ధినా। శుచినాసుకుమారేణ సత్త్వసంశుద్ధిహేతునా। భక్తిపూతం ప్రపుష్టేన భోజ్యేనభగవత్ప్రియాత్। తత్పరస్తర్పయామాస తదీయప్రేమవృద్ధయే। ఆత్మానమాత్మనాపశ్యన్ భోక్తారం పురుషంపరమ్। అనుయాగంయథాయోగం నిష్పాద్యనిరవర్తయత్) (அதமாத்யாஹ்நிகம்க்ர்த்யம் க்ர்த்வாஸத்வோத்தரம்முநி:- ஆராத்யவிதிவத்தேவமந்வபூத்ரங்கபூஷணம் - ததஸ்ஸம்முகஸம்ஸ்பர்ஶ ஸரஸேந ஸுகந்திநா - ஶுசிநாஸுகுமாரேண ஸத்வஸம்ஶுத்திஹேதுநா-பக்திபூதம் ப்ரபூதேநபோஜ்யேநபகவத்ப்ரியாத் - தத்பரஸ்தர்ப்பயாமாஸததீயப்ரேமவ்ருத்தயே ; ஆத்மாநமாத்மநாபஶ்யந் போக்தாரம்புருஷம்பரம்- அநுயாகம்யதாயோகம்நிஸ்ஸங்கோ நிரவர்தயத்) என்கிறபடியே பெருமாளமுதுசெய்தருளின அநந்தரம் தாமு மமுது செய்தருளி, (போனகஞ்செய்த சேடந்தருவரேல் புனிதமன்றே) என்னும்படி ஸ்வபாவநமான திருத்தளிகை ப்ரஸாதமும் ப்ரஸாதிக்கப்பெற்று இவர் க்ருதார்த்தரா யெழுந்தருளியிருக்க;

பின்பு (తతస్సజలజీమూతశ్యామకోమళవిగ్రహే। పీతకౌశేయసంవీతే పీనవృత్తచతుర్భుజే। శఙ్ఖచక్రగదాధారే తుఙ్గరత్నవిభూషణే। కమలాకౌస్తుభోరస్కే విమలాయతలోచనే। అపరాధసహే నిత్యదహరాకాశగోచరే। రమే ధామ్ని యథాకాశం యుఞ్జానస్స్వాత్మసమ్పదా। తతస్సనిశ్చలం చేతశ్చిరేణావివర్తయన్) (ததஸ்ஸஜலஜீமூதஶ்யாமகோமள விக்ரஹே-பீதகௌஶேயஸம்வீதே பீநவ்ருத்தசதுர்ப்புஜே - ஶங்கசக்ரகதாதாரே துங்கரத்நவிபூஷணே - கமலாகௌஸ்துபோரஸ்க விமலாயதலோசநே-அபராதஸஹே நித்ய தஹராகாஶகோசரே - ரமே தாம்நி யதாகாஶம் யுஞ்ஜாநஸ்ஸ்வாத்மஸம்பதா - ததஸ்ஸநிஶ்சலம் சேதஶ்சிரேணாவிவர்த்தயந்) என்கிறபடியே சுபாச்ரயமான அந்தர்யாமி விஷயத்திலே நிமக்நமான திருவுள்ளத்தையுடையராய், அத்தை ஒருபடி மீட்டு யதீந்த்ரப்ரவணமாக்கி யதிராஜவிம்ஶதியை அநுஸந்தித்தருளி, பின்பு ஸ்ரீவசநபூஷணவாக்யங்களுக்கு வ்யாக்யாநம் ப்ரஸாதித்தருளி, ஸாயங்கால மானவாறே ஸர்வாநுஷ்டாநங்களையும் முன்புபோலவே செய்தருளி மீளவும் ஸந்நிதியிலே யெழுந்தருளி எல்லாவுபசாரங்களையும் கண்டருளப்பண்ணி, (తతః కనకపర్యఙ్కే తరుణద్యుమణిద్యుతౌ। రత్నదీపద్వయోద్యత్తమహస్స్తోమసమేధితే। సోపధానే సుఖాసీనం సుకుమారే వరాసనే। అనన్యహృదయైర్భృత్యైరన్తరఙ్గైర్నిరన్తరమ్। శుశ్రూషమాణైస్సూచిభిః ద్విత్రైర్భృత్యైరుపాసితమ్। ప్రాచామాచార్యవర్యాణాం సూక్తివృత్త్యనువర్ణనైః। వ్యాచక్షాణం పరం తత్త్వం వ్యక్తం మన్దధియామపి) (ததஃ கநகபர்யங்கே தருணத்யுமணித்யுதௌ - ரத்நதீபத்வயோத்யத்த மஹஸ்தோமஸமேதிதே - ஸோபதாநே ஸுகாஸீநம் ஸுகுமாரே வராஸநே - அநந்யஹ்ருதயைர்ப்ருத்யைரந்தரங்கைர்நிரந்தரம் - ஶுஶ்ரூஷமாணைஶ்ஶுசிபிஃ த்வித்ரைர்ப்ருத்யைருபாஸிதம் - ப்ராசாமாசார்யவர்யாணாம் ஸூக்திவ்ருத்த்யநுவர்ணநைஃ - வ்யாசக்ஷாணம் பரம் தத்த்வம் வ்யக்தம் மந்ததியாமபி) என்கிறபடியே திருப்பள்ளியறையிலே புக்குத் திருப்படுக்கையிலே சாய்ந்தருளி எல்லார்க்கும் நன்றாகத் தெரியும்படி *பூர்வாசார்யர்கள் போதமநுட்டானங்கள் கூறுவாராக வெழுந்தருளியிருக்கிற போக்யதையை அநுபவித்து அநுபவத்திற்குத் தேசிகராணவர்களோடே கூட அஸ்த்தாநேபயஶங்கிகளாய், (మఙ్గళం పన్నగేన్ద్రాయ మర్త్యరూపాయ మఙ్గళమ్। ఏవం మఙ్గళవాణీభిరేనం సాఞ్జలిబన్ధనాః। సత్కృత్య సమ్ప్రసీదన్తం ప్రణేముః ప్రేమనిర్భరాః) (மங்களம் பந்நகேந்த்ராய மர்த்யரூபாய மங்களம்-ஏவம் மங்களவாணீபிரேநம் ஸாஞ்ஜலிபந்தநாஃ-ஸத்க்ருத்ய ஸம்ப்ரஸீதந்தம் ப்ரணேமுஃ ப்ரேமநிர்ப்பராஃ) என்கிறபடியே மங்களாஶாஸநம் பண்ணி ஸாஞ்சலிஹஸ்தராய் ஸாஷ்டாங்க தீர்க்கப்ரணாமங்களைப் பண்ணி ப்ரேமநிர்ப்பரராய் ஸேவித்துக்கொண்டிருக்க, (అథ భృత్యాననుజ్ఞాప్య) (அத ப்ருத்யாநநுஜ்ஞாப்ய) என்கிறபடியே அவர்களை அனுப்பியருளி; (తతస్సజ్జీకృతం భృత్యైశ్శయనీయం విభూషయన్। యుయోజ హృదయం ధామ్ని యోగినిద్రాపదద్వయే) (ததஸ்ஸஜ்ஜீக்ருதம் ப்ருத்யைஶ்ஶயநீயம் விபூஷயந்-யுயோஜ ஹ்ருதயம் தாம்நி யோகநித்ராபதத்வயே) என்கிறபடியே *படுத்த பைந்நாகணையாயிருக்கிற தாமும் ஒருபடுக்கையைப்பற்றிக் கண்வளர்ந்தருளுவதற்காக *யோகநித்ரையுமாய், (రఙ్గాశ్రయం

మమశుభాశ్రయమాశ్రయామః) (ரங்காஶ்ரயமெமஶுபாஶ்ரயமாஶ்ரயாமஃ) என னும்படி சுபாச்ரயமுமாய் * அணைப்பார்கருத்தனுவானை * வெள்ளத்தர விற்றுயிலமர்ந்தவித்தினை மணவாளயோகியான தாம் மனத்திற்கொண்டு *நெஞ்சத்துப்பேராதுநிற்கும்பெருமானுய்ஸப்ரதிஷ்ட்டிதனு யெழுந்தருளி யிருக்கிற சேஷசாயியான ஸர்வேச்வரன் திருவடிகளிலேவைத்த சிந்தை யையுடையராய் நிர்ப்பரராய் கண்வளர்ந்தருளப்புக்கார். (ఇత్థందేవ దేవస్య వృత్తింపత్యుః ప్రసాదినీం। కృత్వీర్హటాపథంచక్రే ప్రాకనీంతత్రవర్తనీం) (இத்தம் தேவதேவ ஸ்ய வர்த்திம்பத்யுஃப்ரஸாதிநீம்-க்ர்தீர்கடாபதம்சக்ரேப்ராக்தநீம்தத்ரவர் த்தநீம்) என்கிறபடியே எழுந்தருளியிருக்கிறநாளிலே நாடோறும் ஸந் நிதியிலே கைங்கர்யம்பண்ணிக்கொண்டு அப்பா எழுந்தருளியிருக்க;

—(நாயனுர் ஸப்தகோத்ரவ்யவஸ்தை செய்தருளியது.)—

இவர்க்கு அநுபந்திகளுமாய் கந்தாடை யண்ணனுக்கு ஸம்பந்திகளு மாயிருப்பார், கந்தாடைநாயன் தேவிகளை பிறந்தகத்தினின்றும் புக்ககத் திற்கு அழைத்துக்கொண்டுவருமளவில் அப்ராப்தவாஹநத்திலே ஏற்றிக் கொண்டுவர அப்பா அத்தைக்கண்டு ஜீயர்ஸந்நிதியிலேவிண்ணப்பஞ்செய்ய, திருவுள்ளம்கலங்கி உடனே அண்ணனை அழைத்தருளி, இப்படியாகாது அவர்களையும் பெண்ணையும் த்யஜிக்கிறது தகுதி என்ன அவர்களுக்கு ஸ்வரூபசிக்ஷா பூர்வகமாக ஹிதோபதேசம் செய்யலாகாதோ வென்ன, அப்படியாகாது, எம்பாவுக்கு ஆப்தஸம்பந்திகளான துர்மாநிகளென்ன, ஆகில் விடுமென்ன, பின்பு முதலியாண்டான் திருவம்ஶ்யரான கந்தாடை யண்ணன் முதலான கந்தாடை யையங்கார்களையும் அவர்களுடைய ஸம் பந்திகளையும் கூட்டிவிசாரித்து அவர்களையும் க்ருபைபண்ணியருளி ஹிதோ பதேசஞ்செய்தருளி ஸப்தகோத்ரவ்யவஸ்தைசெய்தருளி இந்தஸப்தபர் வஸ்த்தருக்கும் பரஸ்பரஸம்பந்தங்களும் அப்யவஹாராதிகளுமாம்படி மர் யாதைகட்டி இன்ன கோத்ரத்தா ரின்னுரென்று பட்டோலைகொண்டு திரு மங்கைமன்னன் திருமாளிகையிலே சிலாசாஸநமுமிடுவித்து, விசேஷித்து கந்தாடை ஐயங்கார்களுக்கு விலக்ஷணப்ரவரமும் ஸாதித்து அப்பா திரு வுள்ளம் மிகவும் ப்ரஸந்நமாம்படி செய்தருளி எழுந்தருளியிருக்கிறகாலத் திலே ஜீயர் திருவடிகளிலே ஆநுகூல்ய மில்லாமைமாத்ரமன்றிக்கே ப்ரதி கூலித்துவாக்துருக்திகளும் பண்ணினவர்கள் தரித்ரராய் அபக்யாதிபாத்ர பூதராய் அநர்த்தப்பட்டுப்போனுர்கள்.

பின்பு ஜீயரும் முதலிகளும் ஒருநாள் (ஆலின்மேலாலமர்ந்தான்) என் கிற பாட்டிற்கு அர்த்தசிந்தநம்பண்ணிக்கொண்டிருக்கிறவளவிலே ஒருவர், ஒரு ஆலவ்ர்க்ஷபரமாய் மற்றதற்கு பத்ரபரமாய் அர்த்தம்சொல்ல ; ஆலெ ன்று - இலையைச்சொல்லாது என்று ஜீயரருளிச்செய்ய ; பாலராய் ஒத்த பருவத்தாரோடே க்ரீடாஸக்தராயிருக்கிற கந்தாடைநாயன், " ஜீயா !

ஆலாங்கட்டியென்றன்றோ வ்யவஹாரம் " என்ன அவரையழைத்து மடியிலேவைத்துக்கொண்டு " நீர்தொழுகுலமென்றோ " என்று உகந்தருளி தர்சநப்ரவர்த்தகராம்படி நன்றாகவாழ்த்தியருளினார்.

அநந்தரம், அப்பா, சகுநவிருத்தமென்று மீண்டு தெண்டன் ஸமர்ப்பிக்க, ஜீயரும் இவ்விடத்திலே ஒரு அதிசயமுண்டாகவேணும், ஒரு நல்ல நாளிலே பயணப்படுத்துவோமென்று உகப்புடனே அருளிச்செய்ய, இது கேட்டுப் பெரியோர்கள் ஸ்ரீஸூக்தியில் மோகமாவது ஒன்றுமில்லையே ஏதோ அதிசயமுண்டாமென்றுஒருவர்க்கொருவர் அருளிச்செய்துகொண்டிருக்க, அவிளம்பேந அக்காலத்திலே அப்பிள்ளை அப்பிள்ளார் ஜீயர் திருவடிகளிலே ப்ராவண்யமின்றிக்கே பெருமாளை ஸேவிக்கவேணுமென்று ஸகுடும்பமாகத் தங்கள் பரிட்டவணிகளுடனே திருக்காவேரிக்கரையிலே வந்திறங்கி இரண்டுநாளிருந்து ஜீயருடைய ஸ்த்தி கதிகளை ஆராய்ந்து அவருடைய வ்யாக்யாநசாதுர்யத்தையும் கந்தாடையண்ணன் முதலானார் ஆச்ரயித்தபடிகளையும், எறும்பியப்பா ஆச்ரயித்தபடியையும் ஸப்ரகாரமாகக்கேட்டு, இதுவென்ன ! என்று விஸ்மிதராயிருந்து, அப்பிள்ளை அப்பிள்ளாரை யழைத்து இதுஸம்பவிக்குமோவென்று கேட்க ; அவர் ;—எறும்பியப்பா, ஸகல சாஸ்த்ரவல்லபர், அநிக்ர்தபரமார்த்தர், அவரிப்படி செய்யார், நாம் விசாரித்துவருகிறோமென்றுபோய் மடத்துக்கு ஸமீபத்திலேயிருந்து தமக்கு அந்தரங்கராய் ஸமர்த்தராயிருப்பாரொருவரை அழைத்து, " நீர்போய் அப்பிள்ளான் வந்திருக்கிறான் என்றறிவியும், அந்த எறும்பியப்பாவேயாமாகில் உடனே எழுந்தருளுகிறார், அன்றிக்கே மற்றொருவராகில் அப்பிள்ளானை யாரறிவார் என்கிறார் " என்றுவிட ; அவர்சென்று எறும்பியப்பாவைக்கேட்டறிந்துகொண்டு தண்டனிட்டு அப்பிள்ளார்வந்து தெருவிலேயிருக்கிறார், தேவரீருக்குத் தெரிவிக்கச் சொன்னாரென்ன ; அப்பா உகந்தருளி "அவருக்கு நல்விடிவு" என்றருளிச்செய்துகொண்டு தாம்புறப்பட்டெழுந்தருள, அப்பிள்ளார், அவருடையபுஜமூலங்களிலேயிருக்கிற சிஹ்நங்களைக்கண்டு ஒரு தெளிவுபிறந்து அவர் திருவடிகளிலே தீர்க்கப்ரணாமம்பண்ணிநிற்க, அப்பா, குசலப்ரச்நங்களுடனே ஆதரித்து, இருவருங்கூடி ஒருதிண்ணையிலே யிருந்து, பெருமாள் தம்மைஉஜ்ஜீவிப்பிக்க ஜீயர் திருவடிகளிலே சேர்த்தப்ரகாரத்தை முந்துற அப்பா அருளிச்செய்யக்கேட்டுத் தெளிந்து ஸ்வாத்மோஜ்ஜீவநபரராய் அப்பாவை அநுவர்த்தித்து அப்பிள்ளைமுதலானார் திருக்காவேரிக்கரையிலேயிருக்கிற செய்தியையும், அவ்விடத்திற்கு அப்பா எழுந்தருளவேணுமென்கிற கார்யத்தையும் அறிவிக்கக்கேட்டருளி திரும்பி மடத்திலே எழுந்தருளி இச்செய்தியை வானமாமலை ஜீயருக்கறிவித்து, தாம் அவர்களைத் திருத்திக்கொண்டு வரலாம்படி கடாக்ஷித்தருளவேணுமென்று புறப்பட்டு அப்பிள்ளாரைக்கூட்டிக்கொண்டு அப்பிள்ளைபாடே எழுந்தருளி அவருக்கு ஹித

மருளிச்செய்து ஆஸ்திக்யாதரங்கள் விஞ்சிவரப்பண்ணிக்கொண்டிருக்க, வானமாமலை ஜீயர், ஜீயர்ஸந்நிதியிலே எழுந்தருளி, “ அப்பிள்ளை அப்பிள்ளார் என்பவர்கள் ப்ரஸித்தர், அவர்கள் திருக்காவேரிக் கரையிலே இரண்டுபேராகவிருக்கிறார்கள், அவர்களுக்கு,* (ఈశ్వరస్యచసౌహార్దంయదృచ్ఛాసుకృతంతథా। విష్ణోః కటాక్షమద్వేషమాభిముఖ్యంచసాత్త్వికైః॥సంభాషణంషడేతాని- ஈஶ்வரஸ்யசஸௌஹார்தம் யத்ருச்சாஸுக்ருதம் ததா - விஷ்ணோ: கடாக்ஷமத்வேஷ மாபிமுக்யஞ்ச ஸாத்விகை: ஸம்பாஷணம்ஷடேதாநி)யன்றோ, ஸாத்விகஸம்பாஷணம் ப்ராப்தமாயிற்று என்று எறும்பியப்பா அங்கேயெழுந்தருளியிருக்கிறார; இப்படி ஆசார்யப்ராப்தி ஹேதுக்களெல்லாமுண்டானபடியினாலே தேவரீர் திருவடிகளில் ஸம்பந்தம் லபிக்கிறது, (ఆత్మలాభాత్పరంకించిదన్యన్నాస్తి)(ஆத்மலாபாத் பரம்கிஞ்சிதந்யந்நாஸ்தி)என்றன்றோ தேவரீர் திருவுள்ளமிருக்கும், ஆசார்யன் இருவர்க்கும் உபகாரகன் என்றன்றோ இருக்கிறது, அவர்கள் விஷயத்திலே யிரங்கியருளவேணும், அப்பாவுடையவும் அடியேனுடையவும் மநோரதம் நிறைவேறும்படி (శుభేనమనసాధ్యాతమ్) (சுபேநமநஸாத்யாதம்) என்கிறபடியே திருவுள்ளம்பற்றவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய, ஜீயரும், எம்பெருமானார் அப்படியே திருவுள்ளமாயருளினார், ஒருவர்க்கு எம்பெருமானார் திருநாமமென்று அருளிச்செய்தருள, வானமாமலை ஜீயர் உகந்தருளி அவர்களை எதிர்கொண்டு ஆதரிப்பதற்காக அடியேனுக்கு விடைஸாதிக்கவேணுமென்ன; அப்படியே அநேகம் ஸ்ரீவைஷ்ணவர்களைக் கூட்டி அனுப்பியருளப் புறப்பட்டு எழுந்தருளாநிற்க இவர்கள் வருகிறசெய்தியை அப்பிள்ளாருக் கறிவிக்க அவரெழுந்திருந்து அந்த கோஷ்டியைக்கண்டு ஸாஷ்டாங்கப்ரணாமம் பண்ணி அஞ்சலிஹஸ்தராய் வைத்தகண் வாங்காதே ஸேவித்துக் கொண்டு தமக்கு அத்யந்த மபிமதமாயிருக்கிற பட்டுப்பச்சை வடத்தை இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் கையிலே கொடுத்து நீங்கள் அதித்வரையாகச் சென்று அவர்களெழுந்தருளுகிற வழியிலே அகலமெல்லாம் படுத்து அத்தை நாலண்டையும் எல்லாரு மெழுந்தருளும்படி பண்ணி அந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸ்ரீபாத ரேணுவை ஸாவதாநமாகக் கொண்டு வரச் சொல்லிவிட்டு, அடைக்காய்த்தட்டும் பழத்தட்டும் மத்யையில்வைத்து எறும்பியப்பாவை முன்னிட்டுக்கொண்டு எதிரே சென்று ஜீயர் திருவடிகளிலே தீர்க்கப்ரணாமம்பண்ணி ஸ்வஜநங்களை யெல்லாங்காட்டி அடியோங்க ளெல்லாரையும் உஜ்ஜீவிப்பித்தருள வேணுமென்று ஸ்ரீபாத தூளிகை எல்லாரும் சிரஸாவஹித்துநிற்க, ஜீயர் குசலப்ரச்நஞ் செய்தருளி உபலாளித்தருளி பெருங்கூட்டமாக அண்ணன் திருமாளிகைக் கெழுந்தருள அண்ணன் எதிர்கொண்டு ஆதரித்தருளி உள்ளே அழைத்துக் கொண்டு சென்று திருவோலக்கமாயிருந்து, தாம் முன்னிருந்த இருப்பையும், நிர்ஹேதுகமாக எம்பெருமானார் க்ருபையால் வந்த மஹாலாபத்தை

யும், ஜீயர் யதிபதி புநரவதார மென்பதையும், பஹுமுகமாக அருளிச்செய்யக்கேட்டுத் தாம் ஜீயர் திருவடிகளை ஸேவிக்க த்வரிக்க அப்படியே திருமுன்காணிக்கையையும் பட்டுப்பட்டாவளிகளையும் பச்சையையும் முன்னே பிடித்துக்கொண்டு மடத்திலே சென்று திருமலையாழ்வாரிலே கோஷ்ட்டியாக எழுந்தருளியிருக்கக்கண்டு மிகவும் ஈடுபட்டு, (అపూర్వరూప సంస్థానం తేజసాంరాశిమూర్జితం) (அபூர்வரூபஸம்ஸ்தாநம் தேஜஸாம்ராஶிமூர்ஜிதம்) என்று கொண்டு திருவடிகளிலே தீர்க்கப்ரணாமம்பண்ணி உபஹாரங்களையும் ஸமர்ப்பிக்கத்தக்க மர்யாதையுடனே ஸமர்ப்பித்துநிற்க, ஜீயர் அவர்களுடைய வைதுஷ்யங்களுக்கு அநுரூபமாகச்சிறிது ஸ்ரீஸூக்திகளை அருளிச்செய்ய, அவர்களும் வித்தராய் ஸமாச்ரயணத்துக்கு ப்ரார்த்தித்துத்வரைப்பட (తాపపుణ్డ్ర) (தாபபுண்ட்ர) இத்யாதிப்படியே பஞ்சஸம்ஸ்காரங்களையுஞ் செய்தருளி தத்வஹிதங்களையும் ஸ்ரீபாத தீர்த்தத்தையும் ப்ரஸாதித்தருளி கோயிலுக்குப் புறப்பட்டு, (దేవీగోదా) (தேவீகோதா) இத்யாதிப்படியே அவர்களோடேகூட மங்களாசாஸநஞ் செய்தருளி மீண்டுமடத்திலேயெழுந்தருளி ததீயாராதநமும்நடந்து, (గురోరుచ్ఛిష్టంభుఞ్జీత) (குரோருச்சிஷ்டம் புஞ்ஜீத) (போனகஞ் செய்தசேடந் தருவரேல் புனிதமன்றே) என்கிறபடியே ஸ்வபாவநமான தளிகைப்ரஸாதத்தையும் ப்ரஸாதித்தருளி திருவடிகளுக்கு அந்தரங்கராக்கி உஜ்ஜீவிப்பித்தருளினார். அப்பா திருத்தமப்பனார், எறும்பியிலே அப்பாவைக் காணவேணுமென்று ஜீயருக்குக் குறித்துவரக்காட்ட, பின்பு ஜீயர்தாமே அப்பாவை ''ஊருக்குப் போம்'' என்று விடைகொடுக்கப் பெருவருத்தத்தோடே ஊரேற வெழுந்தருளினார்.

பின்பொருநாள், ஜீயர் பெருமாளை மங்களாசாஸநம்பண்ண எழுந்தருளினவளவிலே ஏகாந்த ஸேவையாய் திருத்திரைபரிமாறி திருவாராதநங்கொண்டருளாநிற்க இவரும் உள்ளேசென்று திருவடித்தொழுதுநிற்க, அவ்வளவிலே திருவாலவட்டம் ஸேவித்துக்கொண்டிருந்த உத்தம நம்பியும், * வெள்ளிப்பெருமலைக் குட்டரான ஜீயருடைய, (క్షీరసఙ్ఘాతగౌరమ్) (க்ஷீரஸங்காதகௌரம்) என்கிறபடியே * பாலின் நீர்மைபோலிருக்கிற விக்ரஹவைலக்ஷண்யத்தைக்கண்டு, பாபவாஸநையாலே அந்யதாசங்கை பண்ணி, ஜீயரை ''நெடும்போதிருக்கவேண்டா'' என்ன; இவரும் அபிப்ராயமறிந்து ''மஹாப்ரஸாதம்'' என்று புறப்பட்டுமடமே யெழுந்தருளினார். அவ்வளவிலே திருவாலவட்டம் ஸேவித்துக்கொண்டிருந்த உத்தம நம்பியும் தூங்கி பலகணிக்கநவிலே சாய்ந்திருக்க, *அரவினணை மிசைமேய மாயனாரான பெரியபெருமாள், இவர்கனவில்வந்து திருப்பவளச் செவ்வாய் முறுவல்தோன்ற, * அணிவிளங்கு முயர்வெள்ளை யணையான திருவநந்தாழ்வானைத் தொட்டுக்காட்டி, ''இவர்கிடீர், ஜீயராகவந்தவதரித்தருளி

னார், அவருடைய நிறம் வெளுப்பு, விச்வஸித்திரும்" என்றருளிச்செய்ய அவரும் அத்யந்தம் ப்ரீதராய் அப்போதேவந்து ஜீயர் திருவடிகளை ஸேவித்து இச்செய்தியை விண்ணப்பஞ்செய்து க்ஷாபணம் பண்ணிக்கொண்டு திருவடிகளுக்கு அந்தரங்கராய்ப் போந்தார். அதுபற்றி (அனந்தாவதாரர் வரயோகியென்பது தென்னரங்கன், மனந்தானறியும் மற்றாறிவார்) என்று பின்புள்ளாரும் சொல்லும்படி ஆயிற்று.

அநந்தரம், ஸாத்விகைகளில் சடகோபக் கொற்றியென்னும் திருநாமத்தை யுடையளாயும், ஆச்சியார்பாடே திவ்யப்ரபந்தம் நாலாயிரத்தையும் ரஹஸ்யங்களையும் அதிகரித்தவளாயும், திருவடிகளுக்கு மிகவும் அந்தரங்கையாயு மிருப்பாளொரு அம்மையார், ஒருநாள் திருவோலக்கம் குலைந்தவநந்தரம் மத்யாஹ்நத்திலே திருமலையாழ்வாரிலே ஜீயரை ஏகாந்தமாக ஸேவித்துக்கொண்டிருக்க, அப்போது அநேக பணமண்டலங்களையுடைய திருவநந்தாழ்வானாக ஸேவை ஸாதிக்கக்கண்டு திடுக்குற்றிருக்க, ஜீயர் அத்தைக்கண்டு சிரித்தருளி, நடந்தபடி யென்னென்று கேட்டருள, அவள் அப்போது தான் ஸேவித்தபடியை விண்ணப்பஞ்செய்ய, ஆகில் இத்தை ஒருவர்க்கும் சொல்லாதே கொள்ளென்று அருளிச் செய்தருளினார். இப்படி அவதார விசேஷமென்பது எல்லாருக்கும் ப்ரத்யக்ஷம் ;—

(భూత్వా భూయో వరవరముని ర్భోగినాం సార్వభౌమ శ్శ్రీమద్రఙ్గే వసతి విజయీ విశ్వసంరక్షణార్థం) (பூத்வா பூயோ வரவரமுநிர் போகிநாம் ஸார்வபௌமஶ் ஶ்ரீமத்ரங்கே வஸதிவிஜயீ விஶ்வஸம்ரக்ஷணார்த்தம்) என்கிறபடியே ஜகத்ரக்ஷணார்த்தமாக அவதரித்தவராகையாலே ஜகத்தையெல்லாம் உஜ்ஜீவிப்பிக்கும்படி ஸகலஜீவஜீவாதுவாக பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்தரஹஸ்யங்களுக்கெல்லாம் வ்யாக்யாநம் செய்தருளுவதாகத் திருவுள்ளம்பற்றி, (రహస్యగ్రన్థేషు రమ్యజామాతృముని ర్యతీట్ । వాక్యసఙ్గతివాక్యార్థ తాత్పర్యాణి యథాశ్రుతం। వ్యాకుర్వన్నేవ పూర్వేషాం వర్తమానః పదే పదే। స్వమనీషాకథా నైవ కల్పయన్ కిఞ్చిదప్యయం। గుప్తాన్ సర్వైర్గురుత్వేన గూఢానర్థా నదీదిశత్ । శ్రుతిస్మృతీతిహాసైశ్చ శ్రుత్యన్తైః పాఞ్చరాత్రతః। దేశికానాం నిబన్ధానాం దర్శయన్నేకకణ్ఠతాం । వాక్యాలఙ్కారవాక్యాని వ్యాచష్టే ఽసౌ విచక్షణః । సుధీయస్స్వాదయామాస స్వస్వరూపం సుదుర్గ్రహం) என்று இப்படி ப்ரதிபாதிக்கும் க்ரமங்களில் ஒன்றும்தப்பாமல் ப்ரதமம்தத்வரஹஸ்யத்திற்கு வ்யாக்யானஞ் செய்தருளி அநந்தரம் அசேஷார்த்தப்ரதிபாதகமாய் *ஆழ் பொருள்களையு முடைத்தான ஶ்ரீ வசநபூஷணத்திற்கு, (மெச்சும் வியாக்கியை) என்று விலக்ஷண பரிக்ரஹமாம்படி வ்யாக்யாநஞ் செய்தருளி, தாமும் (சீர்வசனபூடணமாந் தெய்வக்குளிகைபெற்றோம்-பார்தன்னைப் பொன்னுலகாப்பார்க்க வல்லோம் - தேரினமக் - கொப்பாரினியாருலகாசரியனருள் - தப்பாமலோ

தியபின்தான்) என்று இதினுடைய வைபவத்தை அநுஸந்தித்து ப்ரீதராயருளினார். முதலிகளும் அப்படியே (వాక్యభూషణం వచనభూషణశాస్త్రసారం యో మాదృశాశ్చసుగమంవ్యవృణోద్దయాళుః। రమ్యాపయన్త్రయమునవయేయమునాంవరాయ తస్మైనమశ్శమదమాదిగుణార్ణవాయ) என்றும் (மேவுந்தவத்துவபயோகிவிட்ட வியாக்கியையால் - தேவுந்நிகைக்கு நற்றத்வ ரகசியத்துடனே - தாவும் பெரும் புகழாசாரிய விதயத்திற்குமா - தாவும்பொருள் செறிச்சொல்லா பரணச்சுருதிக்குமே) என்றும் இப்படி உபகரித்தமையை அநுஸந்தித்தார்கள்.

அநந்தரம், ஸ்ரீவசநபூஷணத்திற்கு அடியாய் சரமபர்வநிஷ்டாக்ரமங்களை ப்ரதிபாதிக்கிற நூற்றந்தாதிக்கும் ஞானஸார ப்ரமேயஸாரங்களுக்கும் வ்யாக்யாநஞ்செய்தருளி, திருவாய்மொழி தொடக்கமான அருளிச்செயல்களெல்லாவற்றையும் ப்ரவர்த்திப்பித்து, தர்சநத்திற்கு பண்டில்லாத அதிசயங்களையு முண்டாக்கிக்கொண்டு எழுந்தருளியிருக்கிற காலத்திலே, "திருவாய்மொழிவிஷயமாகத் திருப்பவளத்தாலே ஏதேனுமொரு ப்ரபந்தம் செய்தருளவேணும்" என்று முதலிகளெல்லாரு மபேக்ஷிக்க திருவாய்மொழி நூற்றந்தாதி யருளிச்செய்து, தத்வத்ரயத்திற்கும், ஈட்டிற்கும் ப்ரமாணத்திரட்டு ஸங்க்ரஹித்தருளி ஆசார்யர்களுடைய உபதேச பரம்பராப்ராப்தமாய் வந்த தர்சநதாத்பர்யங்களை யெல்லாம், "உபதேச ரத்நமாலை" என்கிற ப்ரபந்தமுகேந ப்ரதிபாதித்து, உடையவர் நித்யத்தை ஸங்க்ரஹமாகவும் பண்ணியருளி, இப்படி ஜ்ஞாநவர்த்தகராய் எழுந்தருளியிருக்கிறகாலத்திலே இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள், அஹங்காரத்தாலே அந்யோந்யம் விவாதம்பண்ணிக்கொண்டுபோர, அப்போது நிஹீநஜந்துக்களுக்கு விவாதமுண்டாக, ஜீயர் அத்தைக்கண்டு, "நீங்களும் இவர்களைப்போலே வசநபூஷணாதிகாரிகளோ அஹங்காரம் நடையாடி விவாதம்பண்ணுகைக்கு" என்ன அவர்கள் இத்தைக்கேட்டு லஜ்ஜாபுரஸ்ஸரமாக அதில் நின்றும் நிவர்த்தரானார்கள்.

பின்பு வடதேசத்தினின்றும் சில திருநாமதாரிகள் சிலத்ரவ்யம் மடத்திற்கு வரக்காட்ட அத்தை நிரூபித்துப் பார்த்தவளவில் அநுகூலமின்றியிலே யிருக்க அது த்யாஜ்யமென்று கழிக்க, அநந்தரம் மடத்திற்கு க்ஷேத்ரமுண்டாய், தத்வாரா வந்தகுடிகள் மடத்திலே புஜித்துப்போக, அவ்விடம் கோமயத்தாலே சுத்திபண்ணி யீரமாயிருக்க, யாத்ர்ச்சிகமாகப் புறப்படடருளினவர், அத்தைக்கண்டு ஈரமேதென்று கேட்டருள அங்கு நின்றவர்கள் அச்செய்தியை விண்ணப்பஞ்செய்ய அப்போதே அந்தப்பங்கைப்பெருமாளுக்கு ஸமர்ப்பித்து அந்தக்கையோலையையும் ஸ்ரீபண்டாரத்திலே அர்த்தராத்ரியிலே போகவிட்டருளி எழுந்தருளி யிருக்கிற காலத்திலே, ஓரம்மையார் ஒருநாள் ராத்திரி மடத்தைவிட்டுப்போகமாட்டாமல் சயநிக்க அவளை அர்த்தராத்ரியிலே புறப்படவிட்டு, "கிழட்டணிலாகிலும்

மரமேற வல்லதொன்றன்றோ” என்றருளிச்செய்து இப்படியோக்யதையில் லாத விடத்திலும் பிணமெழுந்து கடிக்கிறதோவென்று அதிசங்கையும் போராகிறக, ஒரு ஸ்ரீவைஷ்ணவர் தூதுளங்கீரைகொண்டுவந்து தளிகை பண்ணுகிற அம்மையார்கையிலே இத்தைப் பாங்காகச் சமைக்கவேணுமென்றுகொடுக்க அவர் அத்தை உதாசித்துச் சமையாமலிருக்கப் பின்பு அமுதுசெய்தருளும்போது அந்த ஸ்ரீவைஷ்ணவர் அம்மையார் முகத்தைப்பார்க்க இத்தைக்கண்டருளி இதென்னென்று கேட்டருள அவர் உண்மையை விண்ணப்பஞ்செய்ய அத்தைக்கேட்டருளி அம்மையாரை “ஆறுமாஸம் தளிகைபண்ண வேண்டா” என்று வெறுத்தருளிப பின்பு பாகவதாவமாநம் பண்ணினதற்கு க்ஷாபணம் பண்ணுவித்து நியமித்தருளி நடந்து செல்லுகிறநாளிலே, வரந்தரும் பெருமாள்பிள்ளை ஜீயர் திருவடிகளை ஸேவிக்கவேணுமென்கிற ஆதராதிசயத்தாலே தம்முடைய ஊரில்நின்றும் தனித்துப்புறப்பட்டு அதித்வரையுடனேவந்து திருவடிகளிலே ஸேவிக்க இப்படி ஸ்ரீவைஷ்ணவஸஹவாஸமின்றிக்கேஸாஹஸித்துவருவதே! என்று வெறுத்து அவரையும் ஆறுமாஸம் உபேக்ஷித்துப் பின்பு அங்கீகரித்தருளி ஏதத்விஷயமாக, (భక్షితం హి విషం హన్తి ప్రాకృతం కేవలం వపుః। మన్త్రౌషధమయీ తత్ర భవత్యేవ ప్రతిక్రియా॥ దర్శనస్పర్శసంశ్లేష విశ్లేషశ్రవణాదపి। అప్రతిక్రియమాత్మైవ హన్యతే తత్ర వై దృఢం। ఇత్థముద్ఘోషయన్ దోషాన్ స్వితస్తరేణ సుదుస్తరాన్॥ దూరం నిర్వాసయామాస నానావిషయేష్వసౌ) என்றும், (నిదానం సర్వదోషాణాం నిదానం క్రోధమోహయోః। మానవీనమనాంస్యేషాం నిత్యమున్మూలయత్యసౌ) என்றும், (అర్థసమ్వృద్ధిర్మోహాయ విమోహో నరకాయ చ। తస్మాదర్థమనర్థాఖ్యం శ్రేయోర్థీ దూరతస్త్యజేత్। యస్య ధర్మార్థమర్థేహా తస్యానీహైవ శోభనా। ప్రక్షాళనాద్ధి పఙ్కస్య దూరాదస్పర్శనం వరం) என்றும், (స్వగోపనసిద్ధిస్సర్వేషాం సంజ్జీవనమపి ధ్రువం। శ్రేయసీ దేశికానాఞ్చ సిధ్యతి ప్రత్యుపక్రియా। భృత్యోఽహం విష్ణుభక్తానాం శాసితారస్త ఏవ మే। క్రేతుం విక్రేతుమపి మామీశతే తే యథేప్సితమ్। ఇతి యస్య మతం నిత్యమయమేవాత్మవిత్తమః) என்றும், (ఆచార్యవద్దైవతఞ్చ మాతృవత్ పితృవత్తథా। ద్రష్టవ్యాస్సన్త ఇత్యాదిదృష్టశాస్త్రేషు విస్తరాత్) என்றும், (సుశీలస్సులభస్స్వామీ శ్రీమానపి కృపానిధిః। అహోరపి మహద్వ్యపాదత్యన్తాం యాతివిక్రియాం। పావనీ మహతాం దృష్టిః ప్రచ్యుతానపి మోచయేత్। అమర్షః పునరల్పోఽపి నిత్యానపి నిపాతయేత్। శ్రియోఽత్ప్రియతరం శౌరేస్సజ్జనానాం సభాజనం। అశ్రేయాదశ్రేయస్తేషామవమానో మనాగపి) என்றும், (సజ్జనాతిక్రమః క్రౌర్యం శాస్త్రైరిత్థం ప్రదర్శయన్। సూక్తిభిర్వ్యక్తయుక్తాభిస్సర్వాన్ సముదజీవయత్) என்றும், இத்யாதிகளாலே இவற்றினுடைய ஸாஹித்யராஹித்யங்களாலுண்டான தோஷகுணங்களைத்தம்முடைய தீர்க்கதர்சித்வத்தாலே தர்சிப்பித்தருளி ஸர்வரையும் உஜ்ஜீவிப்பித்துக்கொண்டு போருகிறகாலத்திலே,

இவருடைய உக்த்யநுஷ்டாநங்களையெல்லாம் உத்தரதிக்கிலே வைஷ்ணவப்ரபுவாயிருக்கிறவர் கேட்டு தம்முடைய உஜ்ஜீவநத்திற்குடலாக ஸகல

சாஸ்த்ரதாத்பர்யங்களையும் ஸங்க்ரஹரூபேண அநுஷ்ட்டேயமா யிருப்ப தொருபடி அடியேனுக்கு அருளிச்செய்துவரக்காட்டியருளவேணுமென்று குறித்துவரக்காட்ட; அப்படியே கேவலம் பகவத்தாஸ்யாஸம்புருஷார்த்த மன்று, கேவலம் பகவதுபலக்ஷணவாஞ்சநாதிகாரமாத்ரமும் போராது, கேவலம் பகவத் ஸமாராதந நிஷ்ட்டாமாத்ரமும் போராது, கேவலம் ஆசார்யபாதந்த்ராதிகாரமாத்ரமும் போராது, கேவலபாகவதாநுவர்த்த நமாத்திரமும்போராது, பின்னை எங்ஙனே என்னில்;- யதோசித கைங் கர்யபரவர்த்தகனாய் ஸ்வகீயமானக்ர்ஹத்திலே ஸ்ரீவைஷ்ணவர்கள் நிஃ ஶங்கமாக ப்ரவேசித்து பாங்காக வர்த்திக்கவே தன்னை அத்தலை க்காகவே செய்து தலைக்கட்டும் (அடியார்க் கென்னையாட்படுத்த) (எந்தம்மைவிற்கவும் பெறுவார்களே) என்னும் நிலையுண்டாகவேணுமிறே. இப்படி இவ்வர்த்தமநுஸந்தித்து அநுஷ்ட்டியாநாகில் தனக்குப்ரபத்திஸௌ பாக்யைச்வர்யங்கள் கைகூடாது; (న్యగ్రోధబీజేవటవత్ ప్రణవేశబ్దజాలవత్ । సిద్ధేతదీయశేషత్వే సర్వార్థాస్సమ్భవన్తిహి) (ந்யக்ரோத பீஜேவடவத் ப்ரணவேஶப்தஜாலவத் - ஸித்தேததீய ஶேஷத்வே ஸர்வார்த்தாஸ்ஸம்பவந்திஹி) என்கிற படியே சரமார்த்தவிசேஷம் கைபுகுந்ததாகில் விவிதங்களாய் விசித்ரங்க ளாயிருந்துள்ள பகவத்ரஹஸ்ய விசேஷங்களெல்லாம் அறியவேணும் என் கிற நிர்ப்பந்தமில்லை; இவ்விசேஷாநுஷ்டாநமின்றிக்கே செல்லுகிற ஜ்ஞா நாநுஷ்டாநப்ரதிபாதநமும் பகவத்ரஹஸ்யவிசேஷங்களும் வேஶ்யைசொல் லுகிற பதிவ்ரதாதர்மம்போலே வ்யர்த்தமாய்விடும். (పూజనాద్విష్ణుభక్తానాం పురుషార్థోస్తినేతరః। తేషువిద్వేషతఃకిఞ్చిన్నాస్తినాశకమాత్మనాం) (பூஜநாத்விஷ்ணுபக் தாநாம் புருஷார்த்தோஸ்திநேதரஃ-தேஷுவித்வேஷதஃகிஞ்சிந்நாஸ்திநா ஶகமாத்மநாம்) என்கிறபடியே திருமந்த்ரார்த்தமான சரமார்த்தநிஷ்ட் டையை ஸ்வதிவ்ய ஸூக்திவிசேஷத்தாலே தர்சிப்பித்து எழுதிப்போக விட்டருள, அவரும் அப்படியே ததீயாராதநத்திலே நிஷ்ட்டராய் (తస్యైనిత్యంప్రదిశతదిశేదక్షిణస్యైనమస్యామ్) (தஸ்யைநித்யம்ப்ரதிஶததிஶே தக்ஷி ணஸ்யைநமஸ்யாம்) என்றும், (దిశేవాపి నమస్కుర్యాద్యత్రాసౌ వసతిస్వయమ్) (திஶேவாபிநமஸ்குர்யாத் யத்ராஸௌவஸதிஸ்வயம்) என்றும் சொல்லு கிறபடியே ஜீயரெழுந்தருளியிருக்கிற திக்கைநோக்கி, "தொழுமத்திசை யுற்றுநோக்கி" என்கிறபடியே நாடோறும் ஸேவித்துக்கொண்டு தம்மு டைய வர்ணாநுகுணமான கைங்கர்யத்தையும் மடத்திற்கு நடத்திக் கொண்டுபோந்தார்.

அக்காலத்திலே கோயிலிலேயிருக்கிறபட்டர் பெருமாள் திருவோலக் கத்திலே ஜீயரைஸேவித்து உம்முடையசிஷ்யர்கள் நம்மைத் தண்டனி டாமல் அவமதிபண்ணிப் போராநிற்பர்களென்று அறிவிக்க, ஜீயரும் மடத்திற் கெழுந்தருளி அவர்களை அழைத்து, நீங்கள் இப்படிசெய்வா

னென்று கேட்டருள, அவர்கள் அவரிருக்கிற இருப்பை விண்ணப்பஞ் செய்து அவரை யநுவர்த்திக்க எங்களுக்கு மனமில்லையென்ன, ஆகில் பெருமாளும் பிராட்டியும் திவ்யஸிம்ஹாஸநத்திலே எழுந்தருளியிருக்கிற தாக ப்ரதிபத்திபண்ணி ஸேவித்துக்கொண்டுபோருங்கோ ளென்றருளிச் செய்து இப்படி தோஷமுள்ளவிடத்திலும் குணப்ரதிபத்தி நடக்கும்படி யான பாகவதப்ராவண்யத்தையுடையராய், பின்பு தாம் வ்ர்த்தாசாரங் களை அறிந்தருளுமவராகையாலே வேதகப்பொன்னென விலக்ஷணவிஷயங் களையும் ஆதரித்துக்கொண்டு அவர்கள் விஷயத்திலே பூர்வர்கள் அநுஷ் ட்டித்துப்போரும் சேஷவ்ர்த்திகளெல்லாம் அநுஷ்டாநபர்யவஸாயியாம் படி அநுஷ்டித்தருளி, (எக்குணத்தோரெக்குலத்தோ ரெவ்வியல்போரா யிடினு - மக்கணத்தேநம்மிறைவராவரே - மிக்கபுகழ்க்-காரார்பொழிற் கோயிற் கந்தாடையண்ணனெனும் - பேராளனையடைந்தபேர்) என்று அநுஸந்தித்தருளி இப்படி விலக்ஷணமான ஜ்ஞாநாநுஷ்டாநங்களோடே கூடி ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயுடனே எழுந்தருளியிருக்கிறகாலத்திலே ;

குத்ர்ஷ்டிமதாவலம்பியா யிருப்பானொருவன் கோயிலிலேவந்து ஸ்வம தோபந்யாஸம் பண்ணிக்கொண்டு இறுமாந்திருக்க; ஜீயரும்அவனுடனே தர்க்கிக்கைக்கும் ப்ரஸங்கத்திலே அவனை வாய்மூடுகைக்கும் ஸாமர்த்ய முண்டாயிருக்கச்செய்தேயும், முன்னே அவன் வாதுலவம்ச்யரானவேடலப் பையை ஆச்ரயித்திருந்தவன், ஸஹவாஸதோஷத்தாலே கலங்கி ப்ரச்சந்ந பௌத்தரான விரோதிகளோடேகூடிக்கொண்டு மதாந்தரப்ரவிஷ்டனானு னுகையாலே, த்ரிசங்குவைப்போலே கர்மசண்டாளனான அவனை ஆலோ கித்து வார்த்தையருளிச்செய்யக்கூசி வேடலப்பையைக்கொண்டு, இவனை நிரஸிக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி, அவரை அழைப்பித்தருள; அவரும் வந்து ஜீயரை ஸேவித்து கோயிலிலே அவனைக்கண்டு, மாணீ ! இவ்விடம்கொண்டாயோ வென்ன; அவனும் அவரைக்கண்டு கருடனைக் கண்ட ஸர்ப்பம்போலே மிகவும்பீதனாய் ஸேவித்துஅங்குநின்றும்புறப்பட்டு ஓடிப்போனான்; அப்பையுடைய வித்வதப்ரதிமப்ரபாவத்தை ஜீயர் கண்ட ருளி விஸ்மயப்பட்டு அப்பையை, "தேவரீர் இங்கே யெழுந்தருளியிருக்க வேணும்" என்று மிகவும் ஆதரிக்க அவரும் ஜீயர் நியமித்தபடிசெய்யா மல் தம்தேஹயாத்ராசேஷமான லௌகிககார்யங்களையும், அபிஜநவித்யா வ்ர்த்தங்களையும் நினைத்து ப்ரக்ர்தி பரவசராய் பர்யுஷிதாந்நத்தையும் மாஹிஷததியையும் நினைத்து அங்குநிற்கமாட்டாதே ஸ்வக்ராமத்தை நோக்கி எழுந்தருளினார்.

ஜீயர், இனி இதற்காவாரரென்று சிந்தித்திருக்க அவ்வளவிலே ஹஸ்திகிரிநாதரண்ணவென்னும் திருநாமத்தையுடையராய் தர்சநவிரோ திகளான வாதிகளை ஜயித்து, (ப்ரதிவாதிபயங்கரர்) என்று விருதிடும்படி யான ப்ரபாவத்தையுடையராய், (లోకేవేదేచపణ్డితః । లోకేసమయాచారేకృతకల్పా

శారదః) (லோகேவேதேசபண்டிதः - லௌகிகேஸமயாசாரேக்ருதகல்போ விஶாரதः) இத்யாதிப்படியே லௌகிகவைதிகங்களிலே அத்விதீயராய், மண்டலாதிபதியாய், வித்வானாய் ஸிம்ஹாஸநாதிபதியாய், பெருமாள் கோயிலிலே சிலநாள் வஸித்துத் திருப்பதியிலே நித்யவாஸமாக எழுந்தருளி யிருக்கிறகாலத்திலே அவருக்கு மூன்றுகுமாரர் திருவவதரித்து அவர்கள் அதிமேதாவிகளாயும், தேவிகள் கூரத்தாண்டாளோ டொத்திருப்பாளொருத்தியாயும், இப்படி இருக்கிற ப்ரதிவாதி பயங்கரமண்ணு, கூரத்தாழ்வானைப்போலே ப்ராப்யவிரோதியென்று ஐஶ்வர்யத்தில் ஜிஹாஸை பிறந்து கேவலம் ஸத்வநிஷ்டராய், (అర్థ సమ్పద్విమోహాయ) (அர்த்தஸம்பத்விமோஹாய) இத்யாதிகளை அநுஸந்தித்து * முற்றவும் வீடுசெய்து எல்லாவற்றையும்பகவத்பாகவதஸ்வத்தாக்கி, தமக்குபரமசேஷிவிஷயத்தில் கைங்கர்யமே புருஷார்த்தமெனறுதியிட்டு திருவேங்கடமுடையான் திருவடிகளிலே (ஒழிவில்காலமெல்லாமுடனாய்மன்னி -வழுவிலாவடிமை செய்ய வேண்டும்) என்றுநிற்க, திருமலைத்தோழப்பர் உகந்தருளி, (అన్యత్పూర్ణాదపాం కుమ్భాదన్యత్పాదావనేజనాత్ । అన్యత్కుశలసంప్రశ్నాన్న చేచ్ఛతి జనార్దనః) என்றுவெள்ளிக்குடத்தைஸாதித்து ஆகாசகங்கையினின்றும் திருமஞ்சனங்கொண்டுவந்து பூர்ணமாகஏலாதிஸம்ஸ்க்ருதமாக்கி நீரேஸமர்ப்பித்துவாருமென்றுநியமிக்க; அண்ணு "நாயன்றே நாயன்றே" என்று குடத்தைவாங்கிக்கொண்டு அதிஸந்துஷ்டராய் இவ்வளவாகிலும் சேஷத்வஸித்தியுண்டாயிற்றே! என்றுநித்யமாக அந்தக் கைங்கர்யம் நடத்திக்கொண்டுபோர; ஒரு ஸ்ரீவைஷ்ணவர், கோயிலினின்றும் அப்பனை ஸேவிக்கவந்து நிற்கஅவரைஸேவிககப்பண்ணி வைத்து வரிசைபெறுவித்துத் தாமும்ஸத்கரித்து அற்றைக்குத் தம்முடைய அண்டையிலேவைததுக்கொண்டு கோயில்வர்த்தாநதங்களையும்பெருமாளமுது செய்கிற வரிசைகளையும் உத்ஸவங்களையும் அழகியமணவாளமாமுனியினுடைய அப்ரதிமவைபவத்தையும் கேட்டுக்கொண்டிருநது பிற்றைநாள் தாமதிருமஞ்சநத்திற்கெழுந்தருளுகிறபோது அவரையும்கூட்டிக்கொண்டு (శృణోమ్యహం ప్రీతికరం మమ నాథస్య కీర్తనం) (ஶ்ருணோம்யஹம்ப்ரீதிகரம் மமநாதஸ்யகீர்த்தநம்) என்கிரபடியே அழகிய மணவாளமாமுனியினுடைய திருசர்யையையும் அத்புதவைபவங்களையுஞ்சொல்லுமெனறு ததேகசித்தராய் திருமஞ்சநங்கொண்டுவந்து ஏலாலவங்ககர்ப்பூராதிகளைப்பரிமாறுவதாகத் திருத்த அவவளவிலே ஒரு ஏகாங்கி ஓடிவநது குடத்தை எடுத்துக்கொணடு திருவாராதந ஸமயத்திற்கு உதவவேணுமென்று கொண்டுபோகாநிற்க, திருமஞசநத்ரவயங்கள் இன்னும்பரிமாறவில்லையே என்ன, அத்தை அவர் கேளாமல் கொண்டுபோய் ஸமர்ப்பிக்க எப்போதும்போலே திருவாராதநங் கொண்டருளா நிற்க அண்ணு "அபசாராம்வந்ததே!" என்று ஏலாதிகளை வட்டிலிலேகொண்டு நிற்க அர்ச்சகர் அவசரராய்அண்ணுவைப்பார்த்து, "இத்தனை நாளைக் காட்டிலும் பரிமளத்ரவ்யங்கள்

விஞ்சி திருமஞ்சன வாஸனை அதிகமாயிருக்கிறதென்ன, அண்ணா பாவஜ்ஞராகையாலே இது வெறுமனன்று உகப்பு விஞ்சியிருக்கிறது, இதற்கு ஹேது ஜீயருடைய வைபவச்ரவணமாகவேணுமென்றுஎண்ணி, அந்த ஸ்ரீவைஷ்ணவரையழைத்து,நீர் அழகிய மணவாளமாமுனி வைபவமான ஐதிஹ்யங்களை அருளிச்செய்ய அடியேன்கேட்டபடியினாலே க்ர்தார்த்தனானேன், அப்பன் திருவுள்ளம் ப்ரஸந்நமாயிற்று, அழகிய மணவாள மாமுனியை ஸேவிக்கப் பெறுவேனாகவேணு மென்ன; அப்பனும் உகந்து அவரை ஸத்கரித்தனுப்பி யருளினார்.

பின்பு, தாம் எப்போதும்போலே சிலநாள் திருமஞ்சந கைங்கர்யஞ்செய்தருளி அப்பனுடைய நியமநத்தினாலே ஸகுடும்பமாகக் கோயிலுக்குப் புறப்பட்டருளி பயணகதிகளிலே எழுந்தருளி திவ்ய நகரத்தைத் தெண்டன் ஸமர்ப்பித்து வைத்தகண் வாங்காமல் ஸேவித்துக்கொண்டு திருக்காவேரியிலே (కావేరీమవగాహిష్యే) (காவேரீமவகாஹிஷீய) இத்யாதியான பட்டர் ஸ்ரீ ஸூக்திகளை அநுஸந்தித்துக்கொண்டு நீராடி திருமண் காப்புச் சாத்தியருளி ஸ்ரீரங்கநாராயணஜீயர் மடத்திலே யெழுந்தருளி, பின்பு பெரியபெருமாளை மங்களாசாஸனம் பண்ணத்தக்கதாக ஸேவாக்ரமத்திலே யெழுந்தருளி சித்ரமண்டபத்திலே ஜீயர் கோஷ்டியாக எழுந்தருளியிருந்து * ஒன்றுநதேவு ப்ரவேசம் நடத்த, அந்த கோஷ்டியைக் கண்டு ஹர்ஷபரவசராய் தண்டன் ஸமர்ப்பித்துநிற்க "ப்ரதிவாதி பயங்கராண்ணா" என்று ஜீயர் கேட்டரு ? குசலப்ரச்நஞ் செய்தருளி இத்தனை நாளைக்காக இன்றைக்கு ஸேவிக்கப்பெற்றேனென்று தழுவிக்கொண்டு பின்பு அவரையும் கூடவைத்துக்கொண்டு காலக்ஷேபம் நடத்த மூன்று பாட்டாய் நாலாம்பாட்டுத் தறுவாய் நிறுத்தினவளவிலே ப்ரதிவாதி பயங்கராண்ணா இப்படி ஆழ்வார் பரதத்வநிர்ணயஞ்செய்தருளி வைத்தபடியை தேவரீர் திருவடிகளில் ஸம்பந்த முண்டானாலல்லது ஆர்க்குமறியப்போகாதென்று வித்தராயிருக்க அவர் திருக்கைகளைப் பிடித்துக்கொண்டு பெருமாளைத் திருவடித்தொழப்புக, தீர்த்தம் சடகோபன் முதலான வரிசைகளெல்லாம் ப்ரஸாதித்து பெருமாள், அர்ச்சகமுகேந "வாரீர் ப்ரதிவாதி பயங்கராசார்யரே" என்று அவர்கையைப் பிடித்துக்கொண்டு, திருமலையிலே போரத் திருமஞ்சந கைங்கர்யம் பண்ணினீரே, ஒருநாள் திருமஞ்சநங்கொண்டுவருமபோது அழகியமணவாளமாமுனி வைபவம் கேட்டுக்கொண்டுவர அதினாலே தீர்த்தருச்யாதிக்யமும் பரிமளாதிக்யமு முண்டாய் நாம் உகநதபடியை நினைத்துவநதீர், "உமக்கு விலக்ஷணஸம்பந்தம் தந்தோம்" என்று ஜீயர் திருக்கையிலே இவரைக் காட்டிக்கொடுக்கப் புறப்பட்டு மடமேயெழுந்தருள;

அநந்தரம், அண்ணா கந்தாடையண்ணன் திருமாளிகைக்கெழுந்தருளுவதாகப் புறப்பட்டருள, அண்ணன் எதிர்கொண்டு (వైష్ణవో వైష్ణవం దృష్ట్వా

దణ్డవత్ ప్రణమేద్భువి) (வைஷ்ணவோ வைஷ்ணவம் த்ருஷ்ட்வா தண்டவத்ப்ரண மேத்புவி) என்கிறபடியே அந்யோந்ய வந்தநபரராய் சேஷத்வபுரஸ்ஸரமாக குசலப்ரச்நங்களுடனே திருமாளிகையிலே எழுந்தருள அங்கே யாத்ருச்சிகமாக வானமாமலை ஜீயரெழுந்தருளியிருக்கக்கண்டு, "அருள்கொண்டாடுமடியவரன்றோ தேவரீர்" என்று திருவடிகளிலே தீர்க்கப்ரணாமம் பண்ண ஜீயர், ப்ரணாமபூர்வகமாகத் தழுவிக்கொண்டு மூவருங் கூடியிருந்து ஜீயருடைய யதிபதிபுநரவதாராதி வைபவங்களையெல்லாம் அந்யோந்யம் அநுஸந்தித்துக்கொண்டு மடத்திலே யெழுந்தருளி, சிறப்பும் திருமுன் காணிக்கையும் ஸமர்ப்பித்தருளி, தேவிகள், குமாரர், எம்பெருமானாரப்பன், அநந்தய்யனப்பை, திருவாய்மொழிப் பெருமாள் நாயனார் முதலானாரெல்லாரையுங் கூட்டிக்கொண்டு திருவடிகளிலே ஆச்ரயித்தருளி க்ருதார்த்தராய், ஸ்ரீபாததீர்த்தமும், தளிகை ப்ரஸாதமும் ஸ்வீகரித்துத் திருவடிகளுக்கு அந்தரங்கராய் வாழ்ந்தருளினார். ஜீயருடைய ஸம்பந்தமுடையராய், (அடங்கெழில் சம்பத்து) என்கிறபடியே கட்டடங்க விலக்ஷணமான ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயை, (அடங்கக்கண்டு) என்கிறபடியே கார்த்ஸ்ந்யேநகண்டு, (ஈசனடங்கெழில்) என்கிறபடியே பந்நகாதீசரான அழகிய மணவாள மாமுனியுடைய நிரவதிகவிலக்ஷண ஸ்ரீயிலே, (அஃதென்றடங்குகவுள்ளே) என்கிறபடியே தாமுமொன்றென்று அந்தர்ப்பவித்து, (ప్రసిద్ధః పరగోష్ఠీషు పరవాదిభయఙ్కరః । శ్రీవైష్ణవానాం గోష్ఠీషు తద్దాస ఇతి విశ్రుతః) என்று ஸ்வசேஷத்வாநுஸந்தாநத்துடனே ஜீயர் திருவடிகளுக் கந்தரங்கராய் வாழ்ந்தருளினார்.

அநந்தரம், ஜீயர் மீளவும் திருமலை முதலான திவ்ய தேசங்களைத் திருவடித்தொழ வேணுமென்று திருவுள்ளமாய், (ప్రతీతైరపి తద్భృత్యైః ప్రతివాదిభయఙ్కరైః) என்கிறபடியே அண்ணா முதலான அநேக ஸ்ரீவைஷ்ணவர்களுடனே திருக்காவேரி வடக்கு நோக்கினாப்போலே புறப்பட்டருளி, (అథ విలోకనలోకత మోనుదం త్వదవలోకనతుఙ్గకుతూహలం । ద్విరదశైలశిరోగృహమేధినం వరదము త్తరవేదివిభూషణం) என்கிறபடியே அவஸரப்ரதீக்ஷரா யெழுந்தருளியிருக்கிற பேரருளாளரைத் திருவடித்தொழுவராக ப்ரதமம் பெருமாள் கோயிலிலே எழுந்தருள அங்குண்டான ஸ்ரீவைஷ்ணவர்களெல்லாரும் எதிர்கொண்டு ஸேவிக்க அவர்களை க்ருபைபண்ணி அவர்களுடனேகூட எழுந்தருளி (శ్రీమద్ద్వారవరం మహద్ధి బలిపీఠాగ్ర్యం ఫణీన్ద్రహ్రదం గోపీనాం రమణం వరాహవపుషం శ్రీభట్టనాథం తథా । శ్రీమన్తం శఠవైరిణం కలిరిపుం శ్రీభక్తిసారం మునిం పూర్ణం లక్ష్మణయోగినం మునివరాన్ నాద్యానథ ద్వారపాః ॥ శ్రీమన్మజ్జనమణ్టపం సరసిజాం హేతీశ భోగీశ్వరౌ రామం నీలమణిం మహానసవరం తార్క్ష్యం నృసింహం ప్రభుమ్ । సేనాన్యం కరిభూధరం తదుపరి శ్రీపుణ్యకోటిం తథా తస్మిన్ దేవవరం దరం మాసహచరం వన్దేత దీయైర్వృతం) (కమలనివేశితాఙ్ఘ్రికమలం కమలారమణం ఘనమణిభూషణద్యుతికడారితగాత్రరుచిం । అభయగదాసుదర్శనసరోరుహచారుకరం కరిగిరిశేఖరం కిమపి చేతసి మే నిదధే) என்கிறபடியே

அடைவே ஸேவித்தருளிவையமாளிகையிலே யெழுந்தருளி பேரருளாளரைத் திருவடிதொழுது (మఙ్గళంవేధసేవేదిమేదినీగృహమేధనే।వరదాయదయాధామ్నే ధీరోదారాయమఙ్గళమ్) என்றுதொடங்கி மங்களாசாஸநம்பண்ணி எழுந்தருளிநிற்க திருவடிக்கீழவர்கள், தீர்த்தப்ரஸாதங்களும் சடகோபனும் ப்ரஸாதிக்க ஸ்வீகரித்தருளி தண்டன்ஸமர்பித்துப் புறப்பட்டருள, அங்குண்டானவர்கள், எழுந்தருளியிருக்கும்படி ஓருமடத்தைக்கற்பிக்க, (కతిచిద్దినానికరిశైలవాసినఃకమలాసఖస్యనయనాతిథిర్భవర్ । నిజపాదపఙ్కజరజోభిషేచనైర్నిఖిలాశ్రితాన్విమలయన్నువాసనః) என்கிறபடியே அங்கே அவர்களுக்கு உகப்பாக நாலாறுநாள் எழுந்தருளியிருக்க, அநந்தரம், திருவைசாகத்திருநாள் தொடங்கிநடக்க மூன்றாந்திருநாள் பெருமாள் ஓப்பித்துக்கொண்டு, (ఆరూఢఃపతిగేన్ద్రమస్యకరయోరఞ్జిర్ద్వయీమర్చయన్ దివ్యైరమ్బరభూషణైర్దినకృతోదీప్తిందివాదీపయన్ । ముగ్ధేనస్మితరోచిషామధురయన్నుక్తాతపత్రశ్రియం విశ్వంపశ్యతిచక్షుషావికసతావీథీవిహారీహరిః) என்கிறபடியே பெரியதிருவடிமேல்கொண்டு திருவீதியிலே புறப்பட்டருள, பெருமாளை ஜீய

—(எறும்பியப்பா பெரியஜீயரை ஸேவித்தது)—

ரும் ஸேவித்துக்கொண்டு கங்கைகண்டமண்டபத்தேறவெழுந்தருளஎறும்பியப்பாவும் சில ஸ்ரீவைஷ்ணவர்களும் திருநாள்ஸேவிக்க எழுந்தருளினவர்கள் அங்கே அசிந்திதமாக ஜீயரை ஸேவித்து, (ఆరుహ్యపతగవృషభమాయాన్తంవరదమాదరాద్ద్రష్ట్రుం । గత్వాతదగ్రభూమింనాథాక్షంతత్రదేశికందృష్ట్వా) என்னும்படி அப்பாவும் விஸ்மிதஹ்ர்தயராய் மோஹித்து ஜீயர் திருவடிகளிலே ஆதராதிசயத்தாலே விழுந்து தத்விக்ரஹாநுபவம் பண்ணிக்கொண்டு, (చిరేణసంజ్ఞాంప్రతిలభ్యచైవవిచిన్తయామాసవిశాలనేత్రః) (சிரேணஸஂஜ்ஞாஂ ப்ரதிலப்யசைவ விசிந்தயாமாஸ விஶாலநேத்ரஃ) என்கிறபடியே மூன்றுநான்கு நாழிகைக்கு மேலே தெளிந்து, பின்பு திருநாளென்றறிந்து ஜீயரை ஸேவித்துக்கொண்டுபோய், (குமிறுமோசைவிழவொலி தொலவில்லி மங்கலங் கொண்டு புக்கு) என்றும், (இழைகொள்சோதிச் செநதாமரைக்கட்பிரானிருந்தமைகாட்டினீர்) என்றும் சொல்லுகிறபடியே ஸேவித்துப் பின்பு ஜீயரும் பெரியதிருவடியோட்டைச் சேர்த்தியை ஸேவித்தருளி, (సువర్ణపృష్ఠమారూఢశ్యామఃపీతామ్బరోహరిః । కాఞ్చనస్యగిరేశ్శృఙ్గేసతటిత్తోయదోయథా) என்கிறபடியே *மஞ்சுயர் பொன்மலைமேலெழுநத மாமுகில்போன்றவடிவை அநுபவித்தருளி, (தாளமுத்து மணிதவள நற்பவளமருணரத்ந வகைசாத்தியே சங்குசக்கரமு மங்கையிற்றிகழ மங்கைபாகனரனேத்தவே, நரருமொத்தமரர்திரளுமேத்தும் நரவாகநன் வருணனிந்திரன் நடுவு நான்மறைகொள் முனிவர் வானவர் குணலமிட்டு நடமாடவே, வரைகளிற் பெரியவடகிரிக்குமிசை மரதகக்குவடுபோலவே வரதர் கச்சிநகர்வருதனித்தெருவில் *வடகலைக்கமுகு பொழியவே, அரவுதித்த மணிமகுடமுற்றவொருவணிபிணக்குடன்மிழற்றவே, கநகமொத்த தொருவடிவமொத்திவரு கருடனிற்பவனிவருவரே) என்றநுபவித்து அதற்குப் பாசுரமிட்டருளச்செய்து ஹர்ஷடராயெழுந்

தருளியிருந்து மற்றைத் திருநாள்களையும் ஸேவித்தருளி எழுந்தருளியிருக்க; ஸ்தலத்திலுள்ளபெரியோர்களெல்லாரும் கூடி யெழுந்தருளி, ஜீயர் மங்களாசாஸநஞ் செய்தருளுகையாலே இந்தவிசைத் திருவைசாகமஹோத்ஸவம் அதிவிலக்ஷணமாகக் கண்டருளினார் என்று உகந்தருளக் கேட்டருளி ஜீயர் அவர்களை ஆதரித்தருளி, கர்த்தவ்யாசார பாகங்களையும், பரஸ்பரசேஷத்வ ஸௌஹார்த்தாவச்யகத்தையும், திவ்யப்ரபந்த வாஸநாத்யாவஶ்யகத்தையும், அவர்களுக்கு உத்தரோத்தரம் அதிசயமாக வேணுமென்றருளிச் செய்ய, எல்லாரும், அப்படியே யாகவேணும், இவற்றிற்கெல்லாம் ஒருவரைக்கற்பித்தருளி அடியோங்களைத் திருத்திப் பணிக் கொள்ளும்படி இந்தஸ்த்தலத்திலே நித்தியவாஸமாக நியமித்தருளவேணுமென்ன; ஜீயரும், போர உகந்தருளி வானமாமலை ஜீயரை இட்டு நம்முடைய அப்பாய்ச்சியாரண்ணாவை அழைத்துவாருமென்று நியமிக்க அவரும் அப்படியே செய்தருள அப்பாச்சியாரண்ணாவை அப்போதே எல்லாருக்கும் காட்டியருளி இவரை நம்முடைய மர்யாதையாக வெண்ணி க்ர்பைபண்ணிவாருங்கோ ளென்றருளிச் செய்து அவரையும், நீர் முதலியாண்டான் திருவம்சத்திலே அவதீர்ணராயிருக்கையாலே, ஆண்டான், தோழப்பர் முதலானார்க்கு உகப்பாக நம்முடைய வாக்யாநுவிதாயியாய் இவர்களுக்கெல்லாம் ஹிதப்ரவர்த்தகராய் பேரருளாளருக்கு மங்களாஶாஸநபரராய் நித்யவாஸம்பண்ணுமென்று (శ్రేయాంసికరిశైలేన్ద్రౕః కరుణావరుణాలయః। దోర్దుహ్యోద్వరదశ్శ్రీమానర్థినాంనిధిరవ్యయః) என்று ஆசீர்வதித்தருளினார்.

அநந்தரம், அப்பாவைக் கூட்டிக்கொண்டு திருப்புட்குழிவழியாக எழுந்தருளி அங்கே * புட்குழியெம்போரேற்றையும் ஸேவித்து, (ఘటికాచల శేఖర స్తథో నరసింహం నయ నేనదిర్వృశః। అనుపాలయదాశ్రితైర్జనై రవనీంతామపనీతబన్ధనైః) என்கிறபடியே *வளங்கிளரும் நீள்சோலை வண்பூங்கடிகைத் தடங்குன்றிலே யெழுந்தருளித் தக்காணையும் திருவடித்தொழுது க்ராமாந்தரங்களினின்றும் அநுகூலராய்வந்து ஆஶ்ரயித்தவர்களையும் க்ர்பைபண்ணியருளி, அநந்தரம், கடிகைத்தடங் குன்றிலே யேறியருளி * மிக்கார்வேதவிமலர் விழுங்கும் அக்காரக்கனியையும் அநுபவித்தருளி, (அந்தியம்போதிலரியுருவாகியரியை யழித்தவனைப் பந்தனைதீரப் பல்லாண்டு பல்லாயிரத் தாண்டென்று பாடுதும்)என்கிறபடியே மங்களாசாஸநம்பண்ணி அங்கே யெழுந்தருளிநின்று எறும்பியைக் கடாக்ஷித்தருளி, (வடதிருவரங்கம்) என்று ஊருக்குத் திருநாமஞ்சாத்தி அங்குண்டானவர்களெல்லாரையும் அழகிய மணவாளதாஸரென்று அபிமாநித்தருளி அண்ணல்மலையருகே அரங்கமாநகராக்கி, அநந்தரம் வண்பூங் கடிகைக்கு பண்டெல்லாம் திருமலையோடே சேர்த்தி யுண்டாகையாலே * பொன்னை மாமணியை அணியார்ந்ததோர் மின்னை வேங்கடத்துச்சியிற் கண்டு, இப்படி ஸ்ரீநிதியாகிற பொருள்படைப்பாராக *ஒண்ணுதல்மாமையின்படியே மநோரதத்தை யுடையராய்,

(దేవందివ్యంశేషశైలేవసన్తంతత్పాదాబ్జంవీక్షితుమ్) (தேவம் திவ்யம் ஶேஷஶைலேவஸந்தம் தத்பாதாப்ஜம் வீக்ஷிதும்) என்னும்படி திருவடித்தொழுவாராக திருஅடிவாரமான திருப்பதியிலே முந்துறவெழுந்தருள, அங்குள்ள ஆசார்ய புருஷர்கள்முதலான அனைவருமெதிர்கொண்டுஸேவிக்க அவர்களுடனே கூட கோவிந்தராஜப் பெருமாளைத் திருவடித்தொழுவதாக எழுந்தருளி, ப்ரதமம் எம்பெருமானாரைத் திருவடித்தொழுது அவருகந்தருளி எழுந்தருளப்பண்ணினவரென்று அத்யாதரத்துடனே ஸ்ரீகோவிந்தராஜப் பெருமாளையும், (கையினார்சுரிசங்கனலாழியர்) எனகிறபடியே ஸேவித்தருளி, அங்கு நின்றும் * கோவிந்தனறன் அடியாராயிருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களுடனே கூடப்புறப்பட்டருளி திருமலையடிவாரத்திலே எழுந்தருளியிருக்கிற நம்மாழ்வார்முதலான ஆழ்வார்களையும், (ஒழிவில்காலம்) என்றுதொடங்கி, (மிக்கசீலஞ்சேர்மாறன் பூங்கழலைநெஞ்சேபுகழ்) என்றும், (உலகுய்யமால்நின்ற) என்று தொடங்கி, (மகிழ்மாறன் றாளினையே உன்சரணநெஞ்சமேயுண்) என்றும் அநுஸந்தித்து ஸேவித்தருளி அற்றைக்கு அங்கே எழுந்தருளியிருந்து அங்குண்டானவர்களையும் க்ருபைபண்ணியருளி, பிற்றைநாள் *நிலதமுலகுக்காய் நின்ற திருவேங்கடத்தைச்சென்று வணங்கி, பின்பு *மொய்த்த சோலைமொய் பூந்தடந்தாழ்வரையையடைந்துஅப்பால் பரமபதத்துக்குப் படியொழுங்கு போலேயிருக்கிற திருமலையிலே ப்ரதிபத்தியுடனே யேறியெழுந்தருளிக் காட்டுச்சிங்கரையும் திருவடித்தொழுது, * தேனூறுபாயுந திருவேங்கடத்திலுண்டான காறுகளைக் கண்டுகளித்துக்கொண்டு அவ்வருகே எழுந்தருளுகிறவர், * விண்ணின்மீதியன்ற வேங்கடத்திலுண்டான * விலங்கல் குடுமிகளையும் * மின்திகழ்குடுமிகளையும் * செப்பார்திண்வரையையும் ஸேவித்துக்கொண்டு அப்பாலே எழுந்தருளி, * காட்டில் வேங்கடத்திலுண்டான காட்டையும் வைகுந்தநாட்டுக்கொப்பான * வடவேங்கடநாட்டையும் அநுபவித்து * மாலுகந்தவூரான ஊரருகே யெழுந்தருளி * (நன்மணிவண்ணன்) என்கிறபாட்டின்படியே அங்குண்டான அபூர்வங்களையெல்லாம் ஆஸ்சர்யத்துடனே அநுபவித்து, * கண்ணன் விண்ணூரைத்தொழுது ஊரருகே ஸேவித்துக்கொண்டுநிற்க, அவ்வளவில் * வேங்கடத்தைப்பதியாக வாழுகிறகோயில்கேள்வி ஜீயர்களும் ஏகாங்கி ஸ்ரீவைஷ்ணவர்களும் மற்றெல்லாரும் வந்தெதிர்கொண்டுஸேவிக்க, அவர்களை (நிகரிலமரர்முனிக்கணங்கள்) என்று ப்ரதிபத்திபண்ணியருளி அவர்களுடனேகூடத்திருவேங்கடநகரை ப்ரவேசித்து அவ்வருகே வைகுந்தன் திருவாசல், அவாவறச்சூழ்ந்தான் திருவாசல் எனகிற திருவாசல்களையும் தண்டன் ஸமர்ப்பித்து ப்ரதக்ஷிணமாகவெழுந்தருளி அங்கே அநந்தாழ்வான் கைங்கர்யமான "இராமாநுசன்" என்கிற திருநந்தவநத்தையும் மற்றுமுண்டான திருநந்தவநங்களையும் திருப்பூமண்டபங்களையுஞ்ஸேவித்துத் திருவுள்ளமுகந்

தருளி பின்பு *திருக்கோனேரியிலே நீராடித் திருமண்காப்புச் சாத்தி யருளி, (மேலொருநாள் மண்கோட்டுக்கொண்டான்மலை) என்கிறபடியே க்ஷேத்ராதிபதியான ஞானப்பிரானையும் ஸேவித்துப் புறப்பட்டருளி, * ஊனேறுசெல்வத்தை அநுஸந்தித்து அங்குண்டான திர்யக்ஸ்த்தாவரஜங் மங்களை ப்ரார்த்தியாநின்றுகொண்டு திருக்கோபுரத்தருகே தண்டன்ஸமர்ப்பித்து உள்ளே புகுந்து, நம்பெருமாளெழுந்தருளியிருந்த அழகிய மணவாளன் திருமண்டபத்தையும் ஸேவித்தருளி, பின்பு (శ్రీమతిమహతిద్వారేచిఖాఞ్చం కాఞ్చనమయఞ్చబలిపీఠం । స్థానమథయామునేయంచమ్పకతరుసమ్పదంప్రతీహారం । వినతాత నయమహానసమణిమణ్టపంకనకమయవిమానవరం। పృతనాపతియతిధుర్యానరహరిమథనమతిజనజానిం । అథపునరనఘమణిద్యుతికవచితకమలానివాసభుజమధ్యం । కలయతికమలవిలోచనమఞ్జనగిరినిధిమనఞ్జనంపురుషం) என்றும், (శరణమయమిత్యభీష్టిం నిర్దిశ్య దక్షిణపాణినాకరకిసలయం సవ్యం సవ్యోరుసీమ్ని సమర్పయన్ । మణిగణమహోమగ్నే వక్షస్థలే దధదిన్దిరాం భవదభిమత శ్రీమానస్మాకమస్తుపదంపదం) என்கிறபடியே திருவேங்கடமுடையானைத் திருவடித்தொழுவதாக ஸேவாக்ரமத்தில்அடைவே அத்தாணிப்புளி, ஸ்ரீ பலிபீடம், யமுனைத்துறைவனென்கிற திருப்பூமண்டபம், செண்பகத்திரு வாசல், பெரியதிருவடி, திருமடைப்பள்ளி, திருமாமணிமண்டபம், திவ்யவிமாநம் முதலானவற்றையும் ஸேவித்தருளி, அநந்தரம் ஸேனைமுதலியாரையும் திருவடித்தொழுது, (நின்ற வண்கீர்த்தியும் நீள்புனலும் நிறைவேங்கடப்பொற்குன்றமும்) என்றும், (இருப்பிடம்வைகுந்தம் வேங்கடம்) என்றும் இத்யாதிகளை அநுஸந்தித்து எம்பெருமானாரையும் ஸேவித்து அவருடைய அநுமதியோடே புறப்பட்டருளி, (தாழையதனூடரியாய்) என்றனுசந்தித்தருளி * திருவேங்கடத்தரியையும் ஸேவித்து, வென்றுமாலையிட்டான் திருமண்டபத்தே யெழுந்தருளி, (தாயேதந்தை) என்றுதொடங்கி, (நாயேன்வந்தடைந்தேன் நல்கியாளென்னைக் கொண்டருளே) என்று தண்டன்ஸமர்ப்பித்து உள்ளேபுக்கு, பின்பு*மிடைந்தவேழ்மரங்களுமடங்கவெய்து வேங்கடமடைந்தமாலான சக்ரவர்த்தித் திருமகன் திருவடிகளையடைந்து, அப்பால் * அவன்தாளிணைக்கீழ்ப்புகுங் காதலையுடையராய் குலசேகரன்படியருகேசென்று, (அகலகில்லேன்) என்று பூர்வவாக்யப்ரக்ரியையாலே *அடிக்கீழமர்ந்துபுகுந்துநின்று ஸேவித்தருளி, அநந்தரம், * செங்கமலக்கழலில்படியே (திருமகள்மருவுமிருபதமலருமழுந்தாள்களுங்குறங்குந் தாங்குசெக்கரம்மாமுகில்போலத் திருவரைச் செம்பொனம்பரமும், அருமைசேர்சீராவு மயனைத் தந்ததோருந்தியுமமுதமாருதரபந்தநமு மலர்மேல்மங்கை யுறைதிருமார்வமு மாரமுப்பதக்கநன்னிரையும், பெருவரையனையபுய மொருநான்கும் பிறங்கடலாழியுஞ்சங்கும் பெருதிவமென்று காட்டியகரமும் பிடித்ததோர் மருங்கினிற்கறமும், ஒருமதியெனவே சோதிசேர்முகமு முயர்திருவேங்கடத்துறையு மொப்பிலாவப்பன்கருணைசேர்விழியு மென்னுளெலாம் நிறைந்து நின்றனவே) என்று

பாதாதிகேசாந்தமாக அநுபவித்தருளி, * அலங்கலந்துளபமுடியையும் * திருத்தியகோரம்பத்தையும், * சுற்றுமொளிவட்டஞ் சூழ்ந்து சோதி பரந்த * கோளிழைவான்முகத்தையும், அதில் * தன்முகத்துச் சுட்டியையும், திருநெற்றியிலேசாத்தின முத்தின்திருநாமத்தையும், "வெண்ணெயுண்டான் திருமூக்கு" என்று ப்ரத்யபிஜ்ஞை பண்ணலாம்படி புழுகிலே முழுகியிருக்கிற * கோலநீள் கொடிமூக்கையும், * தாமரைக்கட்கனிவாயையும், * வார்காதிலேசாத்தின * இலகுமகரகுண்டலங்களையும் * உலகமுண்டபெருவாயாலே * அண்டமும்நாடுமடங்க விழுங்கியகண்டத்தையும், * அத்திருக்கழுத்தினில் காறையையும், * அலர்மேல்மங்கையுறைமார்வையும், * அதில் பவளவாய்ப்பூமகளும் பன்மணிப் பூணாரமுமான சேர்த்தியையும், அத்தோடுசேர்ந்த * வெண்புரிநூலையும், * வடவேங்கடவனுடைய மல்லார்தோல்களையும், அதிலேசாத்தின * தண்டுழாய் விரைநாறுகண்ணியையும், திருக்கைகளிலேதரித்த * வலம்புரி ஆழியையும், அவற்றிற்கு பரபாகாவஹமான * வண்ணமருள்கொள் அணிமேகவண்ணத்தையும், * உய்யவுலகுபடைத்துண்டமணிவயிற்றையும் * அதில் திருவுதரபந்தநத்தையும், (பெருமானரையிற்பீதகவண்ணவாடை) என்று வாய்புலத்தும்படியான * அந்திபோல்நிறத்தாடையையும், * பல்லிநுண்பற்றுகச்சாத்தின உடைவாளையும், * புரிந்து மலரிடுகிற புண்டரீகப்பாதமான * பூவார்கழல்களையும் அதில் அதிர்கழல்களையுமுடைய திருவேங்கடமுடையானை, (எண்ணம் புகுந்து இருந்து தித்திக்கும்) என்கிறபடியே கேசாதிபாதாந்தமாகவும் அநுபவித்தருளி ப்ரீதராய்த் திருப்பல்லாண்டுதொடங்கி அநுஸந்தித்து, (మఙ్గళం మానుషే లోకే వైకుణ్ఠమధితిష్ఠతే। శేషశైలనివాసాయ శ్రీనివాసాయ మఙ్గళం)(மங்களம் மாநுஷேலோகேவைகுண்டமதிதிஷ்டதே-ஶேஷஶைலநிவாஸாய ஸ்ரீநிவாஸாயமங்களம்) என்று மங்களாசாஸநம் பண்ணியருளி (సౌమ్యోపయన్తృముని నామమదర్శితౌ తే శ్రీవేఙ్కటేశచరణౌ శరణం ప్రపద్యే)(ஸௌம்யோபயந்த்ருமுநிநாமமதர்ஶிதௌதே ஸ்ரீவேங்கடேஶசரணௌஶரணம்ப்ரபத்யே) என்னும்படி எல்லார்க்கும் புகலாக, (அடிக்கீழமர்ந்து புகுந்து அடியீர்வாழ்மின்) என்று திருவடியைக்காட்டியருள ; அவனும், "மலைமேல்தான் நின்றென்மனத்துளிருந்தான்" என்கிறபடியே இவர் திருவுள்ளத்தைக் கணிசித்துக்கொண்டிருந்து இப்போது இவரைப்பெற்றவாறே (శ్రీమత్సున్దరజామాతృమునిమానసవాసినే)(ஸ்ரீமத்ஸுந்தரஜாமாத்ருமுநிமாநஸவாஸிநே) என்னும்படி இவர் திருவுள்ளத்தைத் தனக்கு ஆவஸஸ்தாநமாகவிரும்ப, இவரும், (எந்தாய்) (வந்தாய்) என்கிறபாட்டுக்களின்படியே (இனியெங்குப்போகின்றதே,) (இனியானுன்னையென்றும் விடேனே) என்கிற திருவுள்ளத்தைக்கொண்டு *நிகரில்புகழானவாத்ஸல்யாதிகுணங்களுக்குத்தோற்று அதிலே ஈடுபட்டு, (ஒழிவிலாக்காலம்) என்கிறபடியே உத்தரவாக்யத்தில் கைங்கர்ய ப்ரார்த்தனையையும் பண்ணியருளாநிற்கிறவளவிலே, தீர்த்தம், ப்ரஸாதம், சட

கோபன், பூவார்கழல்கள் முதலானவரிசைகளெல்லாம் ப்ரஸாதிக்கப்பெற்று க்ர்தார்த்தராய் புறப்பட்டருளி, (కతిచనదివసాని ధామ్ని తస్మిన్ కమలవిలోచన మేనమీక్షమాణః)(கதிசநதிவஸாநி தாம்நி தஸ்மின்கமலவிலோசநமேந மீக்ஷமாணஃ)என்கிறபடியே அங்கே சிறிதுநாளெழுந்தருளியிருந்து அங்குண்டானவர்களையும் அபிமாநித்தருளி, இது * விண்ணோர் வெற்பாயிருக்கிறது என்றருளிச்செய்து அங்குள்ள வைபவங்களையெல்லாம் ஸேவித்தருளிப் புறப்பட்டவளவிலே, அங்குள்ளார் ''இங்குத்தைக்குப் பரிவராயிருப்பா ரொருவரைக் கற்பித்தருளவேணும்" என்ன எம்பெருமானார் ஜீயரைக்கற்பித்தருளினார்.

அநந்தரம், (అహింజశైలమభితో నిరన్తరం ప్రుతనాశతేనసవిలోకయన్ తతః । అవరుహ్యదివ్యనగరం రమాస్పదం భుజగేశయంపునరుపేత్యపూరుషం) என்கிறபடியே அங்குநின்று மிறங்கி யெழுந்தருளி ஸ்ரீகோவிந்தராஜப் பெருமாளையும், * குளிரருவி வேங்கடத்தென் கோவிந்தன் குணம்பாடுவாராய் அநுபவித்துப் புறப்பட்டருளி திருவெவ்வுளூர், திருவல்லிக்கேணி முதலான திருப்பதிகளெங்கும் திருவடித்தொழுது பெருமாள் கோயிலேற வெழுந்தருளி பேரருளாளரையும் திருவடித்தொழுது, அங்குநின்றும் அவரநுமதியுடனே புறப்பட்டருளி மண்ணில் பெரிய மதுராந்தகத்தேற வெழுந்தருளி, (மருமலர்கமழுஞ்சோலை மதுரைமாநகர்வந்தெய்தி, அருள்பொழி பெரிய நம்பியன்றெதிராசராசற்கு, அரும்பொருள்வழங்கு மெங்களேரிகாத்தருள்வார் கோயில், திருமகிழடியிற்செல்லீர் தீவினைதீருமாறே) என்று அங்கேற வெழுந்தருளி, * (இதுவோகிளியாறிவ்வூரோ திருமதுரை, இதுவோ திருமகிழுங்கோபுரமு, மிதுவோ, பெரியநம்பிதாமுகந்து பின்னு மெதிராசர்குத், துயமளித்ததூயப்பதி) என்று அங்கே தண்டன் ஸமர்ப்பித்து அத்யந்தஹ்ருஷ்டராய் அற்றைக்கங்கே எழுந்தருளியிருந்து பிற்றைநாள் புறப்பட்டுத் திருச்சித்திரக் கூடத்தேற வெழுந்தருளி கோவிந்தராஜரையும் திருவடித்தொழுது, அநந்தரம் சோழமண்டலத்திலுண்டான திருப்பதிகளைத் திருவடிதொழுவராக மநோரதித்துக்கொண்டு புறப்பட்டருளி அப்படியே வழியிலுள்ள திவ்யதேசங்களையும் மங்களாசாஸனஞ் செய்தருளி,

பின்பு திருவாலிதிருநகரியேற வெழுந்தருளித் திருமங்கையாழ்வாரைத் திருவடித்தொழுது. (உறைகழித்த வாளையொத்த விழிமடந்தை மாதர்மேலுருகவைத்தமனமொழித்து வுலகளந்த நம்பிமேல், குறையை வைத்து மடலெடுத்த குறையலாளி திருமணங் கொல்லைதன்னில் வழிபறித்த குற்ற மற்ற செங்கையான், மறையுரைத்தமந்திரத்தை மாலுரைக்கவவன் முன்னே மடியொதுக்கிமனமடக்கி வாய்புதைத்து ஒன்னலார், கறை குளித்த வேலணைத்து நின்றவிந்தநிலைமையென் கண்ணைவிட்ட

* தனைதட்டுகிற இப்பாட்டை, திருத்த பயந்துவிட்டுவிட்டனன்; இன்னும் தனைதட்டுகிற பாட்டுக்களுக்கும் இப்படியே என்றறிக,

கன்றிடாது கலியனுணையாணையே) என்றும் (அணைத்தவேலும், தொழு தகையும், அழுந்தியதிருநாமமும், ஓமென்றவாயும், உயர்ந்தமூக்கும், குளிர்ந்த முகமும், பரந்த விழியும், இருண்டகுழலும், சுருண்டவளைய மும், வடித்தகாதும், மலர்ந்த காதுகாப்பும், தாழ்ந்த செவியும், செறிந்தகழுத்தும், அகன்றமார்பும், திரண்டதோளும், நெளித்த முது கும், குவிந்தவிடையும், அல்லிக்கயறும், அழுந்திய சீராவும், தூக்கிய கருங்கோவையும், தொங்கலுந்தனிமாலையும், சாத்தியதிருத்தண்டையும், சதிரானவீரக்கழலும், குந்தியிட்டகணைக்காலும், குளிரவைத்த திருவடி மலரும், மருவலர்தமுடல் துணியவாள் வீசும் பரகாலன் மங்கைமன்னரான வடிவே) என்றும், (ஐயனருள்மாரி செய்யவடியிணைகள்வாழியே யந்துகி லுஞ் சீராவுமணையு மரைவாழியே, மையிலகு வேலணைத்த வண்மைமிக வாழியே மாறுமலஞ்சலிசெய்மலர்க்கரங்கள்வாழியே, செய்யகலனுடனலங் கள் சேர்மார்பும் வாழியே, திண்புயமும் பணிலமர்ந்த திருக்கழுத்தும் வா ழியே, மையல்செய்யு முகமுறுவல் மலர்க்கண்கள் வாழியே, மன்னுமுடித் தொப்பாரம் வலயமுடன்வாழியே) என்று மீடுபட்டு, (வேலணைத்தமார்வும் விளங்கு திருவெட்டெழுத்தை, மாலுரைக்கத்தாழ்த்தவலச்செவியும், கால ணைத்த, தண்டையும் வீரக்கழலுந்தார்க்கலியன் வாண்முகமும், கண்டு களிக்குமென்கண்) என்று அவர்மந்த்ரலாபத்துக்குநின்றநிலையிலே மக்நமா நவாய் அநுபவித்து மங்களாசாஸநஞ் செய்தருளி பரகாலர்க்கு பரமப்ரீதி கரரான வயலாலிமணவாளரையும் ஸேவித்துப் புறப்பட்டு திருமணங் கொல்லை யேறவெழுந்தருளி, (இதுவோ திருவரசிதுவோ மணங்கொல்லை, இதுவோ வெழிலாலியென்னுமூர்; இதுவோதான், வெட்டுங்கலியன் வேல் வெட்டி நெடுமாலே, எட்டெழுத்தும் பறித்தவிடம்) என்று அவ்விடத்தை யும் ஸேவித்துப் புறப்பட்டருளி,

(நீணிலாமுற்றத்து நின்றிவள் நோக்கினாள் காணுமோகண்ணபுர மென்றுகாட்டினாள்) என்கிறபடியே திருக்கண்ணபுரத்திலே திருவுள்ளஞ் சென்று, (இன்றே சென்று திருக்கண்ணபுரம்புக்கு) என்கிறபடியே அதித்வரையுடனே அங்கேறவெழுந்தருளி கருவரைப்போல் நின்றானை யும் ஸர்வாங்கஸுந்தரரான சவுரிராஜனையும் ஸேவித்தருளி, (கண்ண புரத்தடியேன்) என்றதுவே நிரூபகமான திருமங்கையாழ்வாரையும் அங் கேயேறியருளப்பண்ணி, * காலின் மணிகரையலைக்கும் கணபுரத்தினின் றும் போந்து *வாவித்தடஞ்சூழ் மணிமுத்தாற்றின நறையூர் நெடுமா லான நம்பியையும் நாய்ச்சியாரையும் ஸேவித்துப் புறப்பட்டு, * செழுமா மணிகள் சேரும் திருக்குடந்தையிலே சேர்ந்து ஆராவமுதாழ்வாருடைய * ஏரார்கோலத் திருவுருவையும் திருவடித்தொழுது, அங்குநின்றும் புறப்பட்டருளி * திருமால்சென்று சேர்விடமான தென்திருப்போரையில் சென்று திருப்பேர்நகரானையும் திருவடித்தொழுது, * அங்குநின்றும்

புறப்பட்டருளி *மாமலராள் புணர்ந்த பொன்மார்வன் பொருந்தும்பதி தொறும் புக்குநிற்கும்) என்றும், (దివ్యాని తత్ర నగరాణి దిగన్తరాణి ద్దేవేనయాని హరిణా విషయీకృతాని । సత్యం త్వదీక్షణసమృద్ధమహోత్సవాని ధన్యాని తాని జగతశ్శుభయంత్రణాని) (திவ்யாநிதத்ர நகராணி திகந்தராணீர் தேவேநயாநி ஹரிணாவிஷயீக்ர்தாநி - ஸத்யம்த்வதீக்ஷண ஸம்ர்த்தமஹோத்ஸவாநி தந்யாநிதாநிஜகதஶ்ஶுபயம்த்வகாநி) என்றுஞ் சொல்லுகிறபடியே மற்று முண்டான திருப்பதிகளையும் மங்களாசாஸநம் பண்ணியருளி, * தையல் நல்லார்குழல்மாலையும் மற்றவர்தடமுலை செய்யசாந்தும் கலந்திழி புனல்சூழ் தென்னரங்கத்தே சென்று, பெரிய பெருமாளையும் (ఏష బ్రహ్మ ప్రవిష్టోస్మి గ్రీష్మే శీతమివ హ్రదమ్) (ஏஷப்ரஹ்மப்ரவிஷ்டோஸ்மிக்ரீஷ்மே ஶீதமிவஹ்ரதம்) என்றும், பொற்றாமரைக் கயம் நீராடப்போனாள்) என்றும் சொல்லுகிறபடியே விடாய்கெட * படிந்துகுடைந்தாடி யநுபவித்து தீர்த்தப்ரஸாதம் பெற்று ஹ்ர்ஷ்டராய்ப் புறப்பட்டு,

தமக்கிருப்பான *திருவரங்கன் திருப்பதியிலே எழுந்தருளி பெருமாளை ஸேவித்து, (చిత్రాణిదీప్తతరరత్నవిభూషణాని చిత్రాణిచామరయుగం శయనాసనాని। త్వన్నామలాంఛనయుతానిసహత్వదీయై ర్దేయానిదేవదయితాసహితాయతస్మై) (சித்ராணி தீப்ததராரத்நவிபூஷணாநி சித்ராணிசாமரயுகம் ஶயநாஸநாநி- த்வந்நாமலாம்சநயுதாநிஸஹத்வதீயைர்த்தேயாநி தேவதயிதா ஸஹிதாயதஸ்மை) என்னும்படி தாம்கொண்டெழுந்தருளின திருவாபரணங்கள், திருவெண்கொற்றக்குடை, திருவெண்சாமரம், திருவாலவட்டம், ரத்நகம்பளம், திருவணை, திருமெத்தை முதலான வஸ்துக்களெல்லாவற்றையும் ஸமர்ப்பித்து மங்களாசாஸநம்பண்ணிக்கொண்டு எழுந்தருளியிருக்க பெருமாளும், மிகவும்உகந்தருளி தீர்த்தம், சடகோபன் முதலானவரிசைகளையும்ப்ரஸாதித்தருளி, உத்தமநம்பிபிள்ளையை, கோயில் பரிகரமனைத்துக் கொத்துடனே வரிசையாக மடத்திலே விட்டுவாவென்று அருள்பாடிட்டருள அவரும் அப்படியே அஷ்டாதசவாத்யங்களுடனே மஹோத்ஸவமாக மடத்திலே எழுந்தருளப்பண்ணினார். நம் பெரிய ஜீயரும், மடத்திலே யெழுந்தருளியிருக்கிற அப்பிள்ளை திருவாழியாழ்வார்பிள்ளை தொடக்கமானபெரியோர்களையும் மற்றும் கைங்கர்யபரராய் எழுந்தருளியிருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களையும் க்ர்பைபண்ணியருளி திருமலை பெருமாள் கோயில் தொடக்கமான திவ்யதேசங்களினின்றும் கொண்டெழுந்தருளினதீர்த்தப்ரஸாதங்களையும் விநியோகம்செய்தருளி, அப்பாச்சியாரண்ணாவையழைத்தருளி, முன்நியமநப்படிக்கு பெருமாள் கோயிலுக்கு நியமித்தருள, அவரும் இந்தஸேவையையும் கோஷ்டியையும் விட்டு விடைகொள்ளவல்லேனோவென்று வ்யாகுலப்பட ஜீயர் அவர்கையைப்பிடித்துக்கொண்டு ஸந்நிதியிலேயெழுந்தருளி, தாம், அடிதொடங்கி இராமாநுசனென்று திருநாமம்சாத்தி பஹுநாளாண்டதாய் ஜீர்ணமாயிருக்கிற தீர்த்தசெம்பு ஸ்வாமியுடையப்ரஸாத

மென்று வானமாமலைஜீயர், திருமண் கூடையிலேவைத்து ஸேவித்துக் கொண்டிருக்கிறத்தைக்கொண்டு வரச்சொல்லி திருக்கைகளிலே வாங்கிக் கொண்டு, முன்னிருந்த இராமாநுசன் என்கிற விலாசமும், திருவாழி, திருச்சங்கு, திருமண், ஸ்ரீசூர்ணம் எல்லாம் பரிமுஷிதமாயும் ஜீர்ணமாயு மிருப்பதினாலே நம்மைப்போலிருக்கிற இரண்டுவிக்ரஹங்களை இத்தையிட்டு உண்டாக்கி உம்முடைய ஆசார்யருக்கு ஒரு விக்ரஹமும் உமக்கு ஒரு விக்ரஹமுமாகக் கொள்ளுமென்று ஸாதித்தருளி, கோயிலாழ்வாரிலே யெழுந் தருளியிருக்கிற தீமனங்கெடுத்தார் ஆட்கொண்ட வில்லி ஜீயர் திருவாராத நமாய் எழுந்தருளியிருந்தவராகையாலே அவர் திருவடிகளுக்கு அந்தரங் கராய் கந்தாடையாண்டான் திருவம்சமாக அவருடைய கைங்கர்யம் போலே நீரும் கைங்கர்யம்பண்ணத்தக்கவராகையாலே உமக்கு இவர் திரு வாராதநம் என்று உகந்து ஸாதித்தருளி, கோஷ்டியிலே எழுந்தருளி, (శ్రీతీర్థదేవరాజార్యతనయాం మే ప్రతివిశ్రుతా । తస్యాస్తనూజో వరదః కాంచీనగరభూషణః) (ஸ்ரீ தீர்த்ததேவராஜார்யதநயாம்பேதிவிஃருதா - தஸ்யாஸ்தநூஜோவரதஃ காஂசீநகரபூஷணஃ) என்று பேரருளாளரே ஆச்சியாருக்குக் குமாரராக அவதரித்தருளினார் என்று ப்ரீத்யதிசயத்தாலே அருளிச்செய்து பெரு மாள்கோயிலிலே நித்யவாசம் பண்ணிக்கொண்டு ஸுகோத்தரராயிரும் என்று விடைஸாதித்தருளினார்.

ஒருநாள், ப்ரதிவாதி பயங்கர மண்ணுவை யழைத்தருளி, கந்தாடை யண்ணன், போரேற்றுநாயனார், அநந்தய்யனப்பை, எம்பெருமானார்ஜீயர் நாயனார், கந்தாடைநாயன, இவர்களெல்லாருக்கும் ஸ்ரீபாஷ்யம் ஸாதித் தருளும்படிக்கு நியமித்து, அவருக்கு "ஸ்ரீபாஷ்யாசார்யர்" என்று திரு நாமம் ப்ரஸாதித்தருளி பாஷ்யஸிம்ஹாஸநத்திலே அபிஷேகம். செய்தரு ளினார். ஒருநாள், கந்தாடையண்ணனை யழைத்து, பெரியகந்தாடையப் பன், திருகோபுரத்து நாயனார் பட்டர், திருவாழியாழ்வார்பிள்ளை, ஜீயர் நாயனார், கந்தாடைநாயன், சுத்தஸத்வமண்ணன், ஆண்டபெருமாள் நாய னார், அய்யனப்பா, இவர்களுக்கு பகவத்விஷயம் ப்ரஸாதிக்கும்படிக்கு நிய மித்தருளி "பகவத்ஸம்பந்தாசார்யர்" என்று திருநாமம் ஸாதித்தருளி ஆசார்யஸிம்ஹாஸநத்திலே அபிஷேகம் செய்தருளினார் சுத்தஸத்வமண் ணனுடைய வ்யாக்யாந சாதுர்யத்தைக்கண்டு போரவுகந்தருளி அவருக்கு "திருவாய்மொழி யாசார்யர்" என்றுதிருநாமஞ் சாததி பகவத்விஷய ஸிம்ஹாஸநத்திலே அபிஷேகஞ் செய்தருளினார். ஒருநாள்ராத்ரிகந் தாடை நாயனும், ஜீயர்நாயனாரும் பகவத்விஷயத்திலே கூடமான வாக்யங் களுக்கு அர்த்தவிசாரஞ் செய்ய நாயன் ஸம்ஸ்க்ருதமாக அர்த்தோபந்யா ஸஞ் செய்யக் கண்டு பகவத்விஷயத்திற்கு ஸம்ஸ்க்ருதத்தில் அரும்பத விளக்கம் பண்ணச்சொல்லி நியமித்தருளி உபலாளித்தருளினார்.

முனபு ஜீயாஸநத்தியினின்றும அனுப்புவித்துக்கொணடு எழுநதரு ளின அப்பா, தத்விச்லேஷம் ஸஹிக்கமாட்டாமல் ஜீயருடைய

திநசர்யாப்ரகாரங்களை அநுஸந்தித்துக்கொண்டு அநுபவபரீவாஹ ரூபமாக "திநசர்யை" என்கிறப்ரபந்தத்தைச் செய்தருளி ஜீயர்ஸந்நிதிக்கு ஒரு ஸ்ரீவைஷ்ணவர்கையிலேகொடுத்துவரக்காட்ட அத்தைக் கண்டு ஜீயர் மிகவும் உகந்தருளி அபிமாநநிஷ்டராகில் இப்படியிருக்கவேண்டாவோவென்று மிகவும் க்ருபைபண்ணி அவரிடத்திலே திருவுள்ளஞ் சென்று அப்போதே அப்பா எழுந்தருளும்படிக்கு, (ప్రీతః ప్రేషిత వాక్ మునిర్వ్వరవరో యస్తైముహుః శ్రీముఖమ్) என்கிறபடியே எறும்பியேறத் திருமுகம் போகவிட்டருள, அவ்வளவிலே அப்பாவும், ஜீயரை அப்போதேகாண வேணுமென்னும் பேராசையோடேயிருக்க, (పారావారప్లవనచతురైః కుఞ్జరో వానరాణాం పద్మాభర్తుః ప్రియసహచరైః ప్రత్యనీకా విశ్వరో వా । వాయుర్భూత్వా సపది యది వా మార్గముల్లఙ్ఘ్య దుర్గం కాలే కాలే వరవరమునే కాఙ్క్షయే వీక్షితుం త్వాం) என்றும் மநோரதித்துக்கொண்டிருக்கிறதசையிலே திருமுகமவரக்கண்டு அத்யாதரத்துடனேப்ரத்யுத்கதராய்ச்சென்றுஸேவித்து திருமுகத்தை சிரஸாவஹித்து, (దేవస్త్వాం కిం స్వయమిహ భవన్ సౌమ్యజామాతృయోగిన్ భోగీశత్వద్విముఖమహీవాంభూయసా పశ్యసి త్వం । అర్థాదార్యాదపి చ వచసామంజసా సన్నివేశాదావిర్భ్యాస్తైరమలమతిభిర్నిత్యమారాధనీయం । ఆశాసానైర్వ్వరవరమునే నిత్యముక్తైరలభ్యం మర్త్యైర్లబ్ధుం ప్రభవతి కథం మద్విధః శ్రీముఖస్తే । సారాసారప్రమితిరహితస్సర్వధా శాసనస్తే సద్యశ్శ్రీమన్ కపికరకృతాం మాలికామేవకుర్యాం) என்று அதிலே ஈடுபட்டு அப்போதே புறப்பட்டுக் கோயிலைக்குறித்து அத்யபிநிவேசத்துடனே எழுந்தருளி மடத்திலேபுகுந்து, வழியிலுண்டான விடாயும் நெடுநாளாக ஸேவியாத விடாயுந்தீர *ஸுதாநிதிமிவஸ்வைரஸ்வீக்ர்தோதக்ரவிக்ரஹத்தைக்கண்டுகளித்து வரவரமுநியோகீவர்யருடைய ஸ்ரீபாதபத்மங்களை தம்நெஞ்சிலும் கண்ணிலும் ஒற்றிக்கொண்டுஸேவித்து, (பொன்னிதனிற் குளிர்நகரந்தனிற்புகுதப்பெற்றோம் பொருவருஞ்சீர் நம்பெருமாள் பதம் புகழப்பெற்றோம்-மன்னியசீர் மணவாளமாமுனிவனென்னை யன் வாழ்ந்திருக்கும்மடந்தனில் வந்திருக்கப்பெற்றோம் - *சென்னிதனிலவனடியார் பதஞ்சூடப்பெற்றோந் திருமலை யாழ்வாரிலென்றுஞ் சிறந்திருக்கப்பெற்றோம் - பின்னையவர்க் கந்தரங்கப் பொருளும் பெற்றோம் பொருந்திவத்திலின்பமிங்கே பெருகவும்பெற்றோமே) என்றும், (மண்ணுலவாழவந்தோன் மணவாளமுனிவன்வன்மை - கண்ணருள் வாழ்வுக்கிலக்காக நல்வாழ்வங் கண்டவன்றன் - திண்ணாரடிகளிற் குற்றேவல்செய்து திரியவுநான் - எண்ணிருக்க நடுவே நமக்குவந் தெய்தியதே) என்றுஞ்சொல்லுகிறபடியே தாம் பெற்றபேற்றினுடைய கௌரவத்தை நாடோறும் அநுஸந்தித்துக்கொண்டு, (అన్తస్స్వాన్తం కమపి మధురం మన్త్రమావర్తయన్తీం ముద్యద్బాష్పస్తిమితనయనామష్ఠితాశేషవృత్తిం । వ్యాఖ్యాగర్భం వరవరమునే త్వన్ముఖం వీక్షమాణాం కోన్తేవాసీ క్వచిదణురసౌ సంసదన్తాముపాస్తామ్) என்னும்படியான திவ்யகோஷ்டியைஸேவித்துக்கொண்டு வரவரமுனிப்ர்த்யர்களுடனே வாழ்ந்துகொண்டு எழுந்தருளியிருக்க, அவர்

களில் வரந்தரும் பெருமாள்பிள்ளை, ஜீயருடைய திருக்கைச் சொம்பும் திருவொற்றுவாடையுங்கொண்டு ஸேவிப்பாராயிருக்கிற நாளிலே அவர்க்குத்திருக் குழற்கற்றைவளர்ந்திருக்க இதேதென்று ஜீயர்கேட்டருள தத்தேதுவை விண்ணப்பஞ்செய்ய "இன்று திருமுடிவிளக்கும்" என்று நியமித்தருள அவரும் அப்படியே திருமுடிவிளக்குவித்துக்கொண்டு எழுந்தருள, அவர்க்கு, குமாரர் திருவவதரித்தாரென்றும் பத்துநாளாயிற்றென்றும் அன்று ஆள்வர இத்தைக்கேட்டு இதென்னஸர்வஜ்ஞதை என்று எல்லாரும விஸ்மயப்பட்டார்கள். அவரும் பின்பு தம்முடையகுமாரருக்கு நாயனாரென்று ஜீயர் திருநாமஞசாத்தியருளினார். இப்படி பலரும் திருநாமம்சாத்தினார்கள் ; ஆகையாலே (வந்துபரந்ததெங்கு மிந்தத்திருநாமமிங்கு) என்கிறபடியே இதுவும் அழகிய மணவாளன் கோத்ரமென்னும்படி எங்கும் விஸ்த்ர்தமாயிற்று.

அக்காலத்திலே கந்தாடையண்ணன் ஜீயர் விரும்பியமுதுசெய்தருளும் கீரைக்கறியமுதுநடத்திக்கொண்டுபோந்து ஸர்வகாலத்திலும் தத்பதாஶ்ரயராய் ஸேவித்துக்கொண்டு போருகிறவர், தம்முடைய எம்பெருமான் தளிகைக்கு உபாதாநத்ரவ்யத்தாலே நடத்திக்கொண்டுசெல்ல அவர்க்குண்டான த்ர்ஷ்டஸங்கோசத்தைத் திருவுள்ளம்பற்றி தமக்குவந்ததிருமுன்காணிக்கையையும் அவர்க்குப்ரஸாதித்தருளி இப்படித்ர்ஷ்டாத்ர்ஷ்டங்களிரண்டும் ஸ்வாதீநமாக நடத்திக்கொண்டுபோருகிறநல்லடிக்காலத்திலே, அப்பிள்ளைகந்தாடையண்ணன் முதலானோர், செப்பமுடன்சேர்ந்த திரடன்னை, யெப்பொழுதும், பார்த்தாலெமக்கிழவாம் பட்டர்பிரான்றூதர் தனைச், சூர்தீரக்காணுமையால) என்று அவர்விச்லேஷம் ஸஹியாமலருளிச்செய்து போகவிட்டருள ; அவரும் அத்தைக்கண்டு (அப்பிள்ளானுங் கந்தாடையண்ணனு மருள்புரிந்த சடகோபதாதரும் - ஒப்பிலாத சிற்றூனுங்கூடியே யோங்குவண்மை மணவாள யோகிதாள் - செப்பிவாழ்ந்துகளித்துத் தென்கோயிலிற் சிறந்த வண்மையைச் சேவித்திராமலே - தப்பியோடித் தவித்துத்திரிவது தலையெழுத்துத் தப்பாதுகாணுமே) என்றுதம்முடைய இழவையும் அநுஸந்தித்துக்கொண்டு அப்போதே புறப்பட்டுவந்து திருவடிகளிலே ஸேவித்துக்கொண்டிருந்தார்.

பின்பு (வாதுசெயவென்று சிலவாதியர்கள்வந்து மனமுறிய நிற்பரொருபால் வாழியெனவேபெரியசாபமறவென்று சிலர் வந்தனைகள் செய்வரொருபால், போதுமினிவாதமுனபாதமருளென்று புகழ்ந்து சிலர் நிற்பரொருபால் பொங்கிவருமெங்கள்வினை மங்கவருளென்று சிலர்போற்றி செய்நு நிற்பரொருபால் - ஈதிவைகிடக்கமறை நூற்றமிழ்தெரிந்து சிலரேதமற வாழ்வரொருபா லேதமறவாதுலர்கள் பேதையர்கடாமயங்கி நிலைறந்திறைஞ்சி நிற்பரொருபால்-மாதகவினுலுலக மேழையுமளிக்கவென வந்தவெதிராசனடிசேர் - மாமுனிவர்தீபமருளாளர் மணவாளமுனி மன்னு

மடம் வாழும்வளமே) என்று இப்படி பாகவதஸம்ருத்தியுடனே வாழ்ந்தருளாநிற்காநிற்க; (తతఃకదాచిదాహూయ తమేనంమునిపుఙ్గవం । సత్కృతం సాధుసత్కృత్యచ రణాబ్జసమర్పణాత్ ॥ దర్శయన్ దుర్గ్రహాన్ద్రాన్ ద్రావిడోపనిషద్గతాన్ । సన్నిధావేనిషీదేతి శశాసఘురశాసనః । మహాన్ప్రసాదఇత్యస్య శాసనంశిరసావహన్ । తథైవతత్రవ్యాఖ్యాతుం తత్ర ణాదుపచక్రమే । శ్రీమతిశ్రీపతిస్స్వామిమణ్డపేమహతిస్వయం । తత్వాన్తస్య ప్రబన్ధస్య వ్యక్తైస్తైస్తై ఎవర్ణితం। శతవైరిముఖైశ్శృణ్వన్ కేశికైర్దివ్యదర్శనైః। అథదివ్యమునేస్తస్యమహిమానమమానుషం। అనుభూయేమమాబాలగోపాల మఖిలోజనః । అమన్యతపరంధన్య మ ద్యానంతత్రవిక్షిపన్) என்கிறபடியே பரீதாபிவருஷத்தில் திருப்பவித்ரத் திருநாளிலே (కృపయాపరయానరఙ్గా ణ్మహిమానంమహతాంప్రకాశయన్ । గురుచేస్వయమేవచేతసా వరయోగిప్రవరస్యశిష్యతాం) என்று ஸ்ரீரங்கநாயகரான பெருமாள் தம்முடைய பரமக்ருபையாலே ஜீயருடைய மஹிமையைப் பெரியோர்களுக்கெல்லாம் ப்ரகாசிப்பிப்பதாக ச்ரேஷ்ட்டரானஜீயருக்கு சிஷ்யராகுகையை, (పితరం రోచయామాస తథాదశరథం నృపం) (பிதரம்ரோசயாமாஸ ததாதஸரதம்ந்ருபம்) என்று பெருமாள் சக்ரவர்த்தியைபிதாவாக ருசித்தாப்போலே இங்கும் தாமே திருவுள்ளத்திலே ருசித்தருளினார்.

அநந்தரம், (శ్రోతుంద్రావిడవేదభూరివివృతిం సౌమ్యోపయన్తుర్మునే రుత్కణ్ఠాస్తిమమైనమానయతతస్త్వాగ్రాచ్ఛ్రయన్భూపం।ఆవిశ్యార్చకమూచివానితిముదాసశ్శేషలోకాన్విభో రఙ్గీవత్సరమేకమేవమశృణోద్వ్యక్తంయథోక్తంక్రమాత్) என்று ஸ்ரீரங்கநாதர் "நமக்கு அழகிய மணவாளமாமுனியிடத்திலே த்ராவிடவேதமான நாலாயிரம் திவ்யப்ரபந்த வ்யாக்யாநங்களைக் கேட்டருள அபிநிவேசமாயிருக்கிறது, ஆகையாலே இந்த மணவாளமாமுனியை கருடமண்டபமான பெரிய திருமண்டபத்திலே அழைப்பியும்" என்று அர்ச்சகரிடத்திலே ஆவிஷ்டராய் ஸந்தோஷத்துடனே அருளிச்செய்து தாமுமங்கே யெழுந்தருளி, ஸமஸ்தஜநங்களோடுங் கூடியிருந்து ஒரு ஸம்வத்ஸரம் இப்படியே வ்யக்தமாக ஜீயரருளிச் செய்த க்ரமத்திலே கேட்டருளினார்.

அதெங்ஙனேயென்னில்; (మజ్గళాయతనేరఙ్గే రమ్యజామాతృయోగిరాట్। యుగపద్రావిడామ్నాయ వ్యాఖ్యానధ్యానశాతుకీ) என்றும், (దేశాన్తరగతోవాపి ద్వీపాన్తరగతోపివా। శ్రీరఙ్గాభిముఖోభూత్వా ప్రణిపత్యనసీదతి) என்றும் தேசாந்தரங்களிலே யிருந்தானேயாகிலும் திருவரங்கன் திருப்பதியை திக்கு நோக்கிதண்டன்ஸமர்ப்பித்தமாத்ரத்திலே ஸகலதுரிதநிவர்த்தகமாய் ஸகலமங்கள ப்ரதமான கோயிலிலே எழுந்தருளியிருந்து *ஸ்ரீரங்கமங்களமணியான பெருமாள் ஸந்நிதியிலே ஸ்வாமி அழகிய மணவாளமாமுனி, த்ராவிடவேதமான திருவாய்மொழிக்கு, ஆறாயிரப்படி, ஒன்பதினாயிரப்படி, பன்னீராயிரப்படி, இருபத்துநாலாயிரப்படி, முப்பத்தாறாயிரப்படிகளையும், திருவாய்மொழிக்கு அங்கோபாங்கங்களானமற்ற அருளிச்செயல்வ்யாக்யாநங்களையும் ஒருக்

கால் காலக்ஷேபம் நடத்தத்திருவுள்ளமா யெழுந்தருளியிருந்தார். பெருமா ளும், திருப்பவித்ரோத்ஸவ்யாஜமாகப் புறப்பட்டருளி திருப்பவித்ரமண்ட பத்திலேயே றியருளிபேரோலக்கமா யெழுந்தருளியிருந்து, *அணியரங்கன் திருமுற்றத்தடியார், ஆசார்யபுருஷர்கள், ஜீயர்கள், ஸ்ரீவைஷ்ணவர் கள், அனைத்துக்கொத்துக்கும் அருள்பாடுஸாதித்தருளி, ஜீயரும் முத லிகளுடனேகூடப் பெருமாளை மங்களாசாஸனம்பண்ணிக்கொண்டெழுந்த ருளியிருக்க, (பலரடியார்முன்பருளிய) என்கிறபடியே ஜீயரை தனித்து அருள்பாடிட்டருளி ஸ்ரீசடகோபனையும் ப்ரஸாதித்தருளி, "நாளை முத லாக நம்முடைய பெரியதிருமண்டபத்திலே * பெரியவண்குருகூர்நகர் நம்பி யானஆழ்வாருடைய திருவாய்மொழிப்பொருளை ஈடுமுப்பத்தாறுயிரத் துடனேநடத்தும்" என்று ; இப்படி அருளுவதே ! என்று மிகவும் ஹர்ஷ டராய் பிற்றைநாள் தொடங்குவதாக வெழுந்தருளி *இன்பம்பயக்கவிருக்க * நிலத்தேவர்குழுவிலே பாட்டுக்கேட்பிப்பதாக நாநகோஷ்டியைப் பாரித் தாபபோலவும், இராமாயணத்தைக் கேட்பதாக (పార్థివాంశ్చ నరవ్యాఘ్రః పణ్డితాన్నైగమాం స్తథా) (பார்த்திவாம்ஶ்சநரவ்யாக்ரபண்டிதாந்நைகமாம்ஸ்ததா) என்றுதொடங்கி, பரிகணிதரான அனைவரையும் திரட்டினப்போலவும், பெருமாள் நாய்ச்சிமாருடனேகூட திவ்யஸிம்ஹாஸநத்திலேயேறியருளி திவ்யகோஷ்ட்டியைப் பாரித்து அந்த கோஷ்ட்ட்யந்தர்ப்பூதராய் சேர்த் தியை அநுபவிக்கிற *அயர்வறுமமரர்களான திருவநந்தாழ்வான், பெரிய திருவடி, ஸேநாபதியாழ்வான் என்கிற நித்யஸூரிகளோடும், * வைகுந்த த்து முனிவராயிருந்துள்ள நம்மாழ்வார் தொடக்கமான ஆழ்வார்கள் பதின்மரோடும், நாதமுநிய திவரப்ரப்ருதிகளான ஆசார்யர்களனைவரோ டும், ஸ்ரீரங்கநாராயணஜீயர், திருமலைநந்தபட்டர் தொடக்கமானரோடும், * அணியரங்கன் திருமுற்றத்தடியார்தங்களின்பமிகு பெருங்குழுவோடுங் கூட பேரோலக்கமாக வெழுந்தருளியிருந்து ஈடுதொடக்கமான ஐந்து வ்யாக்க்யாநத்துடனே திருவாய்மொழி தொடங்கி அவ்வவ்விடங்களிலே இது ச்ருதிப்ரக்ரியை, இது ஸ்ரீ பாஷ்யப்ரக்ரியை, இது ச்ருதப்ரகாசிகாப் ரக்ரியை, இது கீதாபாஷ்யப்ரக்ரியை, இது ஸ்ரீபாஞ்சராத்ரப்ரக்ரியை, இது ஸ்ரீராமாயணப்ரக்ரியை, இது மஹாபாரதப்ரக்ரியை, இது ஸ்ரீவிஷ்ணு புராணப்ரக்ரியை, இது மஹாபாகவதப்ரக்ரியை, இது பதார்த்தம், இது வாக்யார்த்தம், இது மஹாவாக்யார்த்தம், இது ஸமபிவ்யாஹாரார்த்தம், இது த்வந்யர்த்தம், இது வ்யங்க்யார்த்தம், இது ப்ரதிகோட்யர்த்தம், இது ஶப்தரசம், இது அர்த்தரஸம், இது பாவரஸம், இது ஒண்பொருள், இது உட்பொருள் என்று இவர் இபபடி அருளிச் செய்யும்படியையும், (రఙ్గీవత్సరమేక మేవమశృణో ద్వ్య_క్తంయథా క్రంక్రమాత్) (ரங்கீவத்ஸரமேக மேவமஶ்ர் ணோத்வ்யக்தம்யதோக்தம்க்ரமாத்) என்கிறபடியே இவர் தொடங்கி நடத் தியருளும்படியையும் திருச்செவிசாத்தியருளி அங்கே இப்படியே ஒரு

ஸ௦வத்ஸரம் நடந்து பின்பு சாத்தியருளும்போது,முன்புபோலே,பரா௦குச பரகால பட்டநாதயதிவராதிகளுடனே கூட எழுந்தருளி திருச்செவிசாத்தியருளி ஜீயரைமிகவும் உபலாளித்தருளி திவ்யப்ரபந்த தத்வ்யாக்யாநவைபவங்களையும் ஜீயருடையவைபவங்களையும் ப்ரகாசஞ்செய்தருள வேணுமென்றும், தாம் அநுஷ்டித்துக்காட்டவேணுமென்றும் திருவுள்ளமாய், (సమాప్తా(గన్థస్య(ప్రథితవివిధోపాయనచయేపరంసజ్జీభూతేవరవరమునేరక్ష్ణో)సవిధే। హారాద్యాలఃకశ్చిత్కు(తఇతి నిరస్తోప్యుపగతః జగౌరఙ్గేశాఖ్యః పరిణతచతుర్హాయనఇదం) என்கிறபடியே ஜீயருக்கு ஆசார்யஸம்பாவனையாகச் சில த்ரவ்யங்களும், ஏலாலவங்க கர்ப்பூராதிகளும், திருப்பரிவட்டங்களும், அடைக்காயும், பலங்களும் அமர்த்தி நிற்க; அழகிய மணவாளபட்டரான அர்ச்சககுமாரராய் ஐந்தாம் வயதாய் ரங்கநாயகமென்கிற திருநாமத்தையுடையரான சிறுபிள்ளை, ஸம்பாவனைத் தட்டுக்களுக்கும் பெருமாளுக்கும் நடுவே வந்துநிற்க, அப்பாலே விடவிடத்திரும்பிவந்துநிற்க, இதுவெறுமனன்று ஒரு ஆச்சர்யமுண்டாக வேணுமென்று எல்லாரும் பார்த்திருந்து சிறுபிள்ளையை நீர்நிற்கிற கார்யமேதென்ன அவர்; கையைக் கூப்பிக்கொண்டு பயப்படாமல் "ஸ்ரீசைலேசதயாபாத்ரம்" என்ன, பின்னுமேதென்ன, "தீபக்த்யாதிகுணார்ணவம்" என்ன, இன்னஞ்சொல்லுமென்ன "யதீந்த்ரப்ரவண௦வந்தே ரம்யஜாமாதர௦முநிம்" என்றுசொல்லி ஓடிப்போக, பெரியோர்களெல்லாரும் ஆச்சர்யப்பட்டு இந்தச்லோகத்தைப் பட்டோலைகொண்டு மஞ்சட்காப்புச் சாத்தித் திருவடிகளிலே ஸமர்ப்பித்து, பின்பு அத்தைத் தட்டிலேவைத்து ரங்கநாயகத்தை உபலாளித்தழைத்து இன்னமேதென்ன நானொன்று மறியேனென்ன முன்பு சொன்னத்தை இன்னஞ் சொல்லுமென்ன நானொன்று மறியேனென்று ஓடிவிட,பின்பு அந்தப்பிள்ளைக்கு அருள்பாடுஸாதித்து நீர் வாழித்திருநாம மோதுமென்ன அவர் தமிழிலே அதிசதுரராகையாலே, (வாழிதிருவாய்மொழிப் பிள்ளை மாதகவால் - வாழு மணவாளமாமுனிவன்-வாழியவன் - மாறன்றிருவாய்மொழிப் பொருளை மாநிலத்தோர் - தேறும்படியுரைக்குஞ்சீர்) என்றும், (செய்யதாமரைத் தாளிணைவாழியே சேலைவாழிதிருநாபிவாழியே - துய்யமார்பும் புரிநூலும்வாழியே சுந்தரத்திருத்தோளிணைவாழியே - கையுமேந்தியமுக்கோலும் வாழியே கருணைபொங்கிய கண்ணிணைவாழியே - பொய்யிலாதமணவாளமாமுனி புந்திவாழ்புகழ் வாழிவாழியே)என்றும்,(அடியார்கள்வாழவரங்கநகர்வாழச் - சடகோபன் றண்டமிழ்நூல்வாழக் - கடல்சூழ்ந்த - மன்னுலகம்வாழ மணவாளமாமுனியே - இன்னமொரு நூற்றாண்டிரும்) என்றும் ஓத; பெருமாளுகந்தருளி அவரை க்ருபைபண்ணியருளி வரிசைகளும் ஸாதித்து உடனே திருமலை பெருமாள் கோயில்தொடக்கமான திருப்பதிகளுக்கெல்லாம் ஸ்ரீஸேநைமுதலியாருடைய ஸ்ரீமுகமாக அநுஸந்தாந காலங்கள்தோறும் ஜீயர்விஷயமாகப் பெருமாளருளிச் செய்ததனியன்; (శ్రీశైలేశదయాపాత్రం ధీభక్త్యాదిగుణా

ర్ణవం। యతీన్ద్రప్రవణం వన్దే రమ్యజామాతరం మునిం) (ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம் - யதீந்த்ரப்ரவணம்வந்தே ரம்யஜாமாதரம்முநிம்) என்றநுஸந்தித்துத் தொடங்கவும், ப்ரபந்தம்சாற்றி, (வாழிதிருவாய் மொழிப்பிள்ளை) என்று தொடங்கி, (மணவாளமாமுனியே இன்னமொருநூற்றாண்டிரும்) என்று அநுஸந்தித்துத் தலைக்கட்டவும் என்று அனுப்பிவிட்டருளி ஜீயருக்கு ஸம்பாவனையுஞ் செய்தருளி வரிசையுடன் மடத்திற்கு அநுப்பி யருளியிருக்க, பின்னும் ஒரு அதிசயம் ப்ரவர்த்தமாயிற்று;—

ஈடுசாற்றுமுறை யுத்ஸவம்ஸேவிக்க அனைவரும் கோயிலே சேர்ந்தவளவிலே அண்ணன் திருமாளிகையிலே ஜ்ஞாநாதிகைகளான அம்மையார்களும் அண்ணன் தேவிகளும் சேரவிருந்து கொண்டு ஜீயருடைய வைபவத்தை அநுஸந்தித்திருக்கிறவளவிலே ஒரு ப்ரஹ்மசாரிவந்து ஒரு சீட்டை அண்ணன்தேவிகள் கையிலேகொடுத்து இத்தை அண்ணன் திருக்கையிலே ஸமர்ப்பியுமென்ன; அவர் அத்தை வாங்கி வாசிப்பித்து ஒருச்லோகமிருந்தபடியே! என்று உகந்து ப்ரஹ்மசாரியைக்கேட்டு ஆதரிக்கப்பார்க்க அங்கேஅவரைக் காணுதொழிய, பின்பு எல்லாரும் எழுந்திருந்து எங்கும் தேடிக்காணப்பெறாமையாலே அங்குள்ளவர்கள் பகவல்லீலையென்று அறுதியிட, அவர்களிலேசிலர் பெரிய திருமண்டபத்திலேசென்றுமுறியை ஸமர்ப்பித்துச் செய்தியைவிண்ணப்பஞ்செய்யக்கேட்டு, (హటాత్తస్మిన్ క్షణే కశ్చిత్ వర్ణీ సంప్రాప్య పత్రికాం। వాధూలవరదాచార్యధర్మపత్న్యై కరే దదౌ)(ஹடாத்தஸ்மிந் க்ஷணே கச்சித்வர்ணீஸம்ப்ராப்யபத்ரிகாம்-வாதூல வரதாசார்யதர்மபத்ந்யை கரே ததௌ) என்று அநுஸந்தித்து அனைவரும் ஆச்சர்யப்பட்டு முறியில் திருவெழுத்துப்பட்ட ஸ்ரீசைலேசதயாபாத்ரத்தைக்கண்டு வித்தராய், தனியனின் அர்த்தத்தைத் திருமந்த்ரமாக யோஜித்து அநுஸந்தித்து, வானமாமலை ராமாநுஜஜீயர், கந்தாடை யண்ணன், அப்பா, அண்ணா முதலான பெரியோர்கள், தங்கள் தங்களுடைய பக்த்யதிசயத்தாலே தனியனை வேணுமென்று அருளிச்செய்த ச்லோகங்களையும் இதிலே அந்தர்ப்பவிப்பித்தருளி இது எல்லார்க்கும் உத்தாரகமென்று உகந்திருக்க, பெருமாள் ஆழ்வார்களுக்கு அருள்பாடிட்டு அனுப்பியருளி உள்ளே பெரிய பெருமாள் சேர்த்தியிலே எழுந்தருளினவாறே கோயில்பரிகரமனைத்துக் கொத்தும் ஸகலவரிசைகளுடனே ஜீயரை எழுந்தருளப்பண்ணி வைத்துக்கொண்டு திருவீதிப்ரதக்ஷிணமாக மடத்திலே எழுந்தருளப் பண்ணிவைத்தார்கள். பின்பு கோயில் பரிகரமனைத்துக்கொத்தும் ஸந்நிதியிலே சென்றவாறே அவர்களைப் பெருமாள் உகந்தருளி, ஜீயர் முப்பத்தாறாயிரப் பெருக்கரென்னுமது கண்டோமென்று மிகவும் க்ருபைபண்ணியருளினார். இதற்கு முதலிகளும் "வாழி திருவாய்மொழிப் பிள்ளை" என்று தொடங்கி, மங்களாசாஸநம்பண்ணியும், (அடிசூடி யென்றலைமே லருமறையாய்ந்து

- முடிசூடியபெருமான் வரயோகி முனங்குரவோர் - படிசூடு முப்பத்தா ிரமும்பணித்தரங்க - ரடிசூடி விட்டதற்கோ வெந்தாயென்ப துன்னை யுமே) என்று ஆபாலகோபால ரெல்லாரும் தத்வைபவத்திலே யீடுபட்டு தத்தேகபரராய் தந்நாமகுணங்களை அநுஸந்தித்துக்கொண்டு ஹ்ருஷ்டரா யிருந்தார்கள்.

இத்தனியன்றனக்கு இன்னம் அதிசயமுண்டு, அதெங்ஙனே யென் னில் * தென்னனுயர் பொருப்பிலழகரும், தெய்வவடமலையப்பனும் இதற்கு ப்ரவர்த்தகரா யிருப்பர்கள்;

முன்பு முமுக்ஷுவாய் தேசாந்தரங்களிலே திரிவாரொருவருடைய உஜ்ஜீவநார்த்தமாக ஸர்வேச்வரன், ஸ்வப்நத்திலே இந்தச்லோகத்தை உபதேசிக்க அவரும் அத்தைத் தஞ்சமாக நினைத்திருந்து பின்பொருக் கால் இந்தச்லோகம் நடையாடுகிற தேசமான திருமலையிலே திருப்புரட் டாசித் திருநாள் ஸேவிக்கும்போது திருவேங்கட முடையான் அவரை க்ருபைபண்ணி அர்ச்சகமுகேந கையைப்பிடித்திட்டுவந்து திருவோலக் கத்திலே ஸ்ரீவைஷ்ணவர்கள் நடுவேயிட்டு அவர்கள் அருளிச்செய்வதைக் கேள் என்றும் அவர்களை, இவன் பணிப்பதைக் கேளுங்கோள் என்றும் நியமிக்க, ஸேனைமுதலியார் திருமுகப்படியே நடத்துகிற தனியனை பெரிய கேள்விஜீயர்தொடங்க, அத்தைக்கேட்டு விலக்ஷணராகையாலே தெண் டனிட்டு, ஒருவிண்ணப்பம், கேட்டருளவேணுமென்று விண்ணப்பஞ் செய்ய அவரும் வித்தராய் எனக்கு ஸ்வப்நலப்தமாய் அதுதன்னை நான் தஞ்சமாக நினைத்திருக்கிற ச்லோகத்தையே தேவரீர்களும் அநுஸந்தித் தது, இதென்ன ஆப்சர்ய மென்ன; ஆகில் நீர் அந்த ச்லோகத்தைச் சொல்லிக்காணீரென்ன, அவர், ஸ்ரீசைலேசதயாபாத்ரத்தைச்சொல்ல, அத்தைக்கேட்டு எல்லாரும் மிகவு முகந்தருளித் தங்களுக்கு வந்தவற்றை யெல்லாம் ஸப்ரகாரமாக அருளிச்செய்யக் கேட்டு அதிப்ரவணராய்ப் புறப் பட்டுக் கோயிலிலே சென்று ஜீயர்திருவடிகளிலே வேரற்றமரம்போலே விழுந்துகிடக்க; பரமதயாளுவான ஜீயரும், அவரைத் திருக்கைகளாலே ஸ்பர்சித்து, நீயார், வந்தகார்ய மேதென்று கேட்டருள; நான் முமுக்ஷு வாய் தீர்த்தயாத்ராபரனாய்த் திரிவானொருத்தனென்று தொடங்கிச் சில வற்றையும், ஸ்வப்நவர்த்தாந்தத்தையும், தனியனையும் விண்ணப்பஞ் செய்து திருவடிகளைத் தன்தலையிலே நற்றரிக்க வைத்துக்கொண்டு, திரு வேங்கடமுடையான் என்னை விசேஷ கடாக்ஷஞ் செய்தருளி, இத்தனி யனைத் திருவோலக்கத்திலே ஸாதித்து தேவரீர்திருவடிகளை ஸேவிக்க விட்டாரென்று விண்ணப்பஞ்செய்து நிற்க, இப்படி பகவத்கடாக்ஷ பாத்ர பூதனோ நீயென்று மிகவும் உகந்தருளி, இனி உனக்கு வேண்டுவதென் னென்ன; மோக்ஷோபாயமாய் மந்த்ரரூபமான தனியனையும், மந்த்ர பதா சார்ய ரூபியான அப்பனையும், மந்த்ரப்ரதிபாத்ய தேவதையான தேவரீர்

திருவடிகளையும் த்ர்டமாகப்பற்றி முக்தனானேன். இனி வேண்டுவதுண்டோ வென்றுகையைத்தட்டிச்சிரித்துக்கூத்தாடிநிற்க; ஜீயரும், (మన్త్రే తద్దేవతాయాఞ్చ తథామన్త్రప్రదేగురౌ। త్రిషుభక్తిస్సదాకార్యాసాహిప్రథమసాధనమ్)(மந்த்ரேதத்தேவதாயாஞ்ச ததாமந்த்ரப்ரதேகுரௌ- த்ரிஷுபக்திஸ்ஸதாகார்யாஸாஹிப்ரதமஸாதநம்)என்னுமது இவருக்குண்டாயிருக்கிறதே!, அதிகாரபூர்த்திக்கு வேண்டுவதும் இதுவேயன்றோவென்று உகந்தருளி தாபாதி பஂசஸஂஸ்காரங்களையும் ஸாதித்து, "திருவேங்கடராமாநுஜதாஸர்" என்றுதாஸ்யநாமமும் ஸாதித்து க்ர்பைபண்ணியருளினார். பெருமாளும், "வாரீர் திருவேங்கடராமாநுஜதாஸரே, உமக்கு மேல்வீடு தந்தோம்" என்று ஸ்ரீசடகோபன்ஸாதிக்க உடனே அவர் திருநாட்டுக்கெழுந்தருளினார். எல்லாரும், அவருக்குப் பெரியோர்களுக்குச்செய்யுங்க்ரியைகளெல்லாம் செய்து நிறைவேற்றி ஜீயருடைய வைபவத்தைஎல்லாரும் கொண்டாடிக்கொண்டு எழுந்தருளியிருந்தார்கள்.

அழகர் திருமலையிலே ஸமஸ்தவிதகைங்கர்ய நிரதராய் ஜீயர்ஸம்பந்தமுடையரா யிருக்கிற ஜீயர், தம்முடைய ஆசார்யருடைய ஆத்மகுணங்களையும் விக்ரஹ குணங்களையும் சிந்தித்து அநுஸந்தித்துக்கொண்டு ப்ரதக்ஷிணமாக வெழுந்தருளி தமக்கு நித்யாநுஸந்தேயமாக ஜீயர் தமக்கு ஒரு தனியன் பெரியோர்களிடத்திநின்றுமுண்டாகவேணுமென்று எண்ணிக்கொண்டு ஸேனைமுதலியார்ஸந்நிதியிலே தண்டன்ஸமர்ப்பித்து நிற்க; அந்த அவஸரத்திலே அர்ச்சகரும், ஸேனை முதலியாருக்குத் திருவாராதநங் கண்டருளப்பண்ணி திருவந்திக்காப்புக் கண்டருளப்பண்ணி திருமுகமண்டலத்தை ஸேவித்து, (శ్రీశైలసున్దరేశస్య కైఙ్కర్యనిరతో యతిః। అమన్యతగురో స్స్వస్య పద్యసమ్భవమార్యతః)(ஸ்ரீசைலஸுந்தரேசஸ்ய கைங்கர்ய நிரதோயதிஃ- அமந்யதகுரோஸ்ஸ்வஸ்யபத்யஸம்பவமார்யதஃ) என்று விண்ணப்பஞ்செய்துகொண்டு பெருமாள் ஸந்நிதியிலே அமுது செய்தருளப் பண்ணச்செல்ல, அவ்வளவிலே அழகிய மணவாள மாமுனியினுடைய திருவடிகள் ஸம்பந்தமுடைய சேனைமுதலியார், தெற்குத் திருப்பதிகளெல்லாம் மங்களாசாஸநம்பண்ணி அழகரைத் திருவடித்தொழ வெழுந்தருள, ஸ்ரீகார்யம் பார்க்கிற ஜீயரும் அவரைக்கண்டு மிகவும் ஆதரித்துப் பெருமாளை மங்களாசரஸநம் பண்ண வெழுந்தருளப் பண்ணிவைத்துக்கொண்டு திருமுன்பேசெல்ல, அழகரும் அவரை மிகவும் க்ர்பைபண்ணியருளி தீர்த்தம் முதலான வரிசைகள் ப்ரஸாதித்து ஸ்ரீசடகோபனையும் அவர் திருமுடியிலே நற்றரிக்க வைத்தருளி, (జిహ్వాగ్రేతవవక్ష్యామిస్థిత్వావదసుపావనమ్। పద్యంత్వదార్యవిషయంమునేరస్యమమాజ్ఞయా) (ஜிஹ்வாக்ரேதவவக்ஷ்யாமி ஸ்த்தித்வாவதஸுபாவநம்-பத்யஂத்வதார்யவிஷயஂமுநேரஸ்யமமாஜ்ஞயா) என்று அர்ச்சகமுகேந நியமிக்க, ஸேனை முதலியாரும், (ధన్యోస్మీతిచసేనేశ దేశికోవదతస్స్వయం। వహన్ శిరసిదేవస్య పాదౌ పరమపావనౌ)(தந்யோஸ்மீதிசஸேநேஶ தேஶிகோவததஸ்ஸ்வயம் - வஹந்ஶிரஸிதேவஸ்ய பாதௌபரமபாவநௌ) என்கிற

படியே ஸ்ரீசடகோபனையும் திருமுடியிலே தரித்துக்கொண்டு (ஸ்ரீசைலேஶதயாபாத்ரம்) என்னும் இத்தனியனை யருளிச்செய்ய, உடனே அர்ச்சகரும் தெரியப்பட்டு ஜீயருக்கு ஸாதித்தருளினர். பின்பு சேனைமுதலியாருக்கும் அர்ச்சகருக்கும் இந்தச்லோகம் தெரியாதொழிய, ஜீயர் மடமேசென்று ச்லோக மருளிச்செய்யவேணுமென்றுகேட்க, அருளிச்செய்த தேவரீர் கேட்கவேணுமோவென்ன; எனக்கொன்றும் தெரியவில்லை, இது ஸுந்தரராஜர் தானே ஸுந்தரஜாமாத்ருமுநிவிஷயமாக அருளிச்செய்தாரென்று மூன்று திருநாமமும்கூடி தெரிவிப்பை கடாக்ஷித்துக் கொண்டுவித்தராய்த் தங்களுக்குத் தஞ்சமாகக்கொண்டருள, ஸேனைமுதலியாரும் அதிப்ரீதியுடனே இச்செய்தியைக் கோயிலிலே பெரியோர்களுக்கெல்லாம் தெரிவிக்கவேணுமென்று அதித்வரையாக எழுந்தருளி கோஷ்டியிலே ஜீயரைத் தண்டன்ஸமர்ப்பித்து இந்தவைபவங்களையெல்லாம் விண்ணப்பஞ்செய்ய ;எல்லாரும் மிகவு முகந்தருளி இப்படி திருவேங்கடமுடையானும் அழகரும் உகந்தருளின இத்தனியனைப்ரகாசிப்பித்தருளுகிறதே ! இதென்ன வைபவந்தானென்று போரவித்தராயருளினர்கள்.

வானமாமலை ராமாநுஜஜீயர் மிகவும் ஹர்ஷபரவசராய் ஸ்தப்த்தராயிருக்க, ஜீயரும் திருக்கைகளாலே அவரைத்தட்டி உம்முடைய ஹர்ஷத்துக்குப் போக்குவீடாக வார்த்தையருளிச் செய்யலாகாதோவென்ன, அவரும் இரண்டு முலைக்காம்பிலும் மாறாதே பெருகுகிறபாலை ஆராவமுதமாகப் பருகுவார் நாமன்றோவென்று கந்தாடை யண்ணனைப்பார்த்தருளிச் செய்ய அண்ணனும் அந்தப்பாலிலும் இந்த உக்திரஸம் அதிசயமா யிருக்கிறதே! என்ன; ப்ரதிவாதி பயங்கரரும் உத்தரோத்தரம்அதிசயமா யிருக்கிறதென்று அண்ணனைக் கொண்டாட, அப்பிள்ளை இருந்து, மந்த்ரோத்தரமான பூர்வவாக்யத்திலும் உத்தரவாக்ய மதிசயித்திருக்கு மென்ன, பட்டர்பிரான்ஜீயர், த்வயத்திலும் சடகோபத்வயம் அதிசயிதமாய், த்வயோத்தரம்போலே சடகோபத்வயத்தி லுத்தரம் அதிசயமாய், அது தன்னிலும் ராமாநுஜத்வயோத்தரம் அதிஶயமாய், தந்நிஷ்ட்டரான நம்ஜீயரைத் தொழுவதாயிருக்கிற இந்தத் தனியனே ச்ரேஷ்ட்டமென்று ஒருவருக்கொருவர் இட்டுக்கொண்டு சாபிரஸோக்திகள் அருளிச்செய்து கொண்டு எழுந்தருளி யிருந்தார்கள்.

அநந்தரம் ஒருநாள் ப்ராதஃகாலத்திலே திருமலையாழ்வாரிலே எழுந்தருளியிருந்து திவ்யதேசங்களை த்யானித்து அங்கே ஆஸக்தமான திருவுள்ளத்தையுடையராய் பாரவஶ்யத்தையு மடைந்து அந்த திவ்யதேசங்களையே வாய்புலத்திக்கொண்டு இரண்டுயாமபர்யந்தமெழுந்தருளியிருந்து, ''காலம்போகிறதே!'' என்று, ( சிந்திக்கும்திகைக்கும்தேறும் கைகூப்பும்) (வெருவாதாள்வாய்வெருவி) (அருவிசோர்வேங்கடம் நீர்மலையென்று வாய்வெருவி) (இவளிராப்பகல்வாய்வெரீஇ) என்கிறபடியே வாய்புலத்திக்கொ

ண்டு தளர்ந்துசாய்ந்தருள, காலக்ஷேபத்திற்கு சிலஆசார்யர்க ளெழுந்தருளி பின்னுஞ் சில ஆசார்யர்கள் எழுந்தருள வேண்டியிருக்கிற அவஸரத்திலே, (అవ్యాజబన్ధో ర్గరుడధ్వజస్య దివ్యాశ్చ్రితాన్యాయతనానిభూయః । ధ్యాయం స్తమోనాశకరాణి మోహవశా త్తదేవప్రహరద్వయంసః) (ధ్యాత్వా దివ్యాశ్చ్రితార్చావిలసితనిలయాన్యాత్తరాణ్యాశువిష్ణ స్తత్సేవాయ త్తచిత్తే ప్రణిగదతిముహుర్నామతస్తానితాని। తూష్ణీంభూతేసబాష్పం సపులకనిచయం రమ్యజామాతృయోగి న్యశ్యేత్యాసమ్యసర్వే కిమిదమితి పరామార్తిమాపుర్మహాన్తః) என்கிறபடியே ஜீயர் (கிளரொளியிளமைகெடுவதன்முன்னம் - வளரொளி மாயோன் மருவியகோயில் - வளரிளம்பொழில்சூழ் மாலிருஞ்சோலைத் - தளர்விலராகிச் சார்வதுசதிரே) என்றநுஸந்தித்திருந்து, வடதேசத்திலே திருவயோத்யை முதலான திவ்யதேசங்களை த்யானித்து, "ஸேவிக்கப்பெற்றிலோமே!" என்று திருபாதிக பந்துவாய் ஆர்ப்ரிதரக்ஷணத்திற்குக் கொடிகட்டியிருக்கிற திவ்யதேசங்களை த்யானித்து முசித்திருக்க; அஷ்டதிக்கஜங்கள் முதலான ஆசார்யர்கள் இதென்னென்பதென்று கலங்கி அநேகவிதமாக ஸமாதாநம்விண்ணப்பஞ் செய்யச்செய்தேயும் திருக்கண்களைத்திறவாமல் அச்ருக்களோடேபுளகிதகாத்ரராய் ஜீயரெழுந்தருளியிருக்கக்கண்டு கிட்டவந்து, உற்றுஸேவித்து இதென்னவென்று பெரியோர்களெல்லாரும் பரவஶராய் ஆர்த்தியையடைந்து விட்டார்கள்; அவ்வளவிலே சரமபர்வநிஷ்டராய் திருவடிகளுக்கு அந்தரங்கராய், (கண்டியூரரங்கம் மெய்யம் கச்சிபேர்மல்லை) என்கிறபடியே திவ்யதேசங்களில் மிகுந்த கைங்கர்யத்தைப் பண்ணுகிறராமாநுஜதாஸர், (సమేత్యరామానుజదాసనామావ్యజిజ్ఞప త్తంవరయోగివర్యం। నిషేవ్యసర్వాణిపదానివిష్ణోః సమర్పయిష్యామితథైవతద్వః) என்கிறபடியே அவர் ஜீயர்ஸந்நிதியிலேசென்று, அடியேன் ராமாநுஜதாஸன், தேவரீர் திருவடிகளைமுன்னிட்டுக்கொண்டு வடதேசத்திலுள்ள திருப்பதிகளெல்லாம் தேவரீர்மங்களாசாஸநமாகத் தொழுதுவந்து அந்தப்படியேஸமர்ப்பிக்கிறேன் என்றும், (ఆసేతోరాబదర్యాశ్రమవరనిలయా దాచపూర్వాపరాబ్ధేః క్షేత్రాణిశ్రీధరస్య ద్రుహిణశరజిదాద్యర్చితానిప్రణమ్య। ప్రాప్స్యేరామానుజోలం భవదనుజయతశ్చింతయం స్త్వత్ పదావిత్యస్మిన్ విజ్ఞాపయిత్వా ప్రణమతిబుబుధే సౌమ్యజామాతృయోగీ) என்றும் ராமாநுஜதாஸர் விண்ணப்பம்செய்து தண்டன்ஸமர்பித்தவுடனே ஜீயர்தெளிந்து திருக்கண்மலர்களைத் திறந்து, "வாரீர்ராமாநுஜதாஸரே" என்றருளிச்செய்ய திக்கஜங்கள் முதலானோரெல்லாரும் தேறி அவரை மிகவும் கொண்டாடியிருக்க, ஜீயரும் எழுந்திருந்து, "நெடும்போதாயிற்றே, காலக்ஷேப மின்றிக்கே யொழிந்ததே!" என்று அருளிச்செய்ய; தேவரீர் திவ்யதேசங்களில் அநுபவபரவசராயெழுந்தருளியிருக்க ஸேவித்தநுபவித்துக்கொண்டிருக்கமாட்டாமல் கலங்கி பயப்பட்டுவிட்டோமென்றுவிண்ணப்பஞ்செய்துநிற்க, ராமாநுஜதாஸரே நீர்சொன்னது கூடவற்றோவென்றருளிச்செய்ய அவரும் அப்பொழுதே பயணமாகபுறப்பட்டு நிற்கத்திருவடி

௬௯ இளையாழ்வார்பிள்ளை ஜீயர் பாதுகைகளை கங்கையாடுவித்தது.

ஸம்பந்தராயிருக்கிற குமாண்டூர் இளையாழ்வார்பிள்ளையை அழைத்தருளி, ராமாநுஜதாஸரைக்கூட்டிக்கொண்டு திருப்பதிகளைஸேவித்து வருகிறீரோவென்று கேட்டருள அவரும்பாக்யமாயிற்றென்று விண்ணப்பஞ்செய்துநிற்க (తతో న్వయము జ్జ్వలము త్తరీయం వితీర్య రామానుజదాసమాశు । సహస్వపాదావనినిత్యయోగ మహోజ్జ్వలాయాశకలత్మ్యజేన) என்கிறபடியே ஜீயர் திருவடிக்குத் திருவடி நிலைகள் கொண்டு ஸதாஸேவிக்கிற மஹாதிசயத்தையுடைய இளையாழ்வார் பிள்ளையோடே ராமாநுஜதாஸரைத் தம்முடைய திருவடி நிலைகளை சீக்ரமாக ப்ரஸாதித்துப் பயணமாக நியமித்தருளினார். சக்ரவர்த்தித் திருமகனார் ஸ்ரீபரதாழ்வானுக்குத் திருவடி நிலைகளைசாதிக்க இளையபெருமாளுக்கு இல்லாதொழிந்ததே ! அப்போது ; பரதாழ்வானைப்போலே இளையபெருமாள் திருநாமத்தையுடைய இவரும் ஜீயருடைய திருவடி நிலைகளை லபித்து லோகத்தில் ஜனங்களுக்கு ஸந்தோஷோத்ஸவத்தைச் செய்தருளினார். இப்படி அவருக்குத் திரு உத்தரீயம் ஸாதித்தருளினப் போலே இவருக்கு திருவடிநிலைகள். இப்படி தமக்கு ப்ரதிநிதியாகத் திருவடிநிலைகளை ஸாதித்தருளியிருக்க, இளையாழ்வாரும் (ధనంమదీయం తవపాదపఙ్కజం) (தநம்மதீயம்தவபாதபங்கஜம்) என்கிறபடியே மஹாதநத்தை லபித்தருளி (మదీయమూర్ధా నమలఙ్కరిష్యతి) (மதீயமூர்த்தா நமலங்கரிஷ்யதி ) என்றுதிருமுடியிலேநற்றரிக்கவைத்துக்கொண்டுநிர்மர்யாதாஹர்ஷயுக்தராயருளினார். ராமாநுஜதாஸரும், ( பெருமானரையிற் பீதகவண்ணவாடைகொண்டு என்னைவாட்டணியவீசினீர்) என்று மிகவுமுகந்தார்.

இப்படி அவரும் திருவடிநிலைகளையே திருவாராதநமாகவெழுந்தருளப்பண்ணிவைத்துக்கொண்டு அதித்வரையாக கங்காதீரத்திலே எழுந்தருளி திருவடிநிலைகளுக்கு நன்றாக சாஸ்த்ரப்ரகாரம் நெடும்போது கங்கையில் திருமஞ்சநம்பண்ணி ஜீயர் நீராடியருளுகிறதாக அத்யவஸித்து அத்தீர்த்தத்திலே தாங்களும் நீராடி பின்பு அங்குண்டான இடங்களெல்லாம் ஸேவித்து, (క్రమేణతీర్థానిశరీరభాజాం పాపాపహాన్యూర్జితసౌఖ్యదాని । పరిక్రమన్తావతిథింద్వశోస్తౌ వినిన్యతుశ్శ్రీబదరీనివాసం) (విచిత్రాద్దేహసమ్పత్తిరీశ్వరాయనివేదితుమ్ ) என்கிறபடியே பகவதர்த்தமாக தேஹபரிக்ரஹம் பண்ணினவர்களுக்கு ஸ்வஸம்பந்தத்தாலே ஸமஸ்தப்ரதிபந்தகங்களையும் போக்கி ஊர்ஜிதமான மஹாபுருஷார்த்தத்தை ஸாதிக்கிற திவ்யதேசங்களை இரண்டு திருநாமங்களும் க்ரமேண ஸஞ்சரித்து ஸேவித்து பதரிகாச்ரம நாராயணனைத் தங்களுடைய திருக்கண் மலர்களுக்கு ஸர்வப்ரியதர்சநமாக அடைவித்தார்கள். இப்படி நரநாராயணப்பெருமாளை மங்களாசாஸநம் பண்ணப்புக்கவளவிலே, (అయోధ్యరామానుజదాసనామా సదా ముదా పూజయతి ప్రసన్నః। పశినిజశ్రీకులశేఖరస్సన్ హరింబదర్యాశ్రమవాసినన్తమ్) என்று அயோத்த்யை ராமாநுஜதாஸரென்கிற திருநாமத்தையுடையவர், குலசேகரராய்க்கொண்டு ஸமஸ்தஜநஸம்மதராய் நல்லநடையை யுடையராய்க்கொண்டு ஸமஸ்த

துரிதஹரரான வதரியாச்சிரமப்பெருமாளை எக்காலத்திலும் ஸந்தோஷத்துடனே ஆராதித்துக்கொண்டிருந்தார். அநந்தரம், (సలక్ష్మణం వీక్ష్య పవిత్రరూపం సమేత్య రామానుజదాస మేనమ్। సమర్చయిత్వా వివిధోపచారై స్సదర్శయామాస రమాసహాయం) என்று ராமாநுஜய்யங்கார், பரமபாவநராயிருக்கிற இவரைக் கண்டு ஸேவித்து நரநாராயணப்பெருமாளுக்கு விசேஷித்து தளிகைக்கு வரிசையாக ஸமர்ப்பித்துத் தளிகை அமுது செய்தருளப்பண்ணுவித்து உடனே அநுஸந்தாநம் நடக்கவேணுமென்ன; (వరయోగివరాగతౌ స చైతౌ వరనారాయణసన్నిధౌ పురస్తాత్। ద్రవిడోపనిషన్మహాప్రబన్ధప్రథమోదాహరణే న్యయుఙ్క్త విద్వాన్) என்கிறபடியே அழகியமணவாளமாமுனியினுடைய ஸந்நிதியினின்றும் அவருடைய மர்யாதையாக எழுந்தருளின இவர்களை நாராயணப்பெருமாள் திருவோலக்கத்திலே அருளிச்செயலாகிற மஹாப்ரபந்தாநுஸந்தாநத்தொடக்கத்திலே விஜ்ஞாபிக்க; இளையாழ்வார்பிள்ளையும், (తథా విధిజ్ఞో విధివత్ ప్రసాదా ద్వరోపయన్తు ర్గురిగద్గధామ్నా । నివేదితం పద్యవరం త్రిఖణ్డం పఠన్ స గాం ద్రావిడవేదమేషః) என்கிறபடியே ராமாநுஜருடைய நியமநத்தின்படியே தொடங்குகிறவராய்க் கொண்டு, "ஸ்ரீசைலேசதயாபாத்ரம்" என்கிறதனியனை முந்துற அநுஸந்தித்து மற்றத்தனியன்களையும் க்ரமப்ரகாரம் அநுஸந்தித்து ப்ரபந்தாநுஸந்தானஞ் செய்தருளினார். அதுகண்டு ராமாநுஜஐயங்கார் முதலானவர்கள் விஸ்மிதராயிருக்க, (జజ్ఞే ఽథ మునా స్వప్న నివేదితం హి యత్ కథం బదర్యాశ్రమనిత్యవాసినా। ప్రకాశమన్త్రార్థమిదం మురద్విషేత్యయోధ్య రామానుజ ఆవిశిష్టయే) என்று ஸ்ரீபதரிகாச்ரமப் பெருமாளாலே நமக்கு ஸ்வப்நத்திலே அருளிச்செய்யப்பட்டதன்றோ இது என்று இவர்களாலே ப்ரகாசமாய் மந்த்ரார்த்தமானத்தை யறிந்து இது க்ர்ஷ்ணலீலையென்று ராமாநுஜஅய்யங்கார் மிகவும் ஆஶ்சர்யப்பட்டுப் பின்பு இந்த ச்லோகம் தேவரீருக்கு வந்தபடி யென்னென்ன; கோயிலிலும் பெருமாள், (ఆచినోతి హి శాస్త్రార్థాన్) (ஆசிநோதி ஹிஶாஸ்த்ரார்த்தான்) என்கிறபடியே இந்தஸ்த்தலத்திலே நரநாராயணரூபேண பெரிய திருமந்த்ரத்தை வெளியிட்டருளினப்போலே, அந்த மந்த்ரார்த்தமான திவ்யப்ரபந்த தத்வ்யாக்யாநங்களை லோகோபகாரமாக ப்ரவர்த்திப்பிக்கத் திருவுள்ளமாய், (యథోచితం శేష ఇతీరితే) (யதோசிதம்சேஷ இதீரிதே) என்கிறபடியே அசேஷசேஷவ்ர்த்தியிலும் அந்வயித்திருக்கிற திருவநந்தாழ்வானை ஜீயராக வவதரிக்கச்சொல்லி நியோகிக்க, அவரும் தத்கைங்கர்யமாய் அவதரித்து திவ்யப்ரபந்த தத்வ்யாக்யாநங்களை அதிசதுரராய் நடத்திக்கொண்டு போர, அவருடைய வைபவங்களை ப்ரகாசஞ்செய்தருளத் திருவுள்ளமாய் ஜீயரிடத்தில் தாம் ஈடுகேட்டருள நியமிக்க, ஜீயரும் இதுவுமொரு கைங்கர்யமென்று தொடங்கி நடத்திச்சாற்றுகிற ஸமயத்திலே ஆசார்ய ஸம்பாவநைகாலத்திலே, அர்ச்சக புத்ரராய் ரங்கநாயகமென்கிற பெயருடையரான அஞ்சுவயஸ்ஸுள்ளவர்மேலே பெருமாள் ஆவேசித்து அருளிச்செய்தபடியையும், அந்தப்பிள்ளையைக்கொண்டு

வாழித்திருநாம மவதரிப்பித்தபடியையும், ப்ரபந்தாநுஸந்தாநகாலத்திலே ஆதியிலே இத்தனியனையும் ப்ரபந்தம் சாற்றினால் இந்த வாழித் திருநாமத்தையும் அநுஸந்திக்கும்படி திருமலைபெருமாள் கோயில் தொடக்கமான திவ்யதேசங்களிலும் மற்றுமெங்கும் நடக்கும்படிக்கு, (శ్రీపన్నగాధీశ మునేఃపద్యం రఙ్గేశభాషితం । అష్టోత్తరశతస్థానేష్వనుసన్ధానమాచరేత్ । ఇత్యాజ్ఞాపత్రికావిష్వక్సేనేన ప్రతిపాదితా । తదారభ్యమహద్భిశ్చపఠ్యతేసన్నిధేఃపురా) என்கிறபடியே ஸ்ரீஸேனைமுதலியார் திருமுகமும்வரவிடநடக்கிறபடியையும், திருவேங்கடமுடையான் தீர்த்தயாத்ரா ப்ராஹ்மணனுக்கு; (ఉపదిష్టం మయా స్వప్నే దివ్యం పద్యమిదం శుభం। వరయోగినమాశ్రిత్యభవతఃస్యాత్పరంపదం) என்று ஸ்வப்நத்திலேஇந்தத்தனியனையும் ப்ரஸாதித்துவைத்துச் சில நாள்களுக்குப்பின்பு அந்த ப்ராஹ்மணனை ஜீயர்திருவடிகளிலே ஆச்ரயிக்கும்படிக்கு, (ఇత్యుక్త్వాతంవృషాద్రీశో శ్రీపదాద్రేణుమేవచ । దత్వాఽశుప్రేషయామాస గచ్ఛయోగివరంశుచిమ్) என்கிறபடியே அவருக்கு ஸ்ரீசடகோபனையும் ஸ்ரீபாதரேணுவையும் ப்ரஸாதித்தருளினபடியையும், அவரும் ஆச்ரயித்துத் திருவடிகளைச் சார்ந்தபடியையும், திருமாலிருஞ்சோலையழகர்ஜீயர்திருவடிகள்ஸம்பந்தமுடையஸேனைமுதலியார்முகமாக இந்தத்தனியனை அருளிச்செய்தபடியையும், பகவத்தியாயிருக்க ஈஷத்ப்பேத முண்டாயிருந்ததேயாகிலும் அர்த்தைக்யப்ராதாந்யேந ஸேனைமுதலியார் ஆசார்யகோடிப்ரவிஷ்டராகையாலே அவர் திருமுகத்தின்படியே எங்கு மநுஸந்தித்துப் போருகிறபடியையும், ப்ரஹ்மசாரி சிறுமுறிகொடுத்ததையும், ஸர்வவர்த்தாந்தங்களையும் அருளிச்செய்யக்கேட்டு வித்தராய் தமக்கு இந்தத் தனியன்வந்தபடியை அருளிச்செயத்தொடங்கினார்.

—(தனிய னவதரித்த வருஷம் மாஸம் முதலியன.)—

அதில் முந்துற இத்தனியனும் வாழித்திருநாமமும் அவதரித்த வருஷம் மாஸம் தேதிகளைக்கேட்டருள இளையாழ்வார்பிள்ளையும்;-(நல்ல தோர்பரீதாபி வருடந்தன்னில் நலமானவாவணியின் முப்பத்தொன்றில் - சொல்லரிய சோதியுடன் விளங்கு வெள்ளித் தொலகிழமை வளர்பக்கநாலாநாளில் - செல்வமிகு பெரிய திருமண்டபத்திற செழுந்திருவாய்மொழிப் பொருளைச் செப்புமென்று - வல்லியுறை மணவாள ரரங்கர்நங்கண் மணவாளமாமுனிக்கு வழங்கினாரே) என்றும், (ஆனந்தவருடத்திற் கீழ்மையாண்டி லழகான வானிதனின் மூலநாளில - பாநுவாரங்கொண்ட பகலிற் செய்ய பௌரணையினாளிட்டுப் பொருந்திவைத்தே - ஆனந்தமயமான மண்டபத்தி லழகாகமணவாள ரீடுசாற்ற - வானவரும் கீரிட்ட வழக்கே யென்ன மணவாளமாமுனிகள்களித்திட்டாரே) என்றும் அருளிச்செய்ய; அன்று ராத்ரி ஸ்வப்நத்திலே பதர்யாச்ரம நாராயணன் தமக்குப் பாடமாமளவும் ஸாதித்து ஸாயம்ப்ராதம் அநுஸந்தாந காலத்திலே அநுஸந்தித்து ப்ரபந்தாநுஸந்தாநஞ் செய்யென்று நியமித்தபடியைச் சொல்லிக்

கொண்டு விஸ்மிதராய் ஆனந்தபரவசராயிருக்க, இளையாழ்வார்பிள்ளை முதலானாரும்பகவத்ப்ரஸாதலப்த்தமன்றோ இத்தனியனென்று பரஸ்பரம் கொண்டாடிக்கொண்டு மிகவும் ஈடுபட்டிருக்க, ராமாநுஜ ஐயங்கார் க்ரமத்திலேதேறி அழகியமணவாளமாமுனியினுடைய வைபவங்களை யெல்லாம் அடியேனுக்கு இரங்கி ப்ரஸாதித்தருளவேணுமென்று திருவடிகளைப்பிடித்து ப்ரார்த்திக்க, இளையாழ்வார்பிள்ளையும் ஓமெறிந்து மடத்திலேயாகிறதென்ன; திருப்பாவைஅநுஸந்தானத்தையும் நிறைவேற்றிச் சாற்றி தீர்த்தப்ரஸாதங்களும் விநியோகமாய் இளையாழ்வார்பிள்ளைக்கு வரிசைகளும் ஸாதித்தனுப்பியருள, அவரும் ராமாநுஜஐயங்கார் மடத்திலே யெழுந்தருளி அவருக்கு அழகியமணவாளமாமுனியுடைய வைபவங்களையெல்லாம் ஸாதித்து உகப்பித்தருளினார். இராமாநுஜஐயங்காரும் வைபவங்களையெல்லாங் கேட்டு விஸ்மிதராய்ஜீயரைக்கண்டு ஸேவிக்கவேணுமென்று அத்யபிநிவிஷ்டராயிருக்க, அவருடைய மநஸ்ஸையறிந்து ராமாநுஜதாஸர் பதரிகாச்ரமம் முதலான திவ்யதேசங்களில் கைங்கர்யங்களுக்கு தேவரீர் நியமித்தபடிக்கு சிலநாளைக்குஸேவித்துக்கொண்டிருந்து ஜீயர்திருவடிகளைஸேவிக்க விடைகொள்ளுகிறேன் என்றுசொல்லி, தேவரீர் இளையாழ்வார் பிள்ளையுடனே கோயிலுக்கு எழுந்தருளவென்று அருளிச்செய்ய, ராமாநுஜஐயங்காரும் மிகவும் ப்ரியப்பட்டு அவரை பஹுமானமாக உபலாளித்தருளி ஜீயர்திருவடிநிலைகளைவரிசையுடன் எழுந்தருளப்பண்ணிவைத்துக்கொண்டு இளையாழ்வார்பிள்ளையும் ராமாநுஜஅய்யங்காரும் திருமலையிலேசென்று திருவேங்கட முடையானையும் ஸேவிக்க நிற்க, அப்பனும் இவர்களை மிகவும் க்ருபை பண்ணி யருளி அயோத்யை ராமானுஜ அய்யங்காருக்குச் சிலகைங்கர்யங்களை நியமிக்க அவரும் அதற்கு அங்கே நிற்க வேண்டுகையாலும் ஜீயரைத்தம்முடைய மநோரதத்தின்படி ஸேவிக்கப்பெறுமையாலும் ப்ரீத்யப்ரீதிஸமராயிருந்தார்.

இனிக் கோயில்வர்த்தாந்தம் ; - திருவேங்கடமுடையான் ராமாநுஜ அய்யங்காருக்கு கைங்கர்யம்நியமித்தருளினதிநத்திலே ப்ராதக்காலத்திலே திருமலையாழ்வாரிலே பகவத்விஷயகாலக்ஷேபம் நடத்தியருள, அற்றைக்கு * ஒழுவில்காலத்தறுவாய் நடந்துசெல்ல * எந்தைதந்தைதந்தைக்கு, (ஒழிவில்காலமெல்லாமுடனாய் மன்னிவழுவிலா வடிமை செய்யவேண்டும்) என்று-உக்திமாத்ரமாயொழிவதே ! என்று மிகவுந்தளர்ந்து பரவசராய்ப் படிப்பதும் இருப்பதும் நிற்பதும் புலம்புவதுமாயிருக்க, அற்றைக்கு முதல்நாள்ராத்ரி, ப்ரதிவாதிபயங்கரமண்ணாஸ்வப்நத்திலே திருவேங்கட ஜீயரென்னும் திருநாமத்தையுடைத்தாயிருக்கிற ஒரு ஏகாங்கிசென்று வாரீர் ஸ்ரீவைஷ்ணவதாஸரே, நாளை ஒழிவில்காலவ்யாக்யாநாவஸரத்திலே ஜீயர் கைங்கர்யருசிவிவசராயிருப்பர், அவருக்கு சேஷசைலத்திலே சேஷாம்சமாயிருப்பாரொரு பரமபாகவதரைக்கொண்டு சேஷாவதாரரான

ஜீயர்மனோரதப்படியே கைங்கர்யங் கொண்டருளுகிறோமென்று நீர் விண்ணப்பஞ்செய்யும், என்று இப்படிகண்டு எழுந்திருந்து வித்தராய் ஈதொரு ஸ்வப்நவைபவமிருந்தபடியே ! என்றுகொண்டு நித்யகர்மாநுஷ்ட்டானங்களை நிறைவேற்றி மடத்திலே எழுந்தருளித் திருமலையாழ்வாரிலே ஜீயரை தண்டன் ஸமர்ப்பித்து எழுந்தருளியிருக்கிற ப்ரகாரத்தைக்கண்டு, தம்முடைய ஸ்வப்நமிருந்த ஸ்த்திதியையும் சேர்ந்திருக்கிறபடியையுங் கண்டு ஹர்ஷ்டராய் இந்தஸ்வப்நவ்ர்த்தாந்தத்தை ஜீயர் திருவுள்ளத்தில் படித்த ஜீயரும் இதுவுமொரு க்ர்பையே ! என்று ஹர்ஷ்டராய் அண்ணவை உபலாளித்தருளி புநஃபுநஃ கேட்டருளி திக்கஜங்களை இது எப்படியிருக்கிறதென்று கேட்டருள; அவரும் இந்தவேளை திருமலையிலே ஒரு அத்ப்புதமுண்டாயிருக்கவேணும், அத்தை அறியும்படிக்கு ஒருவரை நியமித்தருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய; அவ்வளவிலே அழகரண்ணன் எழுந்திருந்து தண்டன் ஸமர்ப்பித்து, "அடியேன் தேவரீர் திருவடிகளை முன்னிட்டுக்கொண்டு திருமலைக்குவிடைகொண்டு அப்பனையும் ஸேவித்து செய்தியையும் அறிந்துகொண்டு விடைகொள்ளுகிறேன்" என்று விண்ணப்பஞ்செய்ய, ஜீயரும் போரஉகந்தருளி அனுப்பியருள, அவரும் அதித்வரையாகத் திருமலையிலேசென்று பெருமாளை ஸேவிக்க, உடனே இளையாழ்வார் பிள்ளையைக் கண்டு அந்யோந்யவந்தநபரராய்க்கொண்டு குசலப்ரச்நம்பண்ணிக்கொண்டு அயோத்த்யை ராமாநுஜ அய்யங்கார் பாடேசெல்ல, அழகரண்ணனுக்கு பஹுமாநம்பண்ணி ப்ரதிபத்திபண்ண, ஜீயருடையவைபவங்களை புநஃபுநஃகேட்டுத் திருவேங்கடமுடையான் தமக்குகைங்கர்யங்கள் நியமித்தருளினபடியையும் தாம் ஜீயர்திருவடிகளிலே ஆச்ரயிக்கவேணுமென்கிற த்வரையையும் அருளிச்செய்ய, அழகரண்ணனும், ஜீயருக்கு உகப்புகைங்கர்யம்செய்து போருகையாய் நிற்குமென்றும், ப்ரதிவாதி பயங்கருடைய ஸ்வப்ந வ்ர்த்தாந்தத்தையு மருளிச்செய்ய ; ராமாநுஜ அய்யங்காரும் ஆகில் தந்யனேன், ஜீயர்நியமநப்படிக்கு அவருடைய திருக்கைகளாலே யதாசக்தி செய்து போருகிறேனென்று சொல்லி இளையாழ்வார்பிள்ளையையும் அழகரண்ணனையும் கோயிலுக்கு அனுப்பிவிட ; அவர்களும் உடனே புறப்பட்டெழுந்தருளி ஜீயரை தெண்டன்ஸமர்ப்பித்து வடக்கில் எம்பெருமான்களுடைய அபயஹஸ்த ப்ரஸாதங்களையும் ஸமர்ப்பித்துத் திருவடிநிலைகளையும் திருவடிகளிலே சேர்க்க, ஜீயரும் இளையாழ்வார்பிள்ளையை பஹுமாநாக்காகக் கண்டோமே என்று மிகவும் க்ர்பைபண்ணியருளி அழகரண்ணனையும் போரக்ர்பை செய்தருளி ப்ரதிவாதி பயங்கர ரண்ணவை உம்முடைய ஸ்வப்நபலம் வ்யாப்தமாயிற்று, உமக்காகவன்றோ திருவேங்கடமுடையான் க்ர்பைபண்ணியருளினரென்று உகப்புத்தோன்ற அடிக்கடி அருளிச்செய்துகொண்டு இளையாழ்வார்பிள்ளையை அடிக்கடி திருக்கைகளாலே தழுவி உபலா

ளித்து, ''நெடுந்தூரஞ் சென்றுவந்தீரே'' என்று அருளிச்செய்துகொண்டு ராமாநுஜ அய்யங்கார் ஸ்வரூபஸ்வபாவங்களை உகந்தருளிக் கேட்டுக் கொண்டு, நம்பெருமாள், ஸ்ரீபதரிகாச்ரமப் பெருமாள், திருநாராயணப் பெருமாள், திருவேங்கடமுடையான், அழகர் இவர்களுடைய ஐககண்ட் யத்தையும் அருளிச்செய்து கொண்டு எழுந்தருளி யிருந்தார். இந்த அர்த்தங்களையெல்லாம் வரவரமுனி வைபவவிஜய மென்கிற ப்ரபந்தத் தாலே கந்தாடை யப்பன் விஸ்தாரமாக அருளிச்செய்ய ஜீயர் திருச்செவி சாத்தியருளினார்.

பின்பொருநாள், திருக்காவேரியினின்றும் எழுந்தருளிச்செய்தே ஜீய ருக்கு இளையாழ்வார்பிள்ளை திருக்கைஸமர்ப்பித்துக்கொண்டு வரும் போது, ப்ரஸங்காத் அயோத்யை ராமாநுஜ அய்யங்காருடைய மநோ ரதத்தை விண்ணப்பஞ்செய்யக் கேட்டருளி, ''திருவேங்கடமுடையானை இன்ன மொருக்கால் ஸேவிக்கையு முண்டாம், அப்போது அவர்மநோ ரதப்படியே ஆகிறது, இப்போது அவர் கைங்கர்ய ஸ்ரீயுடனே யிருக்கக் கடவர்'' என்றருளிச் செய்ய, பின்னும் இராமாநுஜ அய்யங்கார் இந்தத் திருவடிநிலைகளைத் தமக்குத் திருவாராதநமாக ப்ரார்த்தித்துக்கொண்டி ருக்கிறுரென்று விண்ணப்பஞ்செய்ய அப்படியே ஆகிறதென்று மடத்திலே யெழுந்தருளினவுடனே தைவாதீநமாகத் திருவடி ஸம்பந்த முடையரான சில வைஷ்ணவர்கள் திருமலைக்கு விடைகொண்டு திருப்புரட்டாசித் திரு நாள் ஸேவித்து விடைகொள்ளுகிறோமென்று தண்டன் ஸமர்ப்பித்து நிற்க, போரஉகந்தருளி, (புணர்த்தகையினரா யடியேனுக்கும் போற்று மினோ) என்று திருமலையைநோக்கித் தொழுது இராமாநுஜ அய்யங்கா ருக்குத் திருவடிநிலைகளை ஸாதித்து விடைகொடுத்தருள ; அவர்களும் புறப்பட்டுத் திருமலைக்கு எழுந்தருளினார்கள்.

பின்பொருநாள் கந்தாடையண்ணனை கடாக்ஷித்தருளித் திருவேங் கடமுடையானை மங்களாசாஸநம் பண்ணவேண்டாவோவென்ன ; அப் பிள்ளை, ''காவேரிகடவாத கந்தாடை யண்ணனன்றோ'' என்ன, *அரங் கத்தரவினணையான் வானவர்கள் சந்திசெய்ய நின்றது அங்கேயன்றோ வென்று ஜீயாருளிச்செய்ய ; அண்ணனும் அப்படியே நியமித்தருள வேணுமென்ன, அவரையுங் கூட்டிக்கொண்டு பெருமாள் ஸந்நிதியிலே எழுந்தருளி விடைகொடுப்பித்தருளி உத்தம நம்பியையும் கூடவே ஸேவித்துக் கொண்டு போரும்படி நியமித்தருளி, அநேகம் ஸ்ரீவை ஷ்ணவர்களையும், ஜீயர்களையும், ஏகாங்கிகளையும், சாத்தாத ஸ்ரீவைஷ் ணவர்களையும் கூடப் பயணஞ்செய்தருளி யிருக்கிற வவஸரத்திலே உத்தம நம்பியையும், அண்ணனுக்குத் திருப்பல்லக்கு முதலான வரிசைகளைச் சேர்த்துப் புறப்பட்டருளும்படிக்கு விண்ணப்பம் செய்துகொண்டு நிற்க

அண்ணனும் அவைகளையெல்லாம் நிரோதித்து ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியை ஸேவித்துக்கொண்டு திருமலைக்குப் பெருங்கூட்டத்துடனே செல்லுகிற நமக்கு உசிதமன்றென்று, மாறுவிண்ணப்பஞ் செய்யவொண்ணாத படிக்கு நிஷேதித்துவிட்டுத் திருநாளிலே இரண்டு மூன்று நாளாகிலும் மங்களாசாஸநமாகவேண்டுமென்று அதித்வரையாகப் பயணகதிகளிலே யெழுந்தருளி திருமலையடிவாரத்திலே அடிப்புளியமுகியசிங்கரைத்தொழுது திருமலையேறியருள; அச்செய்தியைத் திருமலையநந்தாழ்வான் கேட்டருளி, பெரியகேள்வி ஜீயர்முதலானோர், மற்ற ஆசார்ய புருஷர்கள், ஸ்தலத்தார் எல்லாருக்கு மறிவிக்க ; அவர்களெல்லாரும் போர உகந்தருளி வெள்ளிக்கிழமைப் புழுகுகாப்பு உத்ஸவத்தை அண்ணன் மங்களாசாஸநஞ் செய்தருள வேணுமென்று ப்ராதக்கால வேளைக்கு நிறுத்தி பெருமாள் திருத்தேரிலே ஏறியருளின வுடனே அனைவரும் வரிசையுடனே அண்ணனை எதிர்கொண்டு எழுந்தருளப்பண்ணுவித்துக்கொண்டுவந்து திருத்தேரிலே பெருமாளை மங்களாசாஸநம் பண்ணுவித்து, பின்பு திருத்தேர் திருவீதி யெழுந்தருள இயல்தொடங்குகிற விடத்திலே அயோத்யை ராமாநுஜ அய்யங்கார் கண்டு பக்திபரவசராய் ஸேவித்து நிற்க அவரையும் க்ருபைபண்ணியருளி எழுந்தருளாநிற்கிறவளவிலே ஸ்ரீபதரிகாச்ரமத்தினின்றும் ராமாநுஜதாஸர் வந்து அசிந்திதமாக அண்ணனெழுந்தருளியிருக்கக் கண்டு மிகவும் வித்தராய்உகந்து திருவடிகளிலே தெண்டன் ஸமர்ப்பிக்க, அண்ணனும் போரஉகந்தருளிஎடுத்தணைத்துக்கொண்டு அத்யந்தம் ஹர்ஷபரவசராய், வாரீர் ராமாநுஜதாஸரே, உம்மைக்காணப் பெற்றோமே!, தேசாந்தரகதனான புத்ரனிடத்தில் பித்ர்ஹ்ருதயம்போலே ஜீயர் திருவுள்ளம் உம்மிடத்தில் ஒருமடைப்பட்டிருக்கிறதென்று அங்குள்ள பெரியோர்களுக்கெல்லாம் இவருடைய ஆசார்ய நிஷ்டையை யருளிச்செய்து திருத்தேர் நிலையிலே எழுந்தருள, பெருமாளும் உள்ளே எழுந்தருளினவுடனே ஸேவாக்ரமத்திலே அப்பனை பாதாதிகேசாந்தமாகவும் கேசாதிபாதாந்தமாகவும் ஸேவித்து பூர்ணமநோரதராய் புழுகுகாப்பு ஸேவையுமாய், தீர்த்தம், சடகோபன், ஸ்ரீபாதரேணு ப்ரஸாதித்தருள ஸ்வீகரித்தருளி, பின்பு அநந்தாழ்வான் திருமாளிகைக்கு எழுந்தருளப்பண்ணுவித்துக்கொண்டு எழுந்தருள, அங்கே யெழுந்தருளினவுடனே அநந்தாழ்வானும் ஸர்வப்ரகாரோபசாரங்களையுஞ் செய்தருள அங்கே எழுந்தருளியிருந்தார். ராமாநுஜதாஸரும் ராமாநுஜ அய்யங்காரைக்கண்டு தேவரீர் திருமுகப்ரகாரம் அவ்விடத்தில் கைங்கர்யங்களெல்லாம் அமர்த்தி, சிறிய ராமாநுஜ அய்யங்காரைக் கற்பித்து அவரைக்கொண்டு ஸகலவித கைங்கர்யங்களும் நடக்கும்படி பண்ணிவந்தேன், தேவரீரைக்காணப்பெற்றேன், அண்ணன் திருவடிகளையும் ஸேவிக்கப்பெற்றேனென்று விண்ணப்பஞ்செய்ய; இராமாநுஜ அய்யங்காரும் போரஉகந்தருளித் தமக்கு ஹிதங்கேட்கத்தொடங்கி

அப்பனைத் திருவடி தொழுதவன்று தொடங்கி இற்றைவரைக்கும் தம்முடைய வ்ருத்தாந்தங்களை யெல்லாம் விண்ணப்பஞ்செய்யக்கேட்டு அவருக்கு ஹிதமருளிச்செய்தபடி; ''ஜீயர் திருவடிகளிலே ஆச்ரயிக்கவில்லையென்கிற குறையைவிடும், அதிலும் அதிசயமாய் ஜீயருக்கு இரட்டிப்பு உகப்பாயிருக்கும், நாளை தீர்த்தம் திருவோணத்திலே அண்ணன் திருவடிகளிலே ஆச்ரயணமாக'' என்று நியமிக்க; ராமாநுஜ அய்யங்காரும் அதிஸந்தோஷத்துடனே அவரையுங்கூட்டிக்கொண்டு அண்ணனைத் தெண்டன் ஸமர்ப்பித்துநின்று இச்செய்தியை விண்ணப்பஞ்செய்ய; அண்ணனும் ஜீயருடைய நியமநமும் அப்படியேயிருக்கு மென்றருளிச்செய்து ராமாநுஜதாஸர்ஹ்ருதயமும் ஜீயர் திருவுள்ளமும் ஏகமாயிருந்தபடியென்னென்று போரவித்தராயிருக்க, அண்ணனும் ஜீயர், தமக்கு ப்ரதிபிம்பமாக அபிமாநித்தருளி திவ்யதேசமங்களாசாஸநம் செய்தபடி அறிவீரேயென்று அருளிச்செய்து வைஷ்ணவேஷ்டி புரஸ்ஸரமாக ராமாநுஜ அய்யங்காருக்கு ஸமாச்ரயணம் ஸாதித்தருளினார். ராமாநுஜதாஸரும் *பண்டைக்குலத்தைத்தவிர்ந்து தாமும் வேதகப்பொன்னானார். பின்பு அண்ணர் இவரையுங்கூட்டிக்கொண்டு கோயிலிலே எழுந்தருளி அப்பனை மங்களாசாஸநஞ் செய்தருளிநிற்க, பெருமாளும் அண்ணனை மிகவும் க்ருபை பண்ணியருளி ராமாநுஜ அய்யங்காருக்கு அண்ணன் திருவடிகள் ஸம்பந்தந்தோன்ற ''கந்தாடை ராமாநுஜ அய்யங்கார்'' என்று அருள்பாடுடன் பட்டுவஸ்த்ரம் ப்ரஸாதித்து இதுவே இவருக்குத் திருநாமமென்று விதித்தருளிச்செய்து உபலாளித்தருளினார். பின்பு பெரியகேள்வி சிறியகேள்வி ஜீயர்கள், ஏகாங்கிகள், ஆசார்யபுருஷர்கள் முதலான ஸ்த்தலத்தாரனைவரும் அண்ணன் ஸந்நிதிக் கெழுந்தருளி சிறப்பு வரிசைகளும் ஸமர்ப்பித்து ஆச்ரயிக்கவேண்டியவர்கள் ஆச்ரயித்து, ஸ்ரீபாததீர்த்தம் ஸ்வீகரித்து அமுதுசெய்யத்தக்கவர்கள் அமுதுசெய்தருளி தளிகைப்ரஸாத ப்ராப்தாக்கள் தளிகைப்ரஸாதம் ஸ்வீகரித்து உபலாளித்தும் க்ருதார்த்தரானார்கள். மற்றைநாள் அண்ணனை அனைவரும் கோயிலுக்கு வரிசையுடனே எழுந்தருளப்பண்ணிக்கொண்டுவந்து மங்களாசாஸநம் பண்ணினவுடனே, *பெருமானரையிற் பீதகவண்ணவாடையான பெரியபீதாம்பரம் முதலான வரிசைகளெல்லாம் ஸாதித்தருளி கந்தாடை ராமாநுஜ அய்யங்காருடைய திருப்பல்லக்கு, சத்ரசாமராதிகள், மற்றஸமர்ப்பணைகளையெல்லாம் பரிக்ரஹிக்கும்படிக்கு அர்ச்சகமுகேந நியமித்தருளி விடைகொடுத்தருள; உடனே புறப்பட்டருளிக் கீழ்த்திருப்பதியிலே யெழுந்தருளி ஸ்ரீகோவிந்தராஜப்பெருமாளையும் மற்றவர்களையும் மங்களாசாஸநஞ்செய்தருளி வரிசைபெற்றுப்புறப்பட்டு எறும்பியிலே எழுந்தருள, அப்பா திருத்தகப்பனார் ஐயைகளும், அழகியமணவாளதாஸராகிய ஸ்ரீவைஷ்ணவர்களுடனே எதிர்கொண்டு ஸேவித்துத் தம்முடைய திருமாளிகையிலே

எழுந்தருளப்பண்ணிவைத்துக்கொண்டு சென்று உபசரித்தருளின வளவிலே; அண்ணன், இளையாழ்வார்பிள்ளை, திருவாழியாழ்வார்பிள்ளை முதலான ஆசார்யர்களும் எம்பெருமானார் ஜீயர், திருவேங்கட ஜீயர் முதலான ஜீயர்களும் முந்தி எழுந்தருளுகிறார்களென்ன; அடியேன் சேரிக்கு எழுந்தருளி க்ருபைபண்ணி யருளாமல் அப்படிச்செய் தருளலாமோ வென்று சுத்தஸத்வமண்ணனைக் கேட்டருள, அண்ணனும், ஐயைகளை வெறுத்துகொண்டு, ஸ்வாமி ஆசார்யரண்ணன், தாம் திருப்பல்லக்கிலே யெழுந்தருளச்செய்தே அவர்கள்கூட எழுந்தருளப்போகாதென்று முன்னே அனுப்பியருளினார், அவர்களும் பத்மாபுரமென்கிற திருமலையடிவாரத்திற் கெழுந்தருளுகிறார்களென்ன; ஆகில் தாம் எழுந்தருளி அவர்களெல்லாரையும் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வரவேணு மென்று சுத்தஸத்வமண்ணன் திருக்கைகளைப் பிடித்துக்கொண்டு பத்மாபுரமே யெழுந்தருள, அவர்களுங்கண்டு அந்யோந்யம் வந்தநபரராய் குசலப்ரச்நம் பண்ணிக்கொண்டு எல்லாரும் எறும்பியிலே ஜயைகள் திருமாளிகையிலே எழுந்தருளி சக்ரவர்த்தித் திருமகன் அதிவிஜ்ரம்பணமாகபூர்ணமாக அமுதுசெய்தருளி ததீயாராதநமும் நடக்க, மற்றைநாள் திருக்கடிகையில் * அக்காரக்கனியையடைந்து மங்களாசாஸநஞ்செய்தருளிப் புறப்பட்டுப் * புட்குழியெம்போரேற்றைத் தொழுது பெருமாள்கோயிலுக்கெழுந்தருள, அங்குள்ள ஆசார்யர்களும் கோயிலனைத்துக்கொத்தும் எதிர்கொண்டு எழுந்தருளப்பண்ணுவித்துக்கொண்டுபோய் பேரருளாளர் பெருந்தேவியாரை ஸேவாக்ரமத்திலே மங்களாசாஸநம் பண்ணுவித்துத் திருமாளிகையிலே எழுந்தருளப்பண்ணிச் சிறப்பும் நிரவதிகமாக ஸமர்ப்பித்து உபசரித்தருளினார்கள். அப்பாச்சியாரண்ணாவும், முதலியாண்டான் தொடங்கியுண்டான தம்முடைய பெரியோர்களையெல்லாம் ஸேவித்தாற்போலிருக்கிறதென்று மிகவும் உகந்தருளி ப்ரதிபத்தியுடனே ஸ்வாமி யண்ணனையும், கூட எழுந்தருளின ஸ்வாமிகளையும், மற்றுமுண்டான பரிஜநங்களையும், தந்திருமாளிகையிலே தானே எழுந்தருளப் பண்ணிவைத்துக்கொண்டு பஹுவாக உபசரித்து உபலாளித்துக்கொண் டெழுந்தருளியிருந்தார். பேரருளாளரும் உகந்தருளி அண்ணனுக்குத் திருநாமம் "ஸ்வாமி" என்று அனைவரும் அநுஸந்திக்கும்படிக்கு ஆஜ்ஞாபித்தருளி அருள்பாடும் ப்ரஸாதித்தருளினார்.

ஸ்வாமி யண்ணனும் பேரருளாளருக்கு மிகவும் உகப்பாக எம்பெருமானார் உகந்து செய்தருளின கைங்கர்யமாய், பின்பு முதலியாண்டானும் அப்படியே செய்தருளி *துன்னு புகழ்க்கந்தாடைத் தோழப்பரும் விரும்பிச்செய்தருளின சாலைக்கிணற்றில் திருமஞ்சந கைங்கர்ய மின்றிக்கே யொழியவொண்ணாதென்று அப்பாச்சியாரண்ணாவுக் கருளிச்செய்து தாமும் புறப்பட்டருளி அருணோதயகாலத்திலே அநுஷ்டாநக்குளத்திலே

நீராடி நித்யகர்மாநுஷ்ட்டாநங்களையும் நிறைவேற்றி, கைங்கர்யருசியை யுடையருமாய் சக்தருமாயெழுந்தருளின ஸ்ரீவைஷ்ணவர்களுடனே சாலைக் கிணற்றருகே எழுந்தருளி குடங்களை சோதித்து திருமஞ்சநம் பூரித்து திருமுடியிலேவைத்துக்கொண்டு ஆளவந்தார் ஸ்தோத்ராநுஸந்தாநத்து டனே தண்ணீரமுது வழிதிருத்துகிற உத்ஸவம்போலே தாம்எழுந்தருளி யிருக்கிற நாளெல்லாம் பேரருளாளருக்குத் திருமஞ்சநகைங்கர்யம் செய் தருளி, பின்பு அப்பாச்சியாரண்ணாவை இந்த கைங்கர்யம் தப்பாமல் நடத் திவாருமென்று நியமித்தருளினார்.

ஒருநாள் கந்தாடை ராமாநுஜஅய்யங்காரைத் திருமலைத்திருப்பதி யில் கைங்கர்யங்களை நிறைவேற்றி மீண்டுவந்து, திருவநந்த ஸரஸ்ஸுக்கு நீராழிமண்டபமும், சுற்றிவர ஸோபாநங்களும், தென்கரையில் உந்நதமான குளக்குறடும், ஸிம்ஹாஸநமும், மண்டபமும், திருமழிசைப்பிரான்கோயில் கைங்கர்யமும், திருவபிஷேகமண்டபத்திற்கு முன்னே பெரியமண்டபமும், திருமலைக்கு ஓலிமுகமண்டபம் முதலான இன்னஞ் சிலமண்டபங்களும், திருமடைப்பள்ளி, வடத்திருக் குளப்படிக்கட்டும், யதாஸம்பவம் திருவா பரணங்களும், திருமஞ்சந காலத்திற்கு மஞ்சள்காப்பு கைங்கர்யம் முத லான அநேக கைங்கர்யமும், திருப்பவளத்திற்கு உகப்பாக அமுதுசெய் தருளும்படிக்குச் சிலகட்டளைகளும் நியமித்து இவைகளெல்லாம் அழகிய மணவாளமாமுனி கைங்கர்யம், அவச்யம் நடத்திவாருமென்றும், அப்பாச் சியாரண்ணாவை நாமாகவே ப்ரதிபத்தி பண்ணிவாருமென்றும் புத்திமதி களை ஸாதித்து திருமலைக்கு அனுப்பியருளினார். பின்பு தாமும் ஸ்ரீபெரும் பூதூர்முதலான திவ்யதேசங்களை மங்களாசாஸநம் பண்ணத் திருவுள்ள மாய், பேரருளாளர்ஸந்நிதியிலே அனுப்புவித்துக்கொள்ள எழுந்தருள, திருவாராதநங் கண்டருளி தத்யோதந அவஸரம் அமுதுசெய்தருளின வுடனே அண்ணனை அருள்பாடிட்டழைத்து, உடுத்துக்களைந்த பீதக வாடை, அபயஹஸ்தங்கள், திருவடிசோடு, களபம், சூடிக்களைந்த * தொடுத்ததுழாய் மலர், ப்ரசாதங்கள் இவையெல்லாம்கட்டி இவை ஜீயரு க்குஎன்று அண்ணன் திருக்கைகளிலே ஸாதித்தருளி அண்ணனுக்குஉகப் புடனே வரிசைகளும் ஸாதித்தருளி விடைகொடுத்தருள, ஸ்வாமி யண் ணனும் திருவையமாளிகையிலே கச்சிக்குவாய்த்தான் திருமண்டபத்திற்கு எதிராக எழுந்தருளியிருந்து ஜீயருடைய வைபவங்களை அநுஸந்திக்க, அதற்கு அநுகுணமாக பேரருளாளர் உபலாளித்தருளி உகந்துகொண் டிருக்க அவ்வளவிலே சிலபெரியோர்கள் நம்முடைய ஸ்வாமிஜீயருக்கு, "அண்ணன் ஜீயர்" என்று பேரருளாளர் திருநாமம் சாத்துவதே! என்று உகந்தருள, வேறுசில பெரியோர்கள் அண்ணனுக்கு, "பெரிய பெரு மாள் ஜீயரண்ணன்" என்று திருநாமம் சாத்தினதுண்டே யென்று, (రామానుజంలక్ష్మణపూర్వజఃచ) (ராமாநுஜம்லக்ஷ்மணபூர்வஜம்ச) என்கிறபடியே ஜீய

ருக்கும் அண்ணனுக்கு முண்டான அந்யோந்யப்ரீத்யதிசயத்தையும், அப்ரதிமவைபவங்களையு மிட்டு பேரருளாளரும், பெரியோர்களும் உகந்தருளி இப்படித் திருநாமங்கள் சாத்தினார்களென்று எல்லாருங் கொண்டாடிக் கொண்டு திருமாளிகையிலே யெழுந்தருள; பஹுநாளாயிற்று, அதிசீக்ரமாக வரவும் என்று அண்ணனுக்கு, ஜீயருடைய திருமுகம்வர, அண்ணனும் அந்தத்திருமுகத்தை சிரஸாவஹித்தருளிஉட்பட்டுக்கொண்டு ஸ்ரீபெரும்பூதூர் முதலான திவ்யதேசங்களை திக்குநோக்கி தெண்டன் ஸமர்ப்பித்துக் கோயிலுக்குப் புறப்பட்டு *பொன்னடிகாண்பதோராசையாய் அதித்வரையாக பயணகதிகளிலேஎழுந்தருளித் திருக்காவேரிக்கரையிலே யெழுந்தருள, கோயிலிலுள்ள பெரியோர்களெல்லாருங்கேட்டருளி மிகவுமுகந்திருக்க, பட்டர், கோயில்பரிகரமனைத்துடனே எதிர்கொண்டு திருமாளிகையிலே எழுந்தருளப்பண்ணிவைத்தார். ஜீயரும் அண்ணன் திருமாளிகையிலே எழுந்தருளியிருந்து அண்ணனை க்ருபைபண்ணியருளி திருவேங்கடமுடையான் பேரருளாளர் ப்ரஸாதங்களையும் அங்கீகரித்தருளி அவ்வவ்விடங்களிலுள்ள வைபவங்களைக் கேட்டருளி உகப்புடனே எழுந்தருளியிருக்கிறவளவிலே; ஸ்ரீவைஷ்ணவர்கள் பேரருளாளர், ஜீயருக்கு, "அண்ணன்ஜீயர்" என்று திருநாமம்ஸாதித்தபடியை விண்ணப்பஞ்செய்யக் கேட்டருளி மிகவும் உகந்து நம்முடைய மநஸ்ஸுக்குத் தக்கபடியாகபேரருளாளரும் தேவரீர்ஸம்பந்தந்தோற்ற அருளிச்செய்வதே! என்று அண்ணனைப்பார்த்தருளிச்செய்ய;ஸ்வதந்த்ரனுடைய அதிக்ரமணத்துக்குத் தடையுண்டோவென்று சிலவருளிச்செய்யப்புக;ப்ரதிவாதி பயங்கரமண்ணவும் "ஸ்ரீயப்பதி" என்னுமாப்போலே ஜீயருக்கு இதுவுமொரு திருநாமமென்ன, அவரை எல்லாருங் கொண்டாடினார்கள். பின்பு ராமாநுஜதாஸர், திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்துநிற்க அவர் திருமுடியிலே தம் திருவடிகளை நற்றரிக்க வைத்தருளி மிகவும் விசேஷகடாக்ஷம் பண்ணியருளினார். அவரும் வடதேசத்தி லெம்பெருமான்களுடைய ப்ரஸாதங்களை நாலு ஸ்ரீவைஷ்ணவர்களைக்கொண்டு எழுந்தருளப் பண்ணிக் கொண்டு அவற்றையெல்லாம் ஸமர்ப்பிக்க அங்கீகரித்தருளி விநியோகம் செய்தருளி தாமும் ஸ்வீகரித்தருளி பூர்ணமநோரதராய், வடக்கில் திருப்பதிகளெல்லாம் ஸேவித்தாயிற்றென்று ராமாநுஜதாஸரை நெருங்கத் தழுவியருளினார்.

அநந்தரம் அப்பாவை, ஊரேறவரும்படிக்கு அவர் திருத்தமப்பனார் ராமாநுஜதாஸர் திருக்கையிலே திருமுகம் வரக்காட்ட, அவரும் ஸேவாவிச்லேஷ பீருவாயிருக்க, அவருக்குத் தஞ்சமாகத் தம்முடைய விக்ரஹமாக ஒரு விக்ரஹத்தையும், திருவடிநிலைகளையும் திருவுத்தரீயத்தையும், ப்ரஸாதித்தருளினார். (ప్రీతః ప్రేషితవాన్ మునిర్వరవరో యస్మై ముహుః శ్రీముఖం ప్రాదాత్ స్వాంఘ్రి సరోజసజ్జసుభగం స్వీయాముపానద్యుగం । స్వీయం సున్దరము త్తరీయమమలం స్వాంమూ_ర్తి

మర్త్యమయీం తందేవేశగుహంభజేమశరణంసంసారసన్తారకమ్) என்று பின்புள்ளாரும் இவ்வர்த்தாந்தத்தை யநுஸந்திக்கும்படி அபிமாநித்தருள, பின்புளறும்பிஅப்பாவின் திருப்பேரனாரானபிள்ளையப்பாவும் இந்தவர்த்தாந்தத்தை அநுஸந்தித்தருளினாரிறே. அப்பாவும் ஜீயரநுமதிகொண்டு கோயிலினின்றும் புறப்பட்டு எறும்பியேற வெழுந்தருளி தம் திருத்தகப்பனாரையும் திருவடித்தொழுது அவருக்கு சுச்ரூஷித்துக்கொண்டிருந்து, (எண்டிசையுமறிய வியம்புகே - னொண்டமிழ்ச் சடகோபனருளையே) என்கிறபடியே ஜீயருடைய சேஷாக்ர்தித்வ லக்ஷமணுக்ர்தித்வப்ரப்ர்திகமான அப்ரதிமப்ரபாவத்தை, வரவரமுநிசதகம், வரவர முநிப்ரபந்தம், வரவரமுநி பஞ்சாசத், வரவரமுநி ஸ்தவம், வரவரமுநி மங்களாசாஸநம், வரவரமுநி கத்யம் முதலான ஹ்ர்த்யமான அநேகப்ரபந்தங்களாலே வெளியிட்டு உபகரித்தருளினார். அவ்வளவிலே வானமாமலை ஜீயரை வானமாமலை ஸ்ரீகார்யார்த்தமாக அனுப்பியருளவேணுமென்று ஸேனைமுதலியார் ஸ்ரீமுகம்வர, எதிர்கொண்டு சிரஸாவஹித்து உட்பட்டுக்கொண்டு அப்படியே ஸம்மதியாம்படி ஜீயர்நியமித்தருளி அவரையும் கூட்டிக்கொண்டு பெருமாள் திருமுன்பேசென்று இச்செய்தியை விண்ணப்பஞ்செய்து தாமும் திவ்யப்ரபந்தம் நாலாயிரத்திலே நிகம்நூறுபாட்டுக்ரமத்திலே நித்யாநுஸந்தாநமாக அநுஸந்திக்கிறது, அற்றைக்குத் திருமொழிசாற்றுமுறையாய், ''அணியார்பொழில்சூழ் அரங்கநகரப்பா'' என்று அநுஸந்திக்கிறவேளையிலே பெருமாளும் அப்படியே ஸம்மதித்து, தம்முடைய ஸந்நிதியிலே பூபாலராயனில் தட்டிலே யெழுந்தருளியிருக்கிற அரங்கநகரப்பனாகிய லக்ஷ்மீநாராயணனை நாம், வானமாமலை ஜீயருக்கும் உமக்குமாக வருகிறோமென்று வானமாமலைஜீயர் திருக்கையிலே எழுந்தருளப் பண்ணிக்கொடுக்க அவரும் ஜீயர் திருமுகமண்டலத்தைப்பார்த்து; (பெரியார்க்காட்பட்டக்கால் பெறுதபயன் பெறுமாறு) என்று விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் தீர்த்தம் திருப்பரியட்டம் திருமாலை அபயஹஸ்தம் முதலான வரிசைகளும் ஸ்ரீசடகோபனும் ப்ரஸாதமும் ஸாதித்து விடைகொடுத்தருள, ஜீயரும் மங்கள வாத்யங்களுடனே அரங்கநகரப்பனை எழுந்தருளப்பண்ணிக்கொண்டு மடத்திலே யெழுந்தருளி அமுதுசெய்தருளினவுடனே ஜீயரை வாழ்த்தி அரங்கநகரப்பனை ப்ரஸாதித்து வானமாமலைக்கு அனுப்பியருளினார்.

அநந்தரம், ஜீயரும் ஒருநாள் எல்லாரும் பேரோலக்கமாக ஸேவித்துக்கொண்டிருக்கச் செய்தே முதலிகளைக்குறித்து எல்லாருமறிந்தார்களேயாகிலும், ''தேவுமற்றறியேன் என்றிருக்கிற இருப்பு ஸ்ரீகோவிந்த தாஸரப்பனுக்கே யுள்ளதொன்றிறே'' என்று விசேஷாபிமாநம் செய்தருளி, (సాక్షాన్నారాయణో దేవః కృత్వా మర్త్యమయీం తనుమ్। మగ్నానుద్ధరతే లోకాన్ కారుణ్యాచ్ఛాస్త్రపాణినా) (ஸாக்ஷாந்நாராயணோதேவஃ க்ர்த்வாமர்த்யமயீம் தநும்

மக்நாநுத்தரதே லோகாந் காருண்யாச்சாஸ்த்ரபாணிநா) என்றும். ( జగతోహితచిన్తాయై జాగ్రతఃఫణిశాయినః | అవతారేష్వన్యతమం విద్ధి సౌమ్యవరం మునిం ) ( ஜகதோ ஹிதசிந்தாயை ஜாக்ரதஃபணிஶாயிநஃ - அவதாரேஷ்வந்ய தமம் வித்தி ஸௌம்யவரம் முநிம் ) என்றும் சொல்லுகிறபடியே தாம் பகவதவதாரமென்னுமிடம் தோன்ற "நாமேகிடீர் இவர்" என்றருளிச்செய்து தம்மழகிய மணவாளப்பெருமாளையும் அவருக்குத் திருவாராதநமாக ப்ரஸாதித்து ப்ராப்யைகநிஷ்டராக்கி யருளினர். அவரும், மோர்முன்னாக முப்பதுஸம்வத்ஸரம் தளிகைப்ரஸாதம் ஸ்வீகரிக்கப்பெற்று க்ருதார்த்தராய் ஸகலரஹஸ்யார்த்தங்களையும்கேட்டு ஜீயர் திருவடிகளை ஒருக்காலும் பிரியாதே, பிரிந்தாலும் இராத்தங்குமூருக்கும் போகாதே, நித்யஸேவை பண்ணிக்கொண்டிருந்தார். பின்பொருதிருவாடிப் பூரத்திலே, சூடிக்கொடுத்தநாய்ச்சியார் தீர்த்தப்ரஸாதங்களை போரஆதரித்துக்கொண்டுவந்து ஸமர்ப்பிக்க, ஜீயரும் அங்கீகரித்தருளி பெரியப்ரீதியோடே ஆண்டாளுக்கு உகப்பாக "பட்டர்பிரான் தாஸர்" என்று திருநாமம்ஸாதித்தருளினர். பின்பு கோவிந்த தாஸரப்பன், மஹாவிரக்தராய் ஆச்ரம ஸ்வீகாரஞ்செய்ய, "பட்டர்பிரான ஜீயர்" என்று திருநாமமாயிற்று. எம்பெருமானர் திருவடிகளுக்கு வடுகநம்பியைப்போலேயாய்த்து இவரும் ஆசார்ய நிஷ்டாக்ரேஸரரா யிருக்கும்படி. இப்படியான விவர்சரமபர்வநிஷ்டையை; மணவாளயோகி வாழ்ந்தருளுகிற காலத்திலே தணவாதவடிமை ஸகலகாலத்திலும் செய்தருள, (பட்டர்பிரான்ஜீயர்) என்றும், (தேவுமற்றறியேன்)என்றும், (భట్టనాథమునివరాభీష్టదైవతమ్)(பட்டநாத முநிவராபீஷ்டதைவதம்) என்றும், ( శ్రీమధురకవిచరితకారిమహితచారిత్ర శ్రీమాన్ భట్టనాథయతీశ్వరః (ஸ்ரீமதுரகவிசரிதகாரிமஹிதசாரித்ர ஸ்ரீமாநபட்டநாதயதீஶ்வரஃ) என்றும் அங்குத்தைக்கு அநதரங்கரானவர்கள் அருளிச்செய்தார்கள். இப்படி அந்திமோபாய நிஷ்டாக்ரேஸரராலேஸேவ்யமாநரா யெழுந்தருளியிருக்கிற ஸௌம்யஜாமாத்ருமுநிவர்யரான ஜீயரும், (அன்னையாய் அத்தனாய்) என்கிறபடியே தமக்குஸர்வவிதோத்தாரகபந்துபூதரான நம்மாழ்வாரை ஸேவித்துக்கொள்ளாயிற்று ஆகையால் தத்விஷயப்ரேமமதிசயித்து *தாய்நாடு கன்றுபோலே த்வரித்துக்கொண்டு பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்து அப்போதே திருநகரியேற வெழுந்தருளுவதாகப் புறப்பட்டு "கூடல்" என்கிறமதுரையிலே சென்று திருப்பல்லாண்டவதரித்த ஸ்தலமென்று உகந்தருளி, *மல்லாண்டதிண்டோள் மணிவண்ணனையும் திருவடித்தொழுது, (பல்லாண்டு பல்லாண்டு) என்று மங்களாசாஸநஞ்செய்தருளி அங்கே யெழுந்தருளியிருக்குமளவிலே, அத்தேசத்திற்கு அதிபதியான மஹாபலிவாணநாதராயன் வந்து திருவடிகளிலே ஆஶ்ரயிக்க அவனையும் விசேஷகடாக்ஷம்பண்ணி தாபபுண்ட்ராதி பஞ்சஸம்ஸ்கார யுக்தனாக்கி திருவடிகளுக்காட்படுத்திக்கொண்டு அற்றைக்கு, அங்கே

யெழுந்தருளியிருந்து பிற்றைநாள் அர்த்தராத்ரியிலே, (మణికాఞ్చనసఞ్ఛన్నాం శిబికాం తదధిష్ఠితామ్। అస్పన్దయన్తస్స్వస్కన్ధే కృత్వా కేచిత్ప్రతస్థిరే) (மணிகாஞ்சனஸ0சந்நா0 ஶிபிகா0த ததிஷ்ட்டிதாம்-அஸ்பந்தயந்தஸ்வஸ்கந்தே க்ர்த்வாகே சித்ப்ரதஸ்த்திரே) என்கிறபடியே அந்த ராஜாஸமர்ப்பித்த அநர்க்கமான நவரத்நகசித்ரமணீயாந்தோளிகையிலே ஏறியருளிப் புறப்பட்டு, மூடுபனியாகையாலே திருப்பல்லக்கை*குக்கூடவிட்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸ்ரீபாதந் தாங்கிக்கொண்டு எழுந்தருளாநிற்க, (ఛత్త్రం చిత్రం దధుః కేచిత్ చామరే దధిరే పరే। భృఙ్గారమపరే బిభ్రుః కాళాఞ్జీమపి కేచన॥ తత్పదాబ్జ రజస్స్పర్శపావనీమాత్మభావినీం। స న్తస్స్వన్ధారయన్తశ్చ మౌళినా మణిపాదుకాం। అగాయన్త గతశ్కేచిదథనాట్యన్తి కేచన) என்கிறபடியே சத்ரசாமராதிகள் தொடக்கமான கைங்கர்யோபகரணங்களை தரித்துக்கொண்டு பாடுவாராடுவார் *உகந்தாலித்துக் கேட்பாராய் ஸஸம்ப்ரமந்ர்த்த கீதத்துடனே அனைவரும் ஸேவித்துக்கொண்டுபோருகிறபடியைக் கண்டு இரவெல்லாம் அவஸரப்ரதீக்ஷராய் ஸபரிகரராய் ஜீயரறியாதபடி ஸ்ரீபாதம் தாங்கிக்கொண்டு இருகாதவழிஸேவித்துவர விடிந்தபின்பு வைகையாற்றின்கரையிலே அநுஷ்ட்டாநாளர்த்தமாக இறங்கியருளினவளவிலே ராஜாவும் கச்சைகட்டியுடுத்து ஸந்நத்தரரய் ஸ்ரீபாதம் தாங்கின வேஷத்தோடே வந்து திருவடிகளிலே ஸேவிக்க, ஜீயரும் அதுகண்டு இப்படி செய்வதே! என்று ஆஸ்சர்யப்பட்டருள, அப்போது அநுஷ்ட்டாநம்பண்ணுவதாக வெழுந்தருளியிருந்த "முத்தரசன்" என்கிற க்ராமத்தை அங்கீகரித்தருள வேணுமென்றபேக்ஷிக்க ஜீயருமவருடைய நிர்ப்பந்தத்துக்காக அந்த க்ராமத்தை அங்கீகரித்தருளி அன்றுதொடங்கி அந்தக்ராமத்திற்கு "அழகியமணவாளநல்லூர்" என்று திருநாமம் ப்ரஸாதித்துமஹாபலிவாணநாதராஜாவையும் மிகவு முகப்போடே அநுப்பியருளி, திருப்புல்லாணிவழியாக எழுந்தருளுமளவிலே முதலிகளும் தாமுமாக அத்வச்ராந்தராய் நிழல்தேடிவாராநிற்க, அங்கே ஸ்த்தாவரவிசேஷமாயிருப்பதொரு திந்த்ரிணீவ்ர்க்ஷம் நீரந்த்ரச்சாயாயுக்தமாய் நிற்கக்கண்டு அங்கேறவெழுந்தருளி அப்புளிநிழலிலேவிச்ரமித்து அத்வச்ரமம் தீர்த்துக்கொண்டு எழுந்தருளியிருக்க; முதலிகளெல்லாரும் இப்படி மஹோபகாரம் பண்ணின விதற்கு ஓருக்ர்பை பண்ணியருளவேணுமென்று ஜீயரை ப்ரார்த்திக்க, அவரும் ஸ்வக்ர்பாதிசயத்தாலே அந்தப்புளியை தந்திருக்கையாலே ஸ்பர்சித்து, "நாம்பெற்றபேற்றை நீயும்பெறக்கடவாய்" என்று அநுக்ரஹித்து எழுந்தருளினார். பின்பு அசிரேண அம்மரம் உலர்ந்திருக்கக் கண்டு முதலிகள், (స్థావరాణ్యపి ముచ్యన్తే) (ஸ்த்தாவராண்யபிமுச்யந்தே) என்கிற அர்த்தம் இவரிடத்திலே அந்வர்த்தஸித்தமிறே யென்று உகந்தருளினார்கள்.

## ௧௧௦ திருப்பாவை, ஸங்க்ராந்திச் சிறப்புக்களை நினைந்துவருந்தல்.

அநந்தரம், ஜீயரும் திருப்புல்லாணியேற வெழுந்தருளி புல்லாணி யெம்பெருமானைத் திருவடித்தொழுது, அங்குநின்றும் புறப்பட்டுப் பயணகதியிலே திருநகரியேறவெழுந்தருளி ஸேவாக்ரமம் தப்பாமல் அடைவே ஆழ்வாரையும் பொலிந்துநின்றபிரானையும் ஸேவித்து மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டு அங்கே அநேக ஆத்மாக்களை *திருத்தி திருமகள் கேள்வனுக்காக்கி திருவாய்மொழி முதலான திவ்யப்ரபந்தங்களையும் ப்ரவொதித்துநின்று, ப்ரதிதிநம் ஆழ்வார்திருமஞ்சனகாலத்தையும் மற்றதிவ்யோத்ஸவங்களையும் ஸேவித்துக்கொண்டெழுந்தருளி யிருக்க; இப்படி காலங்கழிந்து செல்லாநிற்கச்செய்தே மார்கழிமாஸம்வர, (எந்தையெதிராசர்சிறப்பை யெழிலரங்கர், சிந்தைமகிழ்ந்தமுது செய்ய, அந்தநிலை, என்னுள்ளஞ்சென்று நின்று மேவிக்கினி செல்வமின்றிப் பெற்றிலோம் செவிக்கியாம்) என்று எம்பெருமானார் திருப்பாவைச் சிறப்பை ஸேவிக்கப் பெற்றிலோமில்லையீ! என்று வெறுத்தருளியும், பின்பு ஸம்க்ரமணம்வர, (சீராரரங்கர்தந்தேவியரோடு சிறப்புடனே - யேராருமாறன் கலியனெதிராசனுமிவர்க்கும் - பாரோர் பகிழ்ந்தேந்துந் தட்டுக்கடனுடன் போற்றுமந்தப் - பேராரவாரத்தையின்று கண்டின்புறப் பெற்றிலமே) என்று அதற்கும் நொந்தருளி, பின்பு தைத்திருநாளை நினைத்தருளி, (தேவியருந் தாமுந் திருத்தேரின்மேலரங்கர் - மேவிவர விக்கிரமன்விதிதனிற் - சேவைசெயு - மந்தச்சுவர்க்கத்தை யநுபவிக்கப்பெற்றிலமே - யிந்தத்திருநாளிலேயாம்) என்றநுஸந்தித்து இப்படி பேரிழவோடே யெழுந்தருளியிருந்து நொந்து "அணியரங்கமாடுதுமோ" என்றும், (திருவரங்கப்பெருநகருட் டெண்ணீர்பொன்னி திரைக்கையாலடிவருடப் பள்ளிகொள்ளுங்-கருமணியைக் கோமளத்தைக்கண்டுகொண்டேன் கண்ணிணைகளென்றுகொலோ களிக்குநாள்) என்றும், "ஊரரங்கமேயென்பதிவள் தனக்காசை" என்றும் சொல்லுகிறபடியே அபிநிவேஶத்தைப் பண்ணிக்கொண்டு அதித்வரையுடனே ஆழ்வார் திருமுன்பேசென்று, (திருக்குருகைப்பெருமாடன் றிருத்தாள்கள்வாழியே திருவானதிருமுகத்துச் செவியென்றும் வாழியே-யிருக்குமொழியென்னெஞ்சிற் றேக்கினான்வாழியே யெந்தையெதிராசர்க்கிறைவனார்வாழியே - கருக்குழியிற் புகாவண்ணங் காத்தருள்வோன் வாழியே காசியிலாரியனைக் காட்டினான் வாழியே-வருத்தமறவந் தென்னை வாழ்வித்தான்வாழியே மதுரகவி தம்பிரான்வாழிவாழிவாழியே)என்றுமங்களாசாஸநம்பண்ணி ஸேவித்து, ஆழ்வாரநுமதிகொண்டு புறப்பட்டருளி அதித்வரையுடனே ஸ்ரீவில்லிபுத்தூரேறச்சென்று ப்ரவேசித்து, *பொங்கும் பரிவுடைய வில்லிபுத்தூர் பட்டர்பிரானையும் *வடபெருங் கோயிலுடையானையும் ஸேவித்து, நாய்ச்சியார் திருமாளிகையிலே சென்று புகுந்து * ஆழ்வார் திருமகளாராண்டாளையும் அன்புடனே அடிபணிந்து நிற்க, கோதையும் கோயிலண்ணருடைய திருவவதாரமன்றோ நீரென்று மிகவும் க்ர

பைசெய்தருள, ஆண்டாள் அருள்கொண்டு புறப்பட்டு *அழகனலங்காரன் மலையான திருமாலிருஞ்சோலைமலைநின்ற *சுந்தரத்தோளுடையனைபரம ஸ்வாமியையும் ஸேவித்து, அழகர் திருக்குறுங்குடிக்கு குடிவாங்கிப் புறப்பட்டெழுந்தருளுகையாலே அவ்விடம் அழகழிந்து, (நல்லதோர்தாம ரைப்பொய்கை நாண்மலர்மேற் பனிசோர - அல்லியுந் தாதுமுதிர்ந்திட் டழகழிந்தாலொத்ததாலோ - இல்லம் வெறியோடிற்றாலோ வென்மகளை யெங்குங்காணேன் - மல்லரையட்டவன் பின் போய் மதுரைப்புரம் புக்காள் கொலோ) என்கிறபடியே அழகழிந்திருக்கிற கோயிலைக்கண்டு, (పుత్రద్వయ విహీనంతత్) (புத்ரத்வயவிஹீநம்தத்) இத்யாதிப்படியே மிகவும் க்லேசித்து இவரும் உடையவரைப்போலே வேண்டும் பதார்த்தங்களை அழைப்பித்து பாங்காகச் சமைப்பித்து*நாறுநறும்பொழிலில்படியே அமுதுசெய்தருளப் பண்ணி, அதைக்கண்டருளினதற்குக் கைக்கூலியாக, (பின்னுமாளுஞ் செய்வன்),(உன்பொன்னடிவாழ்க) என்று மங்களாசாஸநம் பண்ணியருளி, பரமஸ்வாமியினுடைய திருமுகமண்டலத்தை ஸேவித்து (நங்கள் குன்றங் கைவிடான்) என்று ஆழ்வாரருளிச்செய்த *பொய்யில் பாடலை அங்வர்த்த ஸித்தமாக்கி யருளவேணுமென்று ப்ரார்த்தித்தருளி அங்குநின்றும் புறப் பட்டு, *மாலிருஞ்சோலைமணாளர் பள்ளிக்கொள்ளுமிடமான *திருவரங் கன் திருப்பதியைக் கிட்டினவாறே அங்குண்டானவர்களெல்லாரும் எதிர் கொண்டு ஸேவித்து, (వకుళధరసవిత్రీం యాతయస్మిౕ ధరిత్రీం మధుమథననివాసోరఙ్గమాసీదసారం । పునరపిసుసమృద్ధం భూయసా సంప్రవిష్టో వరవరమునివర్యో మానుషస్యా క్తి మేషః) என்று சொல்லி ப்ரீதராய் அவர்களையும் க்ர்பைசெய்து அவர்களுடனே கூட ப்ரதமம் எம்பெருமானாரைஸேவித்து அவர் புருஷகாரமாக ஸ்ரீரங்க நாய்ச்சியாரையும் பெரியபெருமாளையும் திருவடித்தொழுது அவர்கள் ப்ர ஸாதவிசேஷங்களையும் பெற்று மடமேயெழுந்தருளி, (రఙ్గేధామ్ని సుఖాసీనమ్) (ரங்கேதாம்நி ஸுகாஸீனம்) என்கிறபடியே திருமலையாழ்வாரிலே இனி தாகவீற்றிருந்து வ்யாக்யாநித்து அகிலரையும் ஆநந்திப்பித்துக்கொண்டு வாழ்ந்தருளாநிற்க,.(జయతుయశసాతుఙ్గంరఙ్గంజగత్రయమఙ్గళంజయతుసుచిరంతస్మిౕ భూమారమామణిభూషణమ్। వరదగురుణాసార్ధంతస్మైశుభాన్యభివర్ధయన్ వరవరమునిశ్శ్రీమాన్ రామానుజోజయతిక్షితౌ) என்கிறபடியே மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டு வாழ்ந்தருளுகிற காலத்திலே இவர் அழகருக்குப்பண்ணியருளின மங்களாசா ஸநம்பலித்து மீண்டு அழகர்குடிபுகுந்தருளி ஜீயருககுத் தந்திருமுகமெ ழுதி, "நாம் உம்முடைய நினைவின்படியேவந்து* நங்கள்குன்றங் கைக் கொண்டு குடிபுகுந்தோம், நம்வீட்டில் கார்யமாராய்ந்து நன்றாகநடத்தி யருளும்படி ஒருவரை வரவிடவேணும்" என்று வரக்காட்டியருள ஜீயரும் போர உகந்தருளி எதிராஜஜீயரென்னும் திருநாமமுடையராய் மஹா விரக்தராய் மங்களாசாஸநைகபரரா யிருக்குமவரை; அழகர் ஸ்ரீகார்யார்

த்தமாக வனுப்பியருள, அவரும் அங்கேசென்று அழகரைஸேவித்து ஆசார்யப்ரீத்யர்த்தமாக அனைத்தழகுங்கண்டருளப்பண்ணினாரிறே.

ஜீயரை ஆச்ரயித்த மஹாபலிவாணநாதரும் திருமலைத்தோழப்பரை க்கொண்டு *மாலிருஞ்சோலை மாலுக்கு ஸர்வவிதகைங்கர்யங்களும் செய்துபோந்தார். இவர்களாலே அழகர் கைங்கர்யம் ஸம்ர்த்தமாயிற்று இப்படி கோயில் திருமலைமுதலான திருப்பதிகளின் கைங்கர்யமெல்லாம் குறைவறக்கொண்டருளுகையாலே மிகவுமுகப்புடனே எழுந்தருளி யிருக்கும்காலத்திலே துளவருடைய வம்சத்திலே பிறந்தாரொருசிறுபிள்ளை திருவடிகளிலேவந்து ஆச்ரயிக்க அவனை விசேஷித்து க்ருபைபண்ணி யருளி, "ஸ்ரீராமாநுஜதாஸர்" என்று தாஸ்யநாமம் ப்ரஸாதித்து அவரை அநேகந்திருப்பதிகளில் கைங்கர்யமெல்லாங் கொண்டருளப் பண்ணும்படிக்கு விசேஷாபிமாநஞ்செய்தருள, அவ்விசேஷகடாக்ஷமடியாக பெருமாள்கோயில் தொடக்கமான திருப்பதிகளில் ஸ்ரீகார்யங்களெல்லாம் அவரைக்கொண்டு அருளப்பெற்றது. தாமும் திருநகரியினின்றும் எழுந்தருளினபின்பு, (దివ్యోత్సవ ప్రసక్తేషు దేవదేవమతన్ద్రితః । ఆశాసానస్సమాసీదన్నుద్రాక్షీద్రఙ్గభూషణం) என்கிறபடியே திவ்யோத்ஸவங்களிலும் நம்பெருமானை மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டு, (செந்நெலரிசிசிறுபருப்பு செய்தவக்காரம் நறுநெய்பாலால்) என்று சொல்லப்படுகிற அக்காரவடிசில்தொடக்கமான அநேகவகைத்தளிகைகளும்அமுதுசெய்தருளப்பண்ணிப்போருகிறத்துக்குமேலே,* ஒன்றும் தேவுச்சிறப்பும், கண்ணி நுண்சிறுத்தாம்புச் சிறப்பும், நூற்றந்தாதிச்சிறப்பும் ப்ரதிஸம்வத்ஸரம் பெருமாளும் நாய்ச்சியாரும் உகந்து அமுதுசெய்தருளும்படி நன்றாகநடத்திக்கொண்டு ஆழ்வார்களருளிச்செயல்களை வ்யாக்யாநத்துடனே அநுதிநம்அநுஸந்தித்துக்கொண்டு எழுந்தருளியிருக்கும் நாளிலே, பெரியாழ்வார் திருமொழிக்குபெரியவாச்சான் பிள்ளைசெய்தருளின வ்யாக்யாநம் காணாமையாலே அதற்கு வ்யாக்யாநஞ் செய்தருளத் திருவுள்ளமாய், (செந்தமிழிலாழ்வார்கள் செய்தவருளிச்செயலைச் - சிந்தை செயல் தன்னுடனே செப்பனுமாம் - அந்தோ - திருப்பாணாழ்வார்தாதர்நாயனார் சேர - இருப்பாராகில் நமக்கீடாவர்) என்று திருமுகம் போகவிட்டருள; அவரும், திருநகரியிலே தம் திருநந்தவநத்தி லிருக்கிறவரும் உகந்து ஸ்ரீஸூக்தியைக்கண்டு சிரஸாவஹித்து திருநந்தவநத்தினின்றும் அப்போதே புறப்பட்டு அதிசீக்க்ரமாக வெழுந்தருளிவந்து ஸேவித்துநிற்க, அவருடைய அத்வச்ரமத்தையும் ஸ்வவிச்லேஷத்தாலுண்டான பெருவிடாயையும் தத்[illegible]ஹத்திலே கண்டு "மிகவு மிளைத்தீரே" என்றுகுசலப்ரச்நம் பண்ணி குளிரகடாக்ஷித்தருளி, பிற்றைநாள் அவரையுங் கூட்டிக்கொண்டு நாலுபத்தளவாக நன்றாக வ்யாக்யாநஞ் செய்தருளி மற்றநாற்பதுபாட்டுக் களுக்கும் சேஷித்திருந்தபூர்வர்கள் வயாகயாநத்தை அழைப்பித்துஅத்

தோடு சேர்த்தருளியிருக்க, அதிபாலரான கந்தாடைநாயன் ஜீயருடைய திவ்யஸூக்தியையும் அபயப்ரதராஜஸூநு திவ்யஸூக்தியையும் ஆலோசித்து, அவற்றில் அபயப்ரதராஜஸூநு திவ்யஸூக்தியை கீழே ஒரு பீடத்திலே யிட்டு வைத்து, அபிராமவரயோகி திவ்யஸூக்தியை ஆதரேண ஆலோகித்துவருகிறவர், "இந்நாற்பது பாட்டுக்கும் சேஷியாதே முற்றப் போகாதொழிவதே!" என்ன; இத்தை மணவாளமாமுனிகள் கேட்டருளி, அதிபால்யத்திலே இவருக்கு இத்தனை ஜ்ஞாநபூர்த்தியுண்டாவதே! என்று உகந்து நாயனைப் பார்த்தருளி, ஒன்றைவிட்டு ஒன்றை ஆதரிப்பானேன், இங்ஙனமிருப்பதொன்றுண்டோ வென்று கேட்டருள; நாயனும் (மாம்பொழிற்றளிர்கோதிய மடக்குயில்வாயது துவர்ப்பெய்த - தீம்பலங்கனிதேனது நுகர்) என்றும சொல்லுகிறபடியே அஸாரத்தைவிட்டு ஸாரத்தைப்பற்றுகையன்றோ ஸாரஜ்ஞாக்த்யம், ஆகையாலே அதிலுமிது மஹாரஸவாக்யஜாலவத்தாயிருக்கிறதென்ன; ஜீயருமதுகேட்டாநந்தித்து இவரும் ஒரு அவதாரவிசேஷமென்று ஆலிங்கித்துக்கொண்டருளினர். (இவள்வாயன கள் திருந்த) என்கிபடியே நாலூர்பிள்ளை யிட்டருளின வயாக்யாநங்களெல்லாவற்றிலும் அதிசயித்திறே இவருடைய ஸூக்திவைபவமிருப்பது. இப்படி பெரியாழ்வார் திருமொழிக்கு ஸர்வஜநஹ்ருதயமாம்படி வயாக்யாநஞ் செய்தருளி திருப்பாணாழ்வார்ததர்நாயனருக்கு, பிள்ளை லோகாசார்யர் திருக்கை ஸ்பர்சமுடையராய், (శ్రీరఙ్గరాజచరణామ్బుజరాజహంసః)(ஸ்ரீரங்கராஜசரணாம்புஜராஜஹம்ஸ:) என்கிறபடியே தமக்குத்துணையாய் எழுந்தருளியிருக்கிற ஸ்ரீரங்கராஜரையும் திருவாராதநமாக ப்ரஸாதித்து விடைகொடுத்தருளினர்.

அநந்தரம் ஆசார்ய ஹ்ருதயத்திற்கு வ்யாக்யாநஞ் செய்தருளத் திருவுள்ளமாய் திருமேனியில் தௌர்ப்பல்யத்தையும் பாராமல் திருவணையிலே சாய்ந்தருளினபடியே திருக்கழுத்து நோவத் திருவெழுத்துச் சாத்தியருளும்படியை கந்தாடையண்ணன் கண்டு தேவரீர் இப்படி எதுக்காக ப்ரயாஸப்படுகிறீரென்ன, ஜீயரும் உம்முடைய புத்ரபௌத்ராதிகளுக்காகப் படுகிறேனென்றருளிச்செய்தார். அக்காலத்திலே பெரிய திருமலை நம்பி திருவம்சஸ்தரான ஏட்டூர் சிங்கராசார்யர் ஜீயருடைய அப்ரதிமப்ரபாவத்தைக்கேட்டு*பெருமையும் நாணும் தவிர்ந்து ஆகிஞ்சந்யாநந்யகதித்வங்களை முன்னிட்டு அநந்யசரணராய் அவர்திருவடிகளிலே ஆச்ரயிக்க அவரையும் க்ருபைசெய்தருளி தன்மூலமாக வந்த த்ரவ்யத்தையும் ஆழ்வார் திருநகரி கோபுர கைங்கர்யத்துக்கு திருநகரிக்குப் போகவிட்டருளினர். அக்கைங்கர்யம், சிறிது குறைவாகவிருக்க, பின்பு ஜீயர்நாயனர் அக்குறையைத் தீர்த்தருளி சிகரபர்யந்தமாக நிறைவேற்றியருளினர். பின்பு போளிபாக்கம் நாயனரை அழைப்பித்தருளி அவர்முகமாக, ஸப்தகோத்ர

நிபந்தனைசெய்தருளி அதில் இந்த ஏட்டூர் சிங்கராசார்யரையுங் கூட்டிக் கொண்டு அஷ்டகோத்ரஸங்க்யையாயிரும் என்று நியமித்தருளினர்.

பின்பு, ஜீயர் திருவடிகளை ஆச்ரயித்து *அதிகதபரமார்த்தராய் அநவரதஸேவைபண்ணிப் போரும் முதலிகள், (பாரருமங்கை திருவேங்கடமுனி பட்டர்பிரான்-ஆராமஞ்சூழ் கோயிற்கந்தாடையண்ண னெறும்பியப்பா - ஏராருமப்பிள்ளை யப்பிள்ளார் பரவாதி யண்ணனெனும் - பேரார்ந்த திக்கயஞ்சூழ் வரயோகியைச் சிந்தியுமே) என்று சொல்லப்பட்ட வானமாமலை ஜீயர், திருவேங்கட ஜீயர், பட்டர்பிரான் ஜீயர், கந்தாடையண்ணன், எறும்பியப்பா, அப்பிள்ளை, அப்பிள்ளார், ப்ரதிவாதிபயங்கரமண்ணு என்கிற அஷ்டதிக்கஜங்களுக்கும், திருப்பாணாழ்வார்தாஸர், ஏட்டூர்சிங்கராசார்யர், வரந்தரும் பெருமாள்பிள்ளை, மேனாட்டுத்தோழப்பர், அழகிய மணவாளப் பெருமாள்நாயனர், ஜீயர்நாயனர், அண்ணராய சக்ரவர்த்திகள் தொடக்கமானரும், (జగద్రక్షాపరోనన్తో జనిష్యత్యపరోమునిః। తదాశ్రయాస్సదాచారాస్సాత్త్వికాస్తత్త్వదర్శినః) (ஜகத்ரக்ஷாபரோநந்தோஜநிஷ்யத்யபரோமுநி: - ததாஶ்ரயா ஸ்ஸதாசாரா ஸ்ஸாத்விகா ஸ்தத்வதர்ஶிந:) என்கிறபடியே இவர்களெல்லாரும் ஸத்வோத்தரராய் ஸதாசாரநிரதராய் தத்வதர்சிகளாய் ஜகதுஜ்ஜீவனைகபரரா யிருப்பர்கள்.

இப்படிப்பட்ட திக்கஜங்களாலும் மற்றுமுள்ள முதலிகளாலும் ஸேவ்யமாநராயிருக்கிற ஜீயர் திருவடிகளிலே நித்யகைங்கர்யஞ்செய்யும்முதலிகளாரென்னில்; வானமாமலைஜீயர் *ஜீயரானவன்றுதொடங்கி *பிரியாதாள் செய்திருப்பர்; கந்தாடை அண்ணன், (రామానుజమునీన్ద్రస్య శ్రీమాన్ దాశరథిర్యథా) (ராமாநுஜ முநீந்த்ரஸ்ய ஸ்ரீமான்தாசரதிர்யதா) என்று உடையவர்க்கு முதலியாண்டானைப்போலே அத்யந்தப்ரீதிவிஷயபூதராய் பாதுகாஸ்த்தாநீயராயிருப்பர்; எறும்பியப்பா வடுகநம்பியைப்போலேதேவுமற்றறியாதே ஜீயருக்கு அத்யந்தாபிமதராயிருப்பர்; ப்ரதிவாதிபயங்கரஅண்ணு உடையவர் திருவடிகளுக்கு கூரத்தாழ்வானைப் போலே ப்ரதிபக்ஷநிரஸந பூர்வகமாக ஸ்ரீபாஷ்யத்திற்கு உசாத்துணையாயிருப்பர்; ஸேனைமுதலியாரண்ணன், சடகோபதாஸர், அப்பிள்ளை, திருப்பாணாழ்வார் தாஸர் இவர்கள், திருவாய்மொழிமுதலான அருளிச் செயல்களுக்கு உசாத்துணையாயிருப்பர்கள்; விசேஷித்து அப்பிள்ளை, ஜீயர் நியமனத்தாலே ஐந்து திருவந்தாதிக்கும் உரையருளிச்செய்து எதிராஜ விம்சதிக்கும் வ்யாக்யாநஞ் செய்தருளினர்; அப்பிள்ளார், மடத்தில் ஸர்வபரங்களையும் பரித்துக் கொண்டு தளிகைக்குப்பாங்காக அமுதுபடி, பருப்பமுது, கறியமுது, பாலமுது, நெய்யமுது, தயிரமுதுதொடக்கமானவை நடத்திக்கொண்டு போருவர்; பட்டர்பிரான் ஜீயர், எம்பாரைப்போலே ஸ்ரீபாதச்சாயாபந்ந

---

* "ஆச்ரயித்தவன்று தொடங்கி" எனறும் பாடம்.

ராய் பிரியிற்றரியாமையை முன்னிட்டு அடிமைசெய்து திருவடிகளையல்லது ஒருதெய்வமறியாதிருப்பர்; ஜீயர்நாயனார் இளவரசாய் எல்லார்க்கும் உத்தேஸ்யராய் திருக்குருகைப்பிரான் பிள்ளானைப்போலே அத்யாதரணீயராயிருப்பர். இப்படி இவர்களாலே ஸேவ்யமாநராயிருக்கிற வரவரமுநிவர்யரான பெரியஜீயர் ஜகத்திலுண்டான சேதநரெல்லாரையும் அர்த்தபஞ்சகநிஷ்டராயும் அந்திமோபாய நிஷ்டராயும் உஜ்ஜீவிக்கும்படிக்குத் திருத்திவாழ்வித்தருளி நாயனாருக்குத்திருவாய்மொழியீடும் ஸ்ரீபாஷ்யமும் விசதமாக ப்ரஸாதிக்கும்படி அண்ணனையும் அண்ணாவையும் நியமித்தருளி க்ர்தக்ர்த்யராய், (தென்னரங்கர் சீரருளுக் கிலக்காகப் பெற்றோம் திருவரங்கம் திருப்பதியே யிருப்பாகப்பெற்றோம் - மன்னியசீர்மாறன்கலை யுணவாகப் பெற்றோம் மதுரகவிசொற்படியே நிலையாகப்பெற்றோம்-முன்னவராநங்குரவர் மொழிகளுள்ளப்பெற்றோம் முழுதுநமக்கிவையே பொழுதுபோக்காகப்பெற்றோம்-பின்னையொன்றுதனிநெஞ்சம் பேராமற்பெற்றோம் பிறர்மினுக்கம்பொறாமையில்லாப் பெருமையும்பெற்றோமே) என்று இப்படி ஸ்வநிஷ்டாவிசேஷத்தை மதித்துக்கொண்டு அகாரணக்ர்பாபரிதஸ்வவிசேஷகடாக்ஷபாதேந, புளிமுதலானவர்க்ஷாதிகளும் உஜ்ஜீவித்து ஈடேறும்படி எழுந்தருளியிருந்தார். (యం యం స్పృశతి పాణిభ్యాం యం యం పశ్యతి చక్షుషా। స్థావరాణ్యపి ముచ్యన్తే కిం పునర్బాన్ధవా జనాః) (யம்யம்ஸ்ப்ர்ஶதிபாணிப்யாம் யம்யம்பஶ்யதிசக்ஷுஷா-ஸ்தாவராண்யபிமுச்யந்தேகிம்புநர்பாந்தவாஜநா:) என்கிற ஶ்லோகார்த்தம் இவரிடத்திலே அந்வர்த்தஸித்தமாய்பலித்தபடிகண்ட பின்பு மநுஷ்யரான ஜ்ஞாநிகளுஜ்ஜீவிக்குமது கிம்புநர்ந்யாயஸித்தமிறே.

இப்படி தம்முடைய திருவவதாரகார்யம் தலைக்கட்டினவாறே *அயர்வறு மமரர்கள்பதியான *மேலைவைகுந்தத்தில் சென்று *இமையாத கண்ணினராய் *ஆதியஞ்சோதி யுருவை அநுபவித்து அவ்வநுஜநித ப்ரீதிஉள்ளடங்காமல் அசேஷசேஷ வ்ர்த்திகளிலும் அந்வயித்து அடிமைசெய்யவேணுமென்கிற அபிநிவேசத்தையுடையராய் விண்ணுலகு செல்ல இசைந்திருக்குமளவில் திருமேனியிலே நோவுசாத்தி ஸஞ்சாரம் அன்றிக்கே மிகவும் தளர்ந்திருக்க; (திருநாளுக்காகத் திருவீதிபோந்தருளி நிற்கர் - வருநாளுமாற தெந்தைக்கின்று - பெருமாடன் - அந்தவடி...யோர்நாளுங்காணேனே - இந்தவுடம்போடினி*) என்னும் வேண்டுகோளோடே பெருமாள்ஸேவையை அபேக்ஷித்திருக்க, பெருமாளும் நானமுடித்து அலங்கரித்து ஒப்பித்துக்கொண்டு திருவீதியிலே புறப்பட்டருளி இவர்மடத்துவாசலிலே நெடும்போது நின்று ஸேவை ஸாதிச்சராக வாடிக்கிடந்தபயிரைத் தளிர்ப்பிக்கும்மேகம்போலே (தென்னரங்கர் கூப்பிடுவாருக்கும் தாமுமாகவந்து - என்னிடர்தீர்த்தாரிப்போது) என்று தம் அர்ச்சிராச் சேர்த்தியை அநுபவிப்பித்தருள; பின்னும் திருமேனி ஸ்ரீபாராய

இட்டகாவிட்ட வைகளாய் பரவசகாத்ராராயிருக்க, மீளவும் பெருமா ளெழுந்தருளி மடத்து வாசலிலேநின்றவன்று, (இந்தவுடல்நோய்வீழ்ந் தென்னை வல்வினையேன் *அந்தோவெனக்குத் தென்னரங்கா-இந்த வுடம் புடன்ஸேவை தனக்கென்றும் விரோதியாய் வன்பரையேதானினி *) என்று அநுஸந்தித்துக்கொண்டு திருக்கைத்தலத்திலே எழுந்தருளி ஸேவித்து பேரிழவாளராய், (பாராருமண்ண லிராமாநுசரீயர் - சீராருஞ் சேனை முதலியார்நாயனார் - ஆராத - அன்புடையவாத்தா னறிந்திலரே யென்னுடைய - துன்பமதைத் தீர்த்தருத்தான்) என்று அருளிச் செய்து, (தாய்மனநின்றிரங்கத் தனியேநெடுமால் துணையாப் போயின) என்றருளிச்செய்து வானமாமலை ஜீயர் முதலானார்க்கும் விண்ணப்பமென் றருளிச்செய்து திருமுகம்போகவிட்டருள; அவர்களும அநதஸ்ரீமுகத்தை சிரஸாவஹித்து ஶீக்ரமாகப்புறப்பட்டெழுநதருளிவநது திருவடிகளிலே ஸேவித்துக்கொண்டெழுநதருளியிருநதார்கள்; அவ்வளவிலே திருமேனி யில் நோய் விகல்பமின்றிக்கே சமித்திருக்க அத்தைக்கண்டு வானமாமலை ஜீயர், வானமாமலை ஸ்ரீகாரயத்வரையாலே தவரித்து மீண்டுவருகிறோம் என்றுவிண்ணப்பஞ்செய்ய, ஜீயரும் அவரைக் கடுகவாருமென்று அனுப்பி விட, பின்பு அவர் வடதேசதநேற வெழுநதருளினர்.

அவரெழுந்தருளினபின்பு சிலநாள்கழிநதவாறே ஜீயருக்கு முன்புண் டான *ப்ராப்யபூமியிலே ப்ராவண்யமும் த்யாஜ்யபூமியிலே ஜிஹாஸையும் அநுபவாலாபத்தில் ஆதமதரணு:யோக்யதையும் அத்யந்தம் அதிசயித்து வர, அதற்குமேலே தமககு ப்ராப்யரான உடையவா திருவடிகளிலே ப்ரா 'ண்யமதிசயித்து ததநுபவா:லாபத்தில் ஆர்த்தியும் அதிசயித்து அதடி ருக பரமபக்தி தலையெடுத்து அதினாலே நாள்தோறும் ஸ்வதசையடி தர்வருகிற ஸ்வாபேக்ஷிதங்களை அவர்திருமுன்பே விண்ணப்பஞ்செய்வா ஜ்ப் போருகிறவர், (வாழி யெதிராசன) என்றுதொடங்கி, (எம்பெருமா வர்திருவடிகளேசரணம்) (இராமாநுசாயநம) என்கிறதுநடுவாக, (இந்த மாகர்) என்று தலைக்கட்டாக அருளிச்செய்ய, அவை "ஆர்த்தி" னன் அறுபதுபாட்டாய் ஒரு ப்ரபந்தமாய்த் தலைக்கட்டிற்று. அந்த திருவசம் அவ்வளவிலே நில்லாதே பரவி, (எம்பெருமானார் தம்பிரா பர்கள்மவரை - நம்பெருமாள் தாமுகந்துநாடோறுந் - தம்பரமா - ஏறிட் தாதிக்கண்டளிப்ப ரெனறுமவர் தம்மை - வேறிட்டுத் தாங்கைவிடார்) செய்தருறுவதும், (பொல்லானிவனென்று போதிடென்றுநங்குரவ - ரெல் கொண்டீனயிகழ்ந்தாரோ - நலலார்கள் - வாழ்வான் வைகுந்தவான் பாலமுதுண்கூரத் - தாழ்வானிருந்திலனோவிங்கு) என்று கலங்குவதுமாய் போருவர்ஞ்ஜவியானவர்களை ஆராய்வதும், (ஆரியர்காளாழ்வீர்காளங்

* 'ஆர்த்திதருசரியான பாடத்தை கோசாந்தரங்களிலே கண்டுகொள்க.

ளுள்ள முத்தர்காள்-சூரியர்காள் தேவியர்காள் சொல்லீரோ - நாரணற்கு எங்களடியானிவனு மீடேறவேணுமென் - றுங்களடியாருமுள) என்று கடகர்பலரையும் பலகால் கால்கட்டி அர்த்திப்பதும், (தென்னரங்கன்றேவி சீரங்கநாயகியே மன்னுயிர்கட்கெல்லாம் மாதாவே - என்னையினி - இவ்வுலகந் தன்னிலிருந்து கலங்காமல் - அவ்வுலகில் வாங்கியருள்) என்றும் (சீரங்கநாயகியே தென்னரங்கனறேவி - நாரங்கட்கெல்லாநற்றாயே - மாருதிக்கு - வந்தவிடாய் தன்னையொரு வாசகத்தாற் போக்கினநீ - யென்றனிடர்தீராததென்) என்றும் மறுக்கவொண்ணாத மாத்ர்த்வஸம்பந்தத்தைச் சொல்லிமடிபிடிப்பதும், (இந்தவுடம்போடினி யிருக்கபபோகாதுன் செங்கமலத்தாள் தன்னைத்தந்தருள்நீ-அநதோ-மையார்கருங்கண்ணிமணவாளா தென்னரங்கா - வையாமலிருப்பாயேயிங்கு) என்று ஆர்த்தஹர்தயத்வ விசிஷ்டராய் அவர்திருமுனபே தம்முடைய ஆர்த்தியைச்சொல்லுவதும், (திருமாலடியார்தெய்வக்குழாங்களொடு) எனறும, (ஒருநாளாமோ ஆழ்வாரேதுன்னு புகழ்ககமலம்பாடினீரையோ வடியேனுமமிக்கமலஞ்சேர்காயம்விட) என்றும் (அடியார்கள்குழாஙகளை - உடன் கூடுவதெனறுகோலோ) என்றும் அர்த்தித்த ஆழ்வாரிடத்திலே ஸ்வரூபாநுரூபமானப்ராப்யத்தை அபேக்ஷிப்பதும், (இநதவுடமபோடிருவினையா லிவவளவும - உன்றனடி சேராதுழன்றேனே - யநதோ - அரங்காவிரங்காயெதிராசர்க்காக - இரங்காய்பிரானேயினி) (திருவரங்காவருளாயினியுன்றிருவருளாலன்றிக் காப்பரிதால்) என்கிறபடியே மீளவும் *மாங்களுமிரஙகும்படி அவர்க்கநதரங்கரை முன்னிட்டுக்கொண்டு அவரிரககத்தையிரப்பதுமாய், இப்படி ஒரு தேசவிசேஷத்திலே சென்றாலொழிய தரியாததசையையடைநது எழுந்தருளியிருக்க, அநததசையிலே தேசாந்தரஸ்த்தரான மேல்நாட்டுவர் தோழப்பரும் அவர்திருத்தமயனூரான அழகியமணவாளபபெருமாள் அவரும், பெருமாளைஸேவிபபதாகக கோயிலுககெழுநதருள, அவர்களை த்தென்மாடத் திருவீதியிலே பட்டர்பிரானஜீயர் கண்டருளி, ''நீங்களுங் எங்குநின்றும் எழுநதருளினீர்கள், எஙகேறப்போகிறீர்கள" எகள், கேட்க; அவர்களும் ஸஸாத்வஸவிநயராய ஸாஷ்டாங்கப்ரணமம் பஞ்சி உகப்போடே யதாமநோரதம்வர்த்தாநதத்தை விண்ணபபஞ்செயயித்து, படி ஜ்ஞாநபக்த்யாதிகள் வடிவிலே தொடைகொள்ளலாம்படி அநுகாண்டு யிருக்கிற நீங்கள் யதிவா புநரவதாரமான நமமுடைய பெரியஜீயமயமான விக்க வேண்டாவோஎன்றருளிச்செய்ய அவர்களும் அதற்கிசைநதுவடிகளே கூடவெழுந்தருள, (மணவாளயோகிதஞ்சமாம்மலர்த்தாளிணை காஅவசராக கிறபடியே ஜீயர்திருவடிகளை ஸேவிக்கப்பண்ண, அவ்வளவிலே கைகூப்பி (புரைகொண்டகோயில்மணவாளமாமுனிக்கண்ணருளே)எனறுமங்கில், அர்ச்சிவக்துபரிமளம்விஞ்சிப்புதுக்கணித்த, சீதக்கமலத்தை தீரேசதிப்பாராய் சிறந்தடியேன், எதத்தைமாற்றும் மணவாளயோகி யினிமைதர

கமலங்கள் கண்டேனெனக்குப்பயமில்லையே) என்றும்-வாசிககைங்கர்யமாக இந்தத்திருநாமத்தை விண்ணப்பஞ் செய்துகொண்டு திருவடிகளிலே ஸாஷ்டாங்கமாக தெண்டன்ஸமர்ப்பித்து நிற்க, ஜீயரும், அவர் அபேக்ஷித்தபடியே அமலமாக்கடாக்ஷித்தருளி அப்போது எம்பெருமானார் திறத்திற் சென்ற சிந்தையரானதாம் இவர்கள் என்றவாறே எம்பெருமானாருடையவிசேஷாபிமாநமுள்ள திருநாராயணபுரத்தை நினைத்து, அவர் அந்திமதசையிலருளிச்செய்தருளின (ల్లై పరంపరమువాచ వచాంసి యాని రామానుజార్యఖిలా తేషుచతుర్థ సిద్ధాం | శ్రీయాదవాద్రివసతిం నతిలం భజన్త స్సర్తే భవన్తి మమ సన్నతి మూలనాథః) என்கிறச்லோகத்தின்படியே திருநாராயண புரத்திலே நித்யவாஸம்பண்ணுவார் நம்முதலிகளிலே ஒருவருமில்லையோ என்று ஜீயரருளிச்செய்ய, அப்போது தோழப்பர் திருப்பரியட்டத்தை தலையிலே முடிந்துகொண்டு இந்தக்கைங்கர்யம் அடியேனுக்காகவேணுமென்று ப்ரார்த்திக்க, ஜீயரும் மிகவுமுகந்தருளி எம்பெருமானாருக்கும் நமக்கும் ப்ரியமாம்படி கிஞ்சித்காரபூர்வகமாக எதிராஜகுமாரரைஸேவித்து மங்களாசாஸநபரராய் நித்யவாஸம்பண்ணியிருமென்று நியமித்தருளினார். தத்ஸமயே ராமாநுஜபரிக்ரஹீதராய் திருமலைநல்லான் திருவம்சஸ்த்தராய் *இடங்கொள்சமயத்தையெல்லா மெடுத்துக்களைந்து ஸ்வமதஸ்த்தாபகராயிருக்கிற அண்ணராய சக்ரவர்த்திகள், ஸகுடும்பமாக பெருமாளை ஸேவிக்க வெழுந்தருளி கோயிலிலே பெருமாளை ஸேவித்துக்கொண்டெழுந்தருளியிருக்க, அப்போது ஜீயருடைய சரமதசையை தேசாந்தரஸ்த்தரோடும் தத்தேசியரோடும்வாசியற ஸர்வரும் குழாங்குழாமாகச்சென்று ஸேவித்து [illegible]ளுகிறபடியை அண்ணராய சக்ரவர்த்தி திருத்தாயார் ஆச்சிகண்டு [illegible]வ்விசேஷங்கேட்டு, அண்ணராயனே! நமக்கு ஜீயரை ஸேவிக்கவேண்[illegible]வாவென்ன, சக்ரவர்த்தியும் இசைந்து எல்லாரையுங் கூட்டிக்கொண்டு திரு[illegible]ர்மடத்திலேசென்று பட்டர்பிரான் ஜீயர்புருஷகாரமாக வந்துஸேவி[illegible] திருவடிகளிலே வேரற்றமரம்போலே விழுந்துகிடக்க, ஜீயர் நெடு[illegible]ரக அங்கீகரிக்கைக்கு விஷயங்காணுமையாலே முடங்கிக்கிடந்த திரு[illegible]ர் இப்போது இவரைக்கண்டு நிமிரப்பெற்று தந்திருவடித்தாமரை[illegible]இவர் திருமுடியிலேவைத்தருள, இத்தைக்கண்டு முதலிகளெல்லாரும் [illegible]டையபேறிருந்தபடி யென்னென்று உகந்தருளினார்கள். ஜீயரும் சக்ர[illegible]ளைக்குறித்து எம்பெருமானார்ஜீயரை திருவேங்கடத்ரோஹிகள் [illegible]ண்ணம் காத்துரக்ஷித்து நம்தர்சநவிஷயமாக அநேககார்யங்கள் [illegible]போந்தவரன்றோ நீர் என்று மிகவுமுகந்தருளி உமக்குத் தகுதி[illegible]யில்லையே, சற்று முந்துறச்சேரப் பெற்றிலீரில்லையேயென்று அரு[illegible]ம்குச்சு பட்டர்பிரான் ஜீயரைப்பார்த்து, வாரீர் கோவிந்தப்பதாஸரே [illegible]த்தருளி, (రామస్యదక్షిణో బాహుః) (ராமஸ்யதக்ஷிணோபாஹு:) [illegible] தக்ஷிணபாஹுஸ்த்தாநீயரன்றோ நீர், ஆகையாலே நாம்

செய்கிறதாகநினைத்து நம்ஸம்பந்தத்தை அபேக்ஷித்திருக்கிற இவர்களுக்கு பஞ்சஸம்ஸ்காரங்களையும் செய்யுமென்று அண்ணராய சக்ரவர்த்திகளையும், தோழப்பரையும், நாயனாரையும் அவர்கையிலே காட்டிக்கொடுத்து தர்சநப்ரவர்த்தகராம்படி திருத்துமென்று நியமித்தருள, அவரும் அப்படியே அவர்களை விசேஷகடாக்ஷம் செய்தருளினார். பின்பு அப்பிள்ளாரும் ஜீயர்நாயனாரும் ஜீயர் திருவடிகளிலே ஸேவித்து அடியோங்களுக்குத்தஞ்சமாக தேவரீருடைய அர்ச்சாரூபமான விக்ரஹம் வேணுமென்றபேக்ஷிக்க, அப்படியே அநுமதிபண்ணித் தம்முடைய திருக்கைச்செம்பையும் தமக்கு உபாதாநத்ரவ்யமாக்கியருள, அப்படியே அவர்களும் இரண்டு விக்ரஹம் ஏறியருளப்பண்ணிக்கொண்டு உகந்தருளினார்கள்.

—(ஜீயர், பகவத்விஷயமும், நாலாயிரமும் கேட்டருளியது.)—

பின்பு தனித்தனியே முதலிகளெல்லாருக்கும் வேண்டியஹிதங்களையெல்லாம் ப்ரஸாதித்தருளி *மேலிலங்குவானை *கலங்காப்பெருநகரியிற்சென்று *இமையாதகண்ணினராய் *வழுவிலாவடிமைசெய்யப் புறப்பட்டெழுந்தருள நாலுநாளென்னவே நாலாயிரமும் தொடங்கி நடத்துங்கோளென்று நாயனார்தொடக்கமானமுதலிகளுக்கு நியமித்தருள, அவர்களும் அப்படியேதொடங்கி அநுஸந்திக்க இவைகளையெல்லாம் திருச்செவி சாத்தியருளி ஜீயரும் உகப்புடனே மஸ்தகாஞ்சலியாய்ததர்த்தாநுபவபாரவஶ்யத்தாலே நிமீலிதாக்ஷயுகளராயிருக்க, (இப்போது திருவுள்ளத்திலோடுகிறதென்) என்று கந்தாடைபண்ணன்கேட்டருள, ஈட்டில் அர்த்தரஸம் தலைமண்டையிட்டுச் செல்லுகிறதென்றருளிச்செய்ய, அப்படியே நடக்கும்போது ஏகாதசிசென்று மற்றநாள் திருத்வாதசியிலே உத்தமநம்பி முதலான அனைத்துப்பரிகரத்தையும் அழைப்பித்து, ஸ்வாபராதங்களையும் பொறுத்தருளவேணுமென்று க்ஷாமணம்பண்ணிக்கொள்ள, அவர்களும் உமக்கோரபசாரமுண்டோவென்று அருளிச்செய்ய, மீளவும் அவர்களைக்குறித்துப் பெரியபெருமாளுடைய ஸ்ரீகார்யத்தைக் குறைவற நடத்திக்கொண்டும் ஸ்ரீவைஷ்ணவர்களை வரவணைத்துக்கொண்டும் போருங்கோள் என்றருளிச்செய்து போகவிட்டு, திருவாராதநம், ஸ்ரீகோசங்கள், மற்றுமுண்டான உபகரணங்கள், மடம்முதலானஎல்லாவற்றையும் (யஸ்யைதே தஸ்யதத்தநம்) (யஸ்யைதே தஸ்யதத்தநம்) என்னும்படி ஸமர்ப்பித்து, ஸ்ரீவைஷ்ணவர்களை அமுது செய்வித்து அவர்கள் தீர்த்தங்கொண்டு ஸ்வீகரித்து க்ஷாமணம் பண்ணிக்கொண்டருளி ஆதித்யாஸ்தமயமானவாறே தத்காலீந கர்மத்தையுஞ் செய்தருளி, "பிள்ளை திருவடிகளே சரணம்" என்று உச்சரித்து பிள்ளையை த்யாநித்துக்கொண்டு அவசராக அணையிலே சாய்ந்தருள; ஸ்ரீபாதத்து முதலிகளெல்லாரும் கைகூப்பி வணங்கிக்கொண்டு ப்ரஹ்மவல்லி, ப்ருகுவல்லி, சூழ்விசும்பணிமுகில், அர்ச்சிராதிகளை அநுஸந்திப்பாராய் நூற்றந்தாதியை அநுஸந்திப்பாராய்

பெரிய ஆரவாரத்துடனே செல்லுகிறவளவிலே, "அங்கயல்பாய் வயற் தென்னரங்கன்" என்கிற பாட்டை ஸ்ரீவைஷ்ணவர்கள் அநுஸந்திக்கக் கேட்டு தாமும் க்ருதாஞ்ஜலிபுடராய், "எம்பெருமானார் திருவடிகளே சரணம்" என்று அநுஸந்தித்து ததகதசித்தராய்த் திருக்கண்களைச் செம்பளித்துக்கொண்டிருக்க, இவர் (கனககிரிமேலே கரியமுகில்போல் விந்தை சிறுவன் மேற்கொண்டு) என்றும், (எந்தை திருவரங்க ரோரார்கருடன் மேல் - வந்துமுகங்காட்டி வழிநடத்த) என்றும் சொல்லுகிறபடியே *பெருமாளும் *செழும்பறவைதானேறித் திருவானதாளிணையை இவர்திருமுடியிலேவைத்து, *மஞ்சுயர் பொன்மலைமே லெழுந்தமாமுகில் போன்றவடிவை ஸாக்ஷாத்கரிப்பித்து அநுபவிப்பிக்க அநுபவித்து, (உன்சரணந் தந்தென் சந்மங்களையாய்) என்றும், (సుశ్లేమా ప్రకృతిం స్థూలసూక్ష్మరూపాం విసృజ్య)(ஸுக்ஷேமாம்ப்ரக்ருதிம் ஸ்தூலஸூக்ஷ்மரூபாம் விஸ்ருஜ்ய) என்றும், (கோய்களாலென்னை நலங்காமல் சதிராக வுன் திருத்தாள்தா) என்றும நிரதிசய போக்யமான திருமேனியை விடுவித்து அங்கீகரிக்கப் பெற்று, (மாதவன் தன்துணையா நடநதாள்) எனறும், (அரங்கத்துறயு மின்றுணைவனோடும் போய்) என்றுஞ் சொல்லுகிறபடியே ஸ்ரீயப்பதியான பெரியபெருமாள் பெரியதிருவடி மேற்கொண்டு ஹார்த்தன் வழிநடத்த ஸுஷும்நையாகிற வாசலிலே புறப்பட்டு சிரக்கபாலத்தை பேதித்து ப்ரஹ்மரந்த்ரத்தாலே ஜீயர் திருநாட்டுக் கெழுந்தருளினார். அநந்தரம் பெரியபெருமாளும், இளைய பெருமாள் அவதாரமான ஜீயரையும் வழிவிட்டுவந்து, இளைய பெருமாளைப் பிரிந்து ஒருபகலாயிர மூழியாய் அமுதுசெய்யாதே முசித்துககொண்டு பெருமாளிருநதாப்போலே இவரும் அமுதுசெய்யாதே முசித்து மூடிக்கிடந்தார். ஸ்ரீபாதத்து முதலிகளெல்லாரும் * ஐயோ கண்ணபிரானறையோ! அரவணைமேல் பள்ளிகொண்ட முகில்வண்ணனே! என்று பெருமிடறு செய்துகையெடுத்துக் கூப்பிட்டுக்கொண்டு விழுந்துதுடிக்க, அருகிலிருந்த முதலிகள் தேற்றத் தேறிநின்று இப்படியெழுந்தருளின அவருடைய அந்திமதசையை எல்லாரு மறிநது உஜ்ஜீவிக்கும்படி, (కుమ్భం భాస్వతి యాతి తత్సిత దినే పక్షే వళక్షేతరే ద్వాదశ్యాం శ్రవణర్క్ష భాజిరుధిరోద్గార్యాఖ్యసంవత్సరే । దీప్త్యాదిగుణార్ణవో యతివరాధీనాఖిలాత్మస్థితి శ్రీవైకుణ్ఠమకుణ్ఠవైభవమగాత్ శ్రీనారాయణో పయన్తా మునిః) (கும்பம்பாஸ்வதி யாதி தத்ஸிததினே பக்ஷே வளக்ஷேதரே த்வாதஶ்யாம் ஶ்ரவணர்க்ஷபாஜிருதிரோத்கார்யாக்ய ஸம்வத்ஸரே- தீபத்யாதி குணார்ணவோயதிவராதீநாகிலாத்மஸ்திதிஃ ஸ்ரீவைகுண்டமகுண்டவைபவமகாத் காம்தோபயந்தாமுநிஃ) என்று அங்குத்தைக்கு அந்தரங்கரானார்கள் அருளிச்செய்தார்கள். அவ்வளவு மன்றிக்கே, (ஆசிலாத மணவாள மாமுனி

யண்ணல் பூமியுறுவைப் பசியிற்றிரு மூலம் - தேசகாளதுவந்தந்தருள் செய்தகந்திருவாய்மொழிப்பிள்ளை தா-ளிசணுகியெழுபத்துமூவாண் டெவ்வுயிர்களையு முய்வித்து வாழ்ந்தனன் - மாசிமால்பக்கத்துவாதசி மாமணி மண்டபத், தெவ்வினன்வாழியே) என்றும் இப்படி அவர் *தோன்றியது முதலாக தன்னுலகம்புக்க தீருகப்பேசித் தலைக்கட்டினார்களிறே. அநந்தரம் ஜீயருக்குசரமகைங்கர்யம் செயவதாக முதலிகளெல்லாரையுங் கூட்டிக்கொண்டு ஜீயர்நாயனார் திருக்காவேரிக் கெழுந்தருளி நீராடி அலங்காரத்திருமஞ்சநம் கொண்டுவந்தருளி ஜீயரைத் திருமஞ்சநங் கொண்டருளப்பண்ணுவதாக ஒரு திருமஞ்சந வேதிகையில் விமலசரமவிக்ரஹத்தை யேறியருளப்பண்ணி புருஷஸூக்த்தாநு ஸந்தாநததாலும் த்வயாநுஸந்தாநத்தாலும் மறறுமுண்டான அநுஸந்தாநத்தாலும் திருமஞ்சநங்கொண்டருளப்பண்ணி திருவொற்றுவாடைசாத்தி *திருப்பரியட்டஞ்சாத்தி அலங்கரித்து த்வாதசோர்த்வபுண்ட்ரங்களை தரிப்பித்து தச்சேஷமான திருமண் ஸ்ரீசூர்ணங்களையெல்லாம் தங்களுக்கு ஆபத்தநமாகச் சேர்த்துவைத்துக்கொண்டு திவயஸிம்ஹாஸநத்திலே ஏறியருளப்பண்ணி அவர் திருவடிகளைக் கண்ணிலும் நெஞ்சிலும் ஒற்றிக்கொண்டு ஸ்வசிரோபூஷணமாக தரித்துக்கொணடு விமலசரம விக்ரஹாநுபவம் பண்ணிக்கொண்டிருக்க, அவ்வளவிலே *அரங்கத்தம்மானரைச் சிவந்தவாடையையும் *அவன மார்வணிநத வனமாலையையும் பொற்றட்டிலே வைத்துக்கொண்டு ஸகலவாத்யகோஷத்துடனே உத்தமநம்பி சிரஸாவஹித்துக்கொண்டு அனைத்துக கொத்துபரிகரததுடனே மடத்துவாசலிலே செல்ல, முதலிகளும் அவற்றை எதிர்கொண்டு தெண்டன ஸமர்ப்பித்து அங்கீகரித்து ஜீயருக்கு * பீதகவண்ணவாடையுடுத்தி, *தொடுத்த துழாய்மலர்சூடிக்களைந்தன சூடி அலங்கரித்து,கோயிலனைத்துப் பரிகரம், ஆசார்யபுருஷர்கள், ஜீயர்கள், ஏகாங்கிகள், ஸ்ரீவைஷ்ணவர்கள், சாத்தாத முதலிகள், மற்றுமுண்டானவர்களெல்லாருமகூடி ஜீயரைஸேவித்து எம்பெருமானுரை ஸேவியாத இழவெலலாந தீர்நதோமிவரை ஸேவித்து, இப்போது இவ்வவதாரமும் தீர்த்தம் *ப்ரஸாதித்துப் போவதே! என்று மிகவும் துக்காபிதப்தராய் சோகித்துப் பினபு அருகிருநத முதலிகள் தேற்றத் தேறிநின்று ஸநநிதியில் முதலிகளெல்லாரையுங் கூடடிக்கொண்டு யதாக்ரமத்திலே ஸ்ரீசூர்ண பரிபாலநத்தையும் நடத்தி தச்சேஷமான ஸ்ரீசூர்ண ப்ரஸாதங்களையும் தாங்களும தரித்துக்கொண்டு பின்பு *எண்ணெய்சுண்ணங்கொண்டாடி திவ்யாலங்க்ருதமான புஷ்பக விமாநத்திலே ஜீயரை யேறியருளப் பண்ணிவைத்து எலலாரும் ஸ்ரீபாதந்தாங்கிக் கொண்டு சத்ரசாமரதால வர்நதாந்திகள் புணிமாற மஹாஸம்ப்ரமத்துடனே மத்தளங்கள் ஸங்ககாஹளபேரிகள் ,தொடக்கமான ஸகலவாத்

யங்கள் கடல்போலேமுழங்க, (పతాకాధ్వజినీరమ్యాం తూర్యోద్ఘుష్టనినాదినీం | సిక్తాంజపథాంగమ్యాం ప్రకీర్ణకుసుమోత్కరాం ) என்கிறபடியே காவொத்தகமுகு, பல, கதலிச்சோலைகளாய் அரங்கன் திருவீதி யெட்டிலும் நாட்டி, மகரதோரணம் மேற்கொடிகளாடவென்றுஞ்சொல்லுகிறபடியே ஸர்வாலங்கார ஸம்பூர்த்தையான எட்டுத்திருவீதியிலும்கரும்பேந்தி நூற்றெந்தாதிமுதலாக அநுஸந்திக்க திருநீர்பரிமாறபொரியும் புஷ்பபுஞ்சமும்சிதற தர்சநத்தில்மணவாளமாமுனிகள் திருநாட்டுக்கெழுந்தருளினாரென்று ஒற்றைத்திருச்சின்னம்பணிமாறஸுமங்கலிகள் தீபமெடுக்க, திருவீதியிலே அங்குண்டானவர்களெல்லாரும் ஸேவிக்கஎழுந்தருளப்பண்ணிவைத்துக் கொண்டுபோய்மகிழாதிகேசவன் தன்னடிக்கீழாக வென்கிறபடியே ஆதிகேசவப்பெருமாள் திருவடிக்கீழாக அவன் திருவடிபிரியாவண்ணம் தவராசன்படுகையிலேவடபொன்னித் தென்பாலிலே எழுந்தருளப்பண்ண ஒருப்பட, அவ்வளவிலே பூதேவியானவள் முன்புஜநகராஜன் திருமகளைமடியிலே வைத்து அணைத்துக்கொண்டு ஆதரித்தாற்போலே அந்தமண்மகளான பிராட்டியும் மணவாளமாமுனியான இவரையும் மடியிலே எழுந்தருளப் பண்ணிவைத்துக்கொண்டுமகிழ, ஆளவந்தார் எம்பெருமானாரைப்போலேய திஸம்ஸ்காரவிதியடங்கச்செய்து கநித்துவாழும்படி திருப்பள்ளி படுத்தார்கள். அநந்தரம் ஜீயர்நாயனார், கந்தாடையண்ணனுள்ளிட்டமுதலிகளெல்லாரும்ஸ்வபோஷத்வாநுகுணமாக திருமுடிவிளக்கு வித்துக்கொண்டு பெருமாள் அவப்ருதங்கொண்டாடுமாப்போலே அவப்ருதங்கொண்டாடி மீண்டுமடத்திலேஎழுந்தருளி வெறித்தானமடத்தைக்கண்டு, (இலலம் வெறியோடிற்றாலோ) என்று ஆசார்ய விஸ்லேஷாஸஹிஷ்ணுக்களாய் மிகவும் க்லேசித்து தங்களிலே தேறிநின்று, (புண்ணாராக்கைதன்னுட்புக்குழலும் தீவினையேன் - தண்ணாருமென்கமலத்தா ளிணைவதென்று கொலோ - பண்ணாருநால்வேதம் பயின்றுய்யும்பண்டிதனே - மண்ணுளவந்த மணவாளமாமுனியே) என்று இத்யாதிகளான ஆர்த்தியை அவர்விஷயத்தில் விண்ணப்பஞ்செய்து திருமிடறுதழுதழுப்பத் திருமுத்துதிர்த்துதங்களிலேதேறிநின்று வித்தயுக்த ப்ரகாரேண செய்யவேண்டும் க்ர்த்யங்களை யெல்லாஞ்செய்து ஜீயர்வைபவத்திற்கு அநுகுணமாக பெருக்க திருவத்யயநம் நடத்தியருளி தீர்த்த ப்ரஸாதங்களும் ஸ்வீகரித்து பின்பு தந்தாமுக்குநியமித்தருளின கைங்கர்யங்களைச்செய்துகொண்டு போநதார்கள். அநந்தரம், (இக்ஷ்வாகூணாம் குலதநம்) என்னும்படியான பெரியபெருமாளும் ஜீயர்நாயனாருக்கு குலதநமாக ஸ்ரீரங்கராஜரையும் மடத்தையும் நோக்கிக்கொண்டு போருமென்று திருவுள்ளமாய் தீர்த்தம், திருமாலை, திருப்பரியட்டம், சடகோபன் எல்லாம் ஸாதித்து வாழ்வித்தருளினார். இத்தைக்கண்டு ஜீயருடைய அபிமாநாந்தர்ப்பூதரெல்லாரும் ஹர்ஷப்ரகர்ஷயுக்தராய் ஜீயர்நாயனாரை. பெரிய

ஜீயரைக்கண்டாப்போலேகண்டு அநுவர்த்தித்து ஸேவித்துக்கொண்டிருந்தார்கள். கந்தாடையண்ணனும் ஆசார்யநியமநத்தின்படியே ஆசார்ய பௌத்ரரான ஜீயர்நாயனாருக்கு திருவாய்மொழியினீட்டை ப்ரஸாதித்தருளினார். அநந்தரம், ப்ரதிவாதி பயங்கரம் அண்ணாவும் ஸ்வாசார்ய நியமனத்தின்படியே நாயனாருக்கும் கந்தாடைநாயனுக்கும் ஸ்ரீபாஷ்யம் ஸாதித்தருளி, பின்பு திருப்பதியே யிருப்பாக எழுந்தருளியிருந்த போளிபாக்கம் போரேற்றுநாயனார் தொடக்கமானவர்களுக்கு ஸ்ரீபாஷ்யத்தையும் திருவாய்மொழிநாயனாரென்று நிரூபகமாம்படி ப்ரஸாதித்தருளியும் பட்டர்பிரான் முனிபாத ஶேகரராய் தத்வஶ்யரான பரவஸ்து ஸ்ரீநிவாஸாசார்யருக்கும், ஸப்ரஹ்மசாரிகளான பரவஸ்து அழகிய மணவாள ஜீயருக்கும், திருவாய்மொழிநாயனாருக்கும், திருவாய்மொழியினீட்டை ப்ரஸாதித்தருளியும், ப்ரதிவாதிபயங்கரரென்னும் ப்ரஸித்தி தோற்ற ஸ்ரீராமாநுஜஸித்தாந்தத்தை ரக்ஷித்துக்கொண்டு போந்தார். அழகியவரதரான வானமாமலைஜீயர் வடதேசத்தினின்று மெழுந்தருளி ஜீயர்திருநாட்டுக்கெழுந்தருளின செய்தியை பெரியதிருமலையருகே கேட்டு மிகவும் ப்ரலாபித்தருளி திருமலையேறவெழுந்தருளிஅங்கேசிறிதுகாலம்பாடாற்றிக்கொண்டு எழுந்தருளியிருந்து கைங்கர்யார்த்தமாகக் கூட்டின த்ரவ்யங்களையும் கொண்டு கோயிலேற வெழுந்தருளி மடத்திலே சென்று போரக்லேசித்து ஜீயர் நாயனாரையும் ஸேவித்து உடனே வானமாமலையேறவெழுந்தருளி கைங்கர்யங்களையெல்லாம் தலைக்கட்டியருளி மீண்டு திருமலை நோக்கி எழுந்தருளி எறும்பியிலே சிலநாளெழுந்தருளியிருந்து பரமத்தஸத்வமண்ணனுக்கும் போளிபாக்கம் நாயனாருக்கும்திருவாய்மொழியின் ஈடுமுதலாக பகவத்விஷயங்களையும் ப்ரஸாதித்தருளி மீண்டு வானமாமலையேற வெழுந்தருளி தெய்வநாயகன் கைங்கர்யஸாம்ராஜ்யத்துடனேயும் பகவத்விஷயாநுஸந்தாந ஸாம்ராஜ்யத்துடனேயும் வாழ்ந்துகொண்டிருந்தார். பட்டர்பிரான்ஜீயரும் திருமலையிலே எழுந்தருளியிருந்து அண்ணராயச் சக்ரவர்த்தி, நாயனார், தோழப்பர் தொடக்கமான அநேகாத்மாக்களை இந்தத் தரிசந ப்ரவர்த்தகராக்கியருளி பரவஸ்து அண்ணரையும், பரவஸ்து அழகிய மணவாள ஜீயரையும், ஸத்புத்ர சிஷ்யர்களாக அபிமாநித்து ஸத்ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகராம்படி திருத்தியருளி அகிலாத்மாக்களும் உஜ்ஜீவிக்கும்படி (அந்திமோபாயநிஷ்டை) என்கிற சரமரஹஸ்யத்தை அருளிச்செய்து வாழ்வித்தருளியும், (எந்தை மணவாள யோகி யெனக்களித்த - அந்திமோபாய நிட்டையாமிதனைச் - சிந்தைசெய்திங் - கெல்லாரும்வாழவெழுதிவைத்தேனிப்புவியில் - நல்லறிவொன் றில்லாதநான்) என்று தமக்கு அதில் கர்த்ர்த்வராஹித்யத்தையும் அருளிச்செய்தாரிறே. ஆசார்ய பாதந்த்ரரான பட்டர்பிரான் ஜீயர் திருவடிகளிலே ஆச்ரயித்ததிருவரங்க

தாஸரான தோழப்பரும், அவர் திருத்தமையனாரான அழகிய மணவாள தாஸ நாயனாரும் ஜீயர் நியமநத்தின்படியே * அரங்கத்துறைவரநுமதியுடனே திருநாராயணபுரத்திலே எழுந்தருளி எம்பெருமானாருக்கும் செல்வப்பிள்ளைக்கும் திருநாராயணப் பெருமாளுக்கும் திருநந்தவநந் தொடக்கமான எல்லா வடிமைகளுஞ் செய்துகொண்டு அங்கே அநேகம்பேர்களையும் ஜீயரபிமாநாந்தர்ப் பூதராம்படி திருத்திக்கொண்டு ஸ்ரீசைலத்திற்கு மேற்கும் ஸ்ரீசைலேச தயாபாத்ர வைபவத்தை தவர் த்திப்பித்துக்கொண்டு எதிராஜர் மடப்பின்னடியிலே வாழ்ந்துகொண்டிருந்தார். பின்பு அவர்கள் ஸந்தாந பரம்பரையிலுண்டான ஐயனா முதலானாரும் அப்படியே அந்தக் கைங்கர்யங்களை அபிவர்த்தமாக நடத்திக்கொண்டு போநதார்களிறே. பின்பு அழகிய மணவாளதாஸரான எறும்பியப்பாவும் ஜீயர் திருநாட்டுக்கெழுந்தருளின செய்தியைக்கேட்டு ஆசார்யவிச்லேஷாஸஹிஷ்ணுவாய் பெருமிடறுசெய்து மிகவும் ப்ரலாபித்து சோகார்த்தராய், ஆர்த்தி மிகுந்து அவர்விஷயமாக அருளிச்செய்ததில் (ఐపురః సపది మదీయం వరవరమునివర్య మోచనీయమిదం । పరిచరతి న హి భవన్తం భగవదభిమతాం స్థితిం వినా హి) என்றும், (ఇతి పునరేవమిద న్నకిదురంతరతన్త్రారనిమ్న పథగాభిః । వరవరమునికరుణాం నిమ్నగే బతి న్యపతత్ స్వర్ణ శ్న్యతేయ యామాః ॥ ఆయురపహారతి జగతామయమనుయామ విలయమపి జగద్భ్యానః । మయి పునరిదంస్పృశంసే వరవరమునివర్య వర్ధయత్యేవ ॥) என்றும், (తదితః పరమను రూపం న విళంబితుమితి చిన్తయన్ ద యయా । శ్లేషాద్భుజనాన్ ఇతో మాం వరవరమునివర్య మాచయత్వరిల) என்கிறபடியே தம்முடைய ஆர்த்தியை ஆவிஷ்கரித்து, இனி குறைநுபவைகதத்பரராய் தத்ஸேவா பிநிவேசத்தையுடையராய் ஜீயரைப்பிரிந்து ஸம்ஸாரத்திலிருக்கு மிருப்பு பிராட்டி பெருமாளைப் பிரிந்து ராவணபவநத்திலே தனிச்சிறையிருந்தாப்போலே அதிதுஸ்ஸஹமாய், (பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்பும் இந்நின்றநீர்மையினியாமுறாமை) என்றும், (கூவிக்கொள்ளுங்காலமின்னங் குறுகாதோ) என்றும், (ஆவிக்கோர்பற்றுக்கொம்பு நின்னலாலறிகின்றிலேன்யான்) என்றும் சொல்லுகிறபடியே பெற்றல்லது தரிக்கவொண்ணாதபேரார்த்தியை யுடையராய் ஒருபகலாயிரமூழியாய் அவர் திருநாமந்தன்னையேபலகாலும் வாய்வெருவிக்கொண்டுமுன்னடிதோற்றாதே திகைத்து மதிமயங்கி, (உந்மத்தர்போற் பித்தேயேறி) என்னும்படி எழுந்தருளியிருந்தார் இப்படி ஆசார்யாபிமாநநிஷ்டராய் யதீந்த்ரப்ரவணரான ஜீயர் திருவடிகளே தஞ்சமென்றிருங்கோளென்று தந்தாம் சிஷ்யர்களுக்கு அருளிச்செய்தார்கள். மற்றுமுண்டானபேரும் தந்நிஷ்டராய் தத்ஸேவோத்ஸுகராய் வாழ்ந்துகொண்டிருந்தார்கள்.

யதீந்த்ரப்ரவணப்ரபாவம் முற்றிற்று.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

பிள்ளைலோகார்யஜீயர் திருவடிகளே சரணம்.

வர்த்தமான பிரபவ வருஷம் முதல் அக்ஷய வருஷம் வரையிலுமுள்ள தமிழ் வருஷங்களுக்குச் சரியான இங்கிலீஷ் வருஷங்கள்.

| | | |
|---|---|---|
| (1) | பிரபவ | 1927 - 1928 |
| (2) | விபவ | 1928 - 1929 |
| (3) | சுக்கில | 1929 - 1930 |
| (4) | பிரமோதூத | 1930 - 1931 |
| (5) | பிரஜோற்பத்தி | 1931 - 1932 |
| (6) | ஆங்கீரஸ | 1932 - 1933 |
| (7) | ஸ்ரீமுக | 1933 - 1934 |
| (8) | பவ | 1934 - 1935 |
| (9) | யுவ | 1935 - 1936 |
| (10) | தாது | 1936 - 1937 |
| (11) | ஈஸ்வர | 1937 - 1938 |
| (12) | பகுதான்ய | 1938 - 1939 |
| (13) | பிரமாதி | 1939 - 1940 |
| (14) | விக்ரம | 1940 - 1941 |
| (15) | விஷு | 1941 - 1942 |
| (16) | சித்திரபானு | 1942 - 1943 |
| (17) | சுபானு | 1943 - 1944 |
| (18) | தாரண | 1944 - 1945 |
| (19) | பார்த்திப | 1945 - 1946 |
| (20) | விய | 1946 - 1947 |
| (21) | ஸர்வஜித்து | 1947 - 1948 |
| (22) | ஸர்வதாரி | 1948 - 1949 |
| (23) | விரோதி | 1949 - 1950 |
| (24) | விக்ருதி | 1950 - 1951 |
| (25) | கர | 1951 - 1952 |
| (26) | நந்தன | 1952 - 1953 |
| (27) | விஜய | 1953 - 1954 |
| (28) | ஜெய | 1954 - 1955 |
| (29) | மன்மத | 1955 - 1956 |
| (30) | துர்முகி | 1956 - 1957 |
| (31) | ஹேவிளம்பி | 1957 - 1958 |
| (32) | விளம்பி | 1958 - 1959 |
| (33) | விகாரி | 1959 - 1960 |
| (34) | சார்வரி | 1960 - 1961 |
| (35) | பிலவ | 1961 - 1962 |
| (36) | சுபகிருது | 1962 - 1963 |
| (37) | சோபகிருது | 1963 - 1964 |
| (38) | குரோதி | 1964 - 1965 |
| (39) | விசுவாவஸு | 1965 - 1966 |
| (40) | பராபவ | 1966 - 1967 |
| (41) | பிலவங்க | 1967 - 1968 |
| (42) | கீலக | 1968 - 1969 |
| (43) | சௌமிய | 1969 - 1970 |
| (44) | சாதாரண | 1970 - 1971 |
| (45) | விரோதிகிருது | 1971 - 1972 |
| (46) | பரிதாபி | 1972 - 1973 |
| (47) | பிரமாதீச | 1973 - 1974 |
| (48) | ஆனந்த | 1974 - 1975 |
| (49) | ராக்ஷஸ | 1975 - 1976 |
| (50) | நள | 1976 - 1977 |
| (51) | பிங்கள | 1977 - 1978 |
| (52) | காளயுக்தி | 1978 - 1979 |
| (53) | சித்தார்த்தி | 1979 - 1980 |
| (54) | ரௌத்திரி | 1980 - 1981 |
| (55) | துன்மதி | 1981 - 1982 |
| (56) | துந்துபி | 1982 - 1983 |
| (57) | ருத்ரோத்காரி | 1983 - 1984 |
| (58) | ரக்தாக்ஷி | 1984 - 1985 |
| (59) | குரோதன | 1985 - 1986 |
| (60) | அக்ஷய | 1986 - 1987 |